புதுவைப் பல்கலைக் கழகத் தமிழியல் துறை வெளியீடு : 1

# உலக இலக்கியம்

க. நா. சுப்பிரமணியம்
வருகைதரு பேராசிரியர்
தமிழியல் துறை
புதுவைப் பல்கலைக் கழகம்
புதுச்சேரி.

புதுவைப் பல்கலைக் கழகம்
தமிழ் வெளியீட்டகம்
தமிழ்க்குடில்
தமிழியல் துறை
ஆர். வேங்கடராமன் நகர்
புதுச்சேரி 605 104.

**டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்**
*எம்.ஏ., பி.எல்., பி.டி., பிஎச்.டி.,*
**துணை வேந்தர்**
**புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி.**

# அணிந்துரை

அன்று ஒரு நாள்! அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எழுத்தாளர் மாநாடு நடந்து கொண்டிருந்தது. அருமை நண்பர் இணை வேந்தர் டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்களின் அழைப்பின் பேரில் இந்த மாநாட்டைத் துவக்கும் பெரும் வாய்ப்பைப் பெற்றேன். டாக்டர் அமுதசுரபி விக்ரமன் அவர்கள் தலைமை தாங்கினார்கள். நல்ல எழுத்துகளின் மேலும், எழுத்தாளர்களின் மேலும் ஆரா அன்பு கொண்ட நான் அந்தக் கருத்தரங்கில் பங்கேற்பதை ஓர் அறப் பணியாகக் கருதினேன். நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களிடையே ஒருவர், நட்சத்திரக் கூட்டங்களுக் கிடையே பளிச்சென்று தெரியும் துருவமாக என் பார்வைக்குப் பட்டார். தலை முழுதும் வெள்ளிக் கம்பிகளை அடரத் தொங்கவிட்டதைப் போல் நரை முடி, அகன்ற நெற்றி, முகத்தில் ஞான ஒளி, சற்றே கம்மிய நிறம், கூர்த்த கண்கள், அவற்றை அணைத்துக் கொண்டிருக்கும் எளிய கண்ணாடி, ஏறு போன்ற தொரு தோற்றம், தவிர அவர் எடுப்பாக அணிந்திருந்த மல்லிகைப் பூப்போன்ற வேட்டி, கண்ணுக்குக் குளிர்ச்சியான மெல்லிய வண்ணத்தில் கதர் ஜிப்பா, கையில் புத்தகம் மற்றும் அச்சுறுத்தும் கைத்தடி, இவைதாம் அறிஞர் க.நா.சு. அவர்கள்.

இவரேதான் அரை நூற்றாண்டாகத் தமிழ்ப் படைப்பு உலகத்திலும் திறனாய்வு உலகத்திலும் தம் அச்சமற்ற கருத்து களால் தனக்கான ஒரு தனி இடத்தைத் தேடிக் கொண்ட பெரியவர். ''மிக நன்றாகப் பேசினீர்கள். அகலிகை பற்றி நீங்கள் கூறிய உதாரணம் மிகப்பிரமாதம்'' என்றார்கள். நான், ''அன்று ஒரு அகலிகை இருந்தாள். இன்று பல அகலிகைகள் இருக்கிறார்களே'' என்றேன். மனம் திறந்து சிரித்தார்கள்.

அவரை முதலில் டில்லியிலும், பின்னர்ச் சென்னையிலும் பார்த்திருக்கிறேன்; பழகி இருக்கிறேன். எழுத்தாளர் களிடையே எல்லோரும் கண்டு அஞ்சும் சிம்மமாக அதேநேரத் தில் தளர்வுறு தோற்றத்துடன் அவர் அன்று நின்றபோது மன்னனுக்கு முன்னே, 'நீ புவிச்சக்கரவர்த்தி என்றால் நான் கவிச்சக்கரவர்த்தி' என்று முழங்கி நின்ற பழைய தமிழ்க் கவிஞனின் நிமிர்வும், செம்மாப்பும் எனக்கு நினைவிற்கு வந்தன. ஆனால் வயதின் முன்னேற்றம் அவரது நடையில் தெள்ளெனத் தெரிந்தது. இருப்பினும் சிங்கம் சிங்கந்தானே! வயதான போதிலும் ஏன் இச்சிங்கத்தைப் புதுவைக் கழைத்துப் பாது காக்கக் கூடாது என்ற எண்ணம் என்னுள் தோன்றியது.

இதன் விளைவு அறிஞர் க. நா. சு. அவர்கள் புதுவைத் தமிழியல் துறையில் வருகைதரு பேராசிரியராக என்னால் அமர்த்தப்பட்டார்.

மகாகவி பாரதி, பாவேந்தர் பாரதிதாசன், மகான் அரவிந்தர் வாழ்ந்த புதுவை மண்ணில் உருவான புதிய புதுவை மையப் பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தராக என்னைப் பாரதப் பிரதமர் அவர்கள் நியமித்தார்கள். சட்டதிட்டச் சிறைக்குள்ளும், அரசாங்க விதிக்குள்ளும் சிறைப்படாமல், பிறரையும் சிறைப்படுத்தாமல் அறிவு உலகில் உண்மை வளர்ச்சிக்காக, தன்னிச்சையாக, சுதந்திரமாக இயங்கத் தகும் பல்கலைக் கழகம் ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற என்னுடைய நெடுங்காலக்கனவு இன்று நனவாயிற்று. நாளந்தா போல் புதுவைப் பல்கலைக் கழகம் ஒரு புதுமைப் பல்கலைக் கழகமாக அமைய அன்னையின் ஆசியுடன் என் பணியைத் துவக்கினேன். சாதனை செய்யும் எவரையும் இந்தச் சாதனை மண்ணிற்கு அழைக்க வேண்டும் என்ற ஆவல் என்னுள் எழுந்தது. அதன் விளைவுதான் க. நா. சு. அவர்கள் புதுவைப் பல்கலைக் கழகத்திற்குச் சிறப்புப் பேராசிரியராக வந்தமை ஆகும். அவரைத் தொடர்ந்து கரிசல் இலக்கிய மன்னர் திரு. கி. ராஜநாராயணன் (கி. ரா.) அவர்களும் வருகைதரு பேராசிரியராக வந்துள்ளார்கள்.

அறிஞர் க. நா. சு. அவர்களைப் பேராசிரியராக அமைத்த ஞான்று அவர் என் விருந்து அழைப்பை ஏற்று என் வீட்டிற்கு வந்து என்னுடன் இனிய உணவுண்ட காலை, "ஆசிரியரைப் பேராசிரியராக ஆக்கிவிட்டீர்கள்" என முகமலர்ந்த போது,

நான் கூறிய ஒரே பதில், ''பேராசிரியர் அவர்களே, இது என் பேறு, பெறற்கரிய பேறு'' என்பதுதான்.

உலக இலக்கியங்களைப் பற்றி அவர் ஒரு வாரத்திற்கு மேலாகப் புதுவைப் பல்கலைக் கழகப் பொதுநூலக அரங்கில் நிகழ்த்திய கருத்துப் பொழிவுகள், அதனைப் பற்றிய வாசகர்களின் நல்வாக்குகள், ஞானபூமிக்கு ஒரு ஞானியைக் கொண்டு வந்த மகிழ்ச்சியையும், நிறைவையும் எனக்கு நல்கின. அவர் என்னைச் சந்திக்கிற போதெல்லாம் நூல்களைப் பற்றியும், இலக்கிய அரங்குகளைப் பற்றியும் சிந்திக்க வேண்டிய செய்திகளைப் பேசுவார். தமிழில் அரியன செய்ய வேண்டும் என்ற ஆராத் துடிப்பு உடையவர். தமிழினுடைய உண்மைச் சிறப்புகளைத் தம்முடைய அழகான ஆங்கில எழுத்துகளால் தமிழ் பேசும் உலகிற்கு வெளியே இந்திய மாநிலங்களிலேயும், உலக நாடுகளிலேயும் பரப்பியவர். அவர் பார்க்க அடக்கமானவர். ஆனால் பல மொழிகளை நன்கு அறிந்த மேதை. எழுத்தில் சாரமும் இருக்கும்; காரமும் இருக்கும். தனிமையாகப் பழகும் போது கடற்கரை ஓரத்துக் காற்றை வாங்குவது போல அவர் பேச்சில் இனிமையும் குளுமையும் வீசும். நேரில் உரையாடும் போது யாரையும் காயப்படுத்தும் படியாகச் சொற்களை வீசமாட்டார். நேசப் பேச்சு மட்டும் அல்ல, நேச நெஞ்சம் வாய்த்த நேயர் அவர். தேவையானால் வாளையும் ஏந்தத் தயார் அவர்.

அவருடைய எழுத்துகள் தினமணி நாளிதழிலும், இன்னபிற ஏடுகளிலும் வந்த போது அவற்றை முதலாவதாகப் படித்து வந்த இரசிகன் நான், அவர் நூல்கள் பலவற்றை முதற் பிரதியாக வாங்கிப் படித்தவன். எனவேதான், அவர் கடைசிப் படைப்புகள் அச்சு உருவில் வந்து அனைத்து உலகிற்கும் பயன் பட வேண்டும் என்று விரும்பினேன். அவருடைய விருப்பமும் அதுதான். குறுகிய காலமே புதுவைப் பல்கலைக் கழகத்தில் இருந்த போதிலும் அவர் ஆற்றிய பணி பலப்பல.

வியாழக்கிழமை தோறும் 'உலக இலக்கியங்கள்' பற்றிய நம் கண்ணுக்குத் தெரியாத—காதுக்கு எட்டாத, புதுப்புதுச் செய்திகளைப் புதுவை வாழ் அன்பர்கட்கு வழங்கி வந்தார். எம். ஏ. செயல்முறைத் தமிழ் வகுப்பில் பயிலும் மாணாக்கர்களுக்கு அவர் தொடர்ந்து இந்திய இலக்கியப் பார்வையையும் உலகப் பொது இலக்கியப் பார்வையையும் அளித்து வந்தார். அவரைச் சந்திக்கப் போந்தவர்கள் அவரிடம் உள்ள புத்தகக் குவியலைப் பார்த்திருப்பார்கள். அவரிடம் கேட்கப் போனவர்கள் அவர் சாதாரணமாக வாயில் நுழையாத உலக இலக்கிய

மேதைகளின் பெயரைச் சற்றும் பிறழாமல் சொல்லும் இலக்கிய விசாரங்களைக் கேட்டிருப்பார்கள். எந்த மொழி மீதும், எவர் மீதும் அவருக்குத் துவேஷம் இல்லை. அதே சமயத்தில் தமிழ் மொழி மேல் அவருக்கு அயரா அன்பு இருந்தது. சிலப்பதிகாரக் காப்பியத்தின் ''ஒரிஜினாலிட்டியை'' அவர் வான் உயர, வாய் மணக்கப் பேசுவார். திருவள்ளுவ மேதையின் தத்துவத்தைச் சொல்லிக் கொண்டே இருப்பார்.

சுருங்கச் சொல்லின் அவர் ஓர் இலக்கியக் கலைக்களஞ்சியம். அத்தகு கலைக்களஞ்சியம் நம்மை விட்டு நிலையாக மறைந்த போது, மறையாது திகழ்வனவற்றை இந்தப் பல்கலைக் கழகத்திற்கு நல்கி விட்டுப் போனார். என்னிடம் அவர் வந்து இந்தக் கையெழுத்துப் பிரதிகளை அளித்த போது என் கண்களில் நீர் மல்கியது. ''தங்கள் ஆசி வேண்டும்'' என்று வணங்கினேன். ''என்றும் உண்டு, என்றும் உண்டு'' என்று கூறிக் கொண்டே அவர் நீங்கிய காட்சி மனத்துள்ளே இன்றும் இருக்கிறது. நல்ல வேளை, மனத்துக்கு வயிற்றைப் போல் சீரண சக்தி இல்லை.

அவர் என்னிடம் புதுவைப் பல்கலைக் கழகப் பதிப்புகளாக வர வேண்டுமென விரும்பி அளித்த ஏடுகளான 'உலகஇலக்கியம்' 'பாரதியின் காட்சி' ஆகிய இரண்டும் அவர் வாழ்வில் கடைசியாக எழுதியவை என எண்ணுகிறேன். எனவே மிகச் சிறந்தவை இவை.

மகான் அரவிந்தர் தத்துவங்களை எல்லோர்க்கும் வழங்கி யாவர்க்கும் ஆசானானார். உலக இலக்கியத் தேனை மாந்தி எடுத்து நமக்கு வழங்கிய தமிழ்த் தும்பி அவர். அதேபோல் தமிழ் இலக்கியத்தின் பெருமையை உலகிற்கு எடுத்து வழங்கிய வள்ளல் அவர்.

அந்த அமரரின் இறவாப் புகழுடைய கடைசி நூல்களை வெளியிடுவதில் புதுவைப் பல்கலைக் கழகம் பெருமிதம் கொள்கிறது. பெறற்கரிய இக்கொடையைப் பெற்றமைக்காகப் பல்கலைக் கழகச் சார்பில் அன்னாருக்கு அஞ்சலி செலுத்துகிறேன்.

இடம் : புதுச்சேரி
நாள் : 16-10-1989* **கி. வேங்கடசுப்பிரமணியன்**

---

* பல்கலைக்கழக நான்காவது நிறைவாண்டு நாளன்று மத்தியக் கல்வி இணை அமைச்சர் மாண்புமிகு லலித்தேசுவர் பிரசாத் சாகி அவர்களால் நூல்கள் வெளியிடப்பட்டன.

**க. ப. அறவாணன்**
*தமிழியல் துறைத் தலைவர்*

**ஓருலக இலக்கியவாதியின்
உலக இலக்கியம் பற்றி...**

# பதிப்புரை

அறிஞர் க. நா. சு. படைப்பு உலகிலும், படிப்பு உலகிலும் ஓர் இமயம். அம்மட்டுமல்லாமல் பண்பு உலகிலும் அவர் ஓர் இமயம் என்பதை அவர் புதுவைக்கு வந்த போதும், எங்களோடு பழகிய போதும் நாங்கள் உணர்ந்து கொண்டோம். இதற்கு முன்பு பல்கலைக் கழகங்களில் பணியாற்றாதவர். ஆனால், பல்கலைக் கழகங்கள் எல்லாம் சேர்ந்து செய்ய முடியாத பணிகளைச் செய்த ஒரு பல்கலைக் கழகமாக அவர் விளங்கினார். அரை நூற்றாண்டுக்கு மேலாக இந்திய இலக்கிய உலகிலும், தமிழ்நாட்டுத் திறனாய்வு உலகிலும் க. நா. சு. பெற்றிருந்த இடம் யாராலும் மறக்க முடியாதது; மறுக்க முடியாதது; அவர் மறைவிற்குப் பிறகு எவராலும் நிரப்ப முடியாதது. அவர் மொழி அறிவு, ஆங்கில மொழியில் சொல்லாண்மை, படைப்புத் திறமை அவரை இலக்கிய உலகிற்காகவே காணிக்கையாக்கி விட்டன. எந்த அலுவலகத்திலும் சிக்காமல் இலக்கிய வனாந்தரத்திலே தன்னை இன்பச் சிறைப்படுத்திக் கொண்டவர் க. நா. சு.

க. நா. சு.வின் அருமையையும், பெருமையையும் அறிந்தவர் நம் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியன் அவர்கள். புதுவையில் அமைந்த புதுப் பல்கலைக் கழகம் டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன் அவர்களின் வரவால் புதுமைப் பல்கலைக் கழகமாக மலர்ந்தது. இந்த மலர்ச்சிக்கும், வளர்ச்சிக்கும் தாயும் தந்தையும் அவரே ஆவார். காலம் தாழ்த்தாமல் காலம் கருதி முடிவு செய்வதிலும், அதனைச் செயல்படுத்துவதிலும் தெளிவும், துணிவும் வாய்த்த நம் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்கள் பல்கலைக்கழக எல்லைக்கு அப்பால் இருந்த க. நா. சு. அவர்களைப் பேராசிரிய

ராக அமர்த்துவது என முடிவு எடுத்தார். எனவே க. நா. சு. அவர்கள் புதுவைக்கு வரும் நாள் எங்கள் பார்வையில் ஒரு திருநாளாக இருந்தது. அவர் வழங்கிய உரைகளை மாணாக்கர்கள் மட்டுமின்றி, ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், புதுவைவாழ் பொது மக்கள் அனைவரும் கேட்டனர். அன்றியும், அவர் காரைக்காலில் இடம் பெற்றுள்ள புதுவைப் பல்கலைக் கழக மையத்தில் ஆற்றிய உரைகள் அப்பகுதி மக்களாலும், எப்பகுதி மக்களாலும் இனிதே வரவேற்கப் பெற்றன. எனவேதான், அவர் முழங்கிய உலக இலக்கியப் பேருரைகள் காற்றில் கலந்து, காலத்தில் அழிந்து விடக் கூடாது என்று கருதினோம். அறிஞர் க. நா. சு. அவர்கள் தம் ஒரு கண் பார்வையை வைத்துக் கொண்டே ஆயிரக்கணக்கான நூல்களைக் கற்று, நூற்றுக்கணக்கான பக்கங்களில் ‘உலக இலக்கியங்கள்’ என்ற இந்தப் பேரேட்டை வரைந்துள்ளார். அவர் இந்நூலில் வழங்கியுள்ள செய்திகளில் சில நம்முடைய பார்வைக்கும் பாராட்டுதலுக்கும் உரியன.

தற்காலத் தமிழ் இலக்கியத் துறையில் ஆய்வு செய்ய முன் வரும் ஆர்வலர், இந்நூலைப் படிப்பதோடு மட்டுமின்றி, தம் ஆய்வில் குறிப்பிடாமல் இருக்க முடியாது என்று சொல்கிற அளவிற்குத் தொடக்கம் முதல் இன்று வரை உள்ள உலக மொழி இலக்கியங்களை அறிமுகப்படுத்தும் போக்கும், அவ்விலக்கியங்கள் பற்றிய திறனாய்வுப் போக்கும் ஒருங்கே கொண்டு விளங்கும் சிறந்த நூல் இது. க. நா. சு. அவர்களின் பரந்து பட்ட அறிவுப் போக்கிற்கும், கடுமையான உழைப்பிற்கும் மற்றொரு சான்று இந்நூல்.

தலைசிறந்த படைப்பாளியாகவும், எவர்க்கும் அஞ்சாத திறனாய்வறிஞராகவும் விளங்கிய க. நா. சு. அவர்கள், படைப்பின் முழுமை பெற்ற உண்மைகளைப் பட்டறிவில் கண்டு தெளிந்து நமக்குப் பிழிந்து தந்திருப்பது க. நா. சு. வின் முத்திரை. இன்று பலர் செய்வது போலப் போகிற போக்கில் ‘அபிப்பிராயமாக’ச் சில சொற்களை உதிர்த்தால் போதும் என்று நினைக்காமல் க. நா. சு. அவர்கள் உலக இலக்கியங்கள் குறித்து ஆழமாகவும், நுட்பமாகவும் ஆய்ந்து விளக்குவதைக் கண்டு நாம் அனைவரும் இறும்பூதெய்தலாம்.

உலக இலக்கியங்களை வெவ்வேறு கோணங்களில் திறனாயும் இந்நூலில், உலக இலக்கிய வகைகள் குறித்தும், அவற்றின் தனித் தன்மைகள் குறித்தும் அறிந்து கொள்ளும்

அரிய செய்திகள் பல இடம் பெற்றுள்ளன. உலகம், நாடு, இனம், மொழி, பண்பாடு, நாகரிகம் இன்ன பிறவற்றால் பல்வேறு வேறுபாடுகளைக் கொண்டதாக இருந்தாலும், இலக்கியப் பார்வையில் பொதுப் பண்புடையதாக விளங்குகிறது என்ற உண்மையை இந்நூற் கட்டுரைகள் உறுதிப்படுத்துகின்றன. ஒருலக மனப்பான்மையை உருவாக்குவதே உலக இலக்கியக் கொள்கையின் தலையாய பண்பு என்பதனை இந்நூல் குறிப்பாக உணர்த்துகிறது.

இந்நூலின் பகுப்பு முறையில் ஆசிரியர் எடுத்துக் கொண்டுள்ள கவனம், கருத்துகளைத் தெளிவாக வெளிப்படுத்துவதற்குக் களம் அமைத்துத் தருகிறது. உலக அளவில் கிரேக்க, உரோம, ஜப்பானிய, பிரஞ்சிய, உருசிய, ஆங்கில, அமெரிக்க இலக்கியங்களின் போக்குகளைச் சுட்டிக் காட்டி விட்டு, இந்திய இலக்கியங்களைப் பற்றிக் கூறுகிறார். இந்தியாவின் பல மாநிலங்கள் அளவிலான இலக்கியங்களைப் பற்றி விளக்கியுரைக்கிறார். உலக மொழி இலக்கியங்களை வகைமை நோக்கில் இனம் பிரித்துக் காட்டுவதோடு, அவை பற்றிய திறனாய்வையும் ஒரு சேர இணைத்து விளக்கும் முயற்சி மெய்சிலிர்க்க வைக்கிறது.

கவிதை, நாடகம், கட்டுரை, சிறுகதை, புதினம், திறனாய்வு என்று உலக இலக்கியக் கூறுகள் ஒவ்வொன்று குறித்தும் தனித் தனிப் பகுதியாக விளக்கியுள்ளமை, நூலின் பகுப்பு முறையில் அவருக்கு இருந்த ஆழங்காற்பட்ட தோய்வைக் காட்டுகிறது.

இந்நூல், பெரியதும் சிறியதுமான ஆறு கட்டுரைகளின் தொகுப்பாக விளங்குகிறது. அவற்றில் இலக்கிய வகைமை நோக்கில் அமைந்தது ஒன்று. இப்பகுதிகளில் உலக இலக்கியங்களைக் க. நா. சு. அவர்கள் அறிமுகப்படுத்துகிறார். எஞ்சிய கட்டுரைகளில் உலக இலக்கியம் குறித்து ஆசிரியரின் கருத்துப் படிமங்கள் பொதிந்து கிடக்கின்றன. உண்மையில், இந்தக் கட்டுரைகளில் இடம் பெறும் ஒவ்வொரு சொல்லும் ஆசிரியரின் உலக இலக்கியம் பற்றிய மேலார்ந்த/ஆழ்ந்த சிந்தனைகளாகும். மொழிகளும் இலக்கியங்களும், பாதிப்பு மண்டலங்கள், உலக இலக்கியம் மூன்று பார்வைகள், உலக இலக்கியச் சிகரங்கள், சுதேயும் உலக இலக்கியமும் என்னும் ஐந்து கட்டுரைகளும் உலக இலக்கியம் மற்றும் உலக இலக்கிய ஆய்வு குறித்த பல புதிய சிந்தனைகளைத் தருவனவாக உள்ளன.

இந்த நூலுள் இரண்டாவது கட்டுரையாக அமைந்திருக்கும் 'பாதிப்பு மண்டலங்கள்' எனும் பகுதி உலக இலக்கியப் பண்புகளில் ஒன்றான தழுவல் இயல்புப் பண்பின் (adaptability) அடிப்படையில் அமைக்கப் பட்டுள்ளது. ஒப்பிலக்கியத்தில் (comparative literature) கால, தேச, வர்த்தமானங்களின் தழுவல் இயல்பு தவிர்க்க முடியாத கூறாக விளங்குகிறது. தாக்கமும் தழுவலும் உலக இலக்கிய வரையறுப்பில் தலைமை இடம் தாங்குகின்றன. இவைதாம் உலக இலக்கியம் பற்றிய பொதுப் பண்பினை வரையறுக்க அல்லது உருவாக்க உதவுகின்றன. ஒரு மொழி இலக்கியத்தின் கருப்பொருள் எவ்வாறு மற்றொரு மொழி இலக்கியத்தில் கருப்பொருளாகத் தாக்கம் பெற்றுள்ளது, அவற்றிற்கான காரணங்கள் யாவை என்பன குறித்துத் தக்க சான்றுகளுடன் நிறுவியிருப்பது படிப்பவரைப் பரவயமாக்குகிறது.

உலக இலக்கியப் பட்டியலில் விடுபட்ட, தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்தை உலக இலக்கியத் தரத்திற்குச் சரியான சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு செல்வது, நாடு, இனம், மொழி ஆகியவற்றைக் கடந்த தலையாய நடுநிலைத் திறனாய்வாளர் க.நா.சு. என்பதை நிலை நிறுத்துகிறது. உலகக் காவியங்களின் பாடுபொருளிலிருந்து புதுப் பாடுபொருளைத் தம் காவியத்தில் இளங்கோ கையாளுவதைக் க.நா.சு. சிறப்புற எடுத்துக் காட்டுகிறார். இளங்கோவடிகள் சமயவொழுக்க நீதி நெறிகளை முதன் முதலில் காப்பிய உலகில் கையாளுகிறார். ஒரு 'மனுசி' தெய்வமாகிக் கோயிலில் குடியேறுவதைத் தம் காப்பியப் பொருளாக்கியுள்ளார் அவர். உலகக் காவிய அரங்கில் இத்தகு முயற்சி புதுமையிலும் புதுமை. உலக அரங்கில் அதுவரை இல்லாத புதுமையைப் படைத்த முதல்வராகிறார் இளங்கோவடிகள். இத்தகு, தமிழ்க் காவியத்தை உலகம் ஒருநாள் ஏற்றுக்கொண்டே தீரும் என்பது ஆசிரியரின் தீர்க்கமான முடிவு.

இளங்கோவடிகள் மீது மாறாக் காதல் கொண்ட பேராசிரியர் க.நா.சு. கம்பனைப் பற்றிக் கூறியுள்ளது சிந்தனைக்குரியது. கம்பனில் மூழ்கிப் போன ரசனைவாதிகளுக்கு, சிலப்பதிகாரம் குறித்த ஆசிரியரது ஆணித்தரமான கருத்து வியப்பைத் தரும். ''தமிழில் கம்பனைத்தான் காவிய கர்த்தாவாகச் சொல்வது ரசனை மரபாக இன்றுவரை வந்திருக்கிறது. கம்பன் பல தனிப்பட்ட மாறுதல்களுடன் வான்மீகி காவியம் செய்ததையேதான் எடுத்துக் கையாளுகிறார். உலக அரங்கில் ஒரு தரம் ஏறிய கதை இது. சிலப்பதிகாரம் தமிழில்

மட்டும் தோன்றி முதல் தடவையாகக் காவியம் ஆனது'' என்று முத்தாய்ப்பு வைக்கிறார் க. நா. சு. காப்பிய உலகில் முன்னுதாரணமற்ற முன்னோடியாக விளங்குகிறது சிலப்பதிகாரம் என நிறுவும் ஆசிரியர் 'கம்பனிலும் கொம்பன் இளங்கோ' என்று இலக்கிய முருகியல் வாதிகளை இலக்கிய ஆராய்ச்சிப் பக்கம் திசை திருப்பும் போக்குக் கருதுதற்குரியது.

வழக்கொழிந்த மொழிகளின் இலக்கியக் கொடை பற்றிய ஆசிரியரின் கருத்துகள் இலக்கிய வளத்திற்குக் காரணமாக இருந்து விட்டுப் பின்னர்த் தம் வாழ்வை முடித்துக் கொண்டு சென்றுவிட்ட மறைந்த மொழிகளை 'இலக்கியத் தியாக மொழி' களாகவே கொள்ள வேண்டும். இத்தகு மொழிகளையும், அம் மொழி இலக்கியங்களையும் பற்றிய ஆசிரியரது கருத்துகள் புதிய கருத்தாக உள்ளன.

ஹோமரையும் வால்மீகியையும் பாதித்த, இவர்கள் காலத் திற்குப் பல ஆண்டுகள் பழமையுடைய அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட 'க்யூனிஃபார்ம்' என்ற முக்கோண வடிவப் பாபி லோன் பிரதேச மொழியில் எளிதாகக் கண்ணில் படாத மலை களில் பொறிக்கப்பட்ட 'கில்காமேஷ்' என்ற ஆதி காவியம் பற்றிய ஆசிரியரது அரிய செய்தி உலகக் காப்பிய ஆசிரியர்களுக் கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் நல்விருந்தாகும். இந்தக் காப் பியக் கண்டு பிடிப்பைப் பற்றிச் சொல்லும் ஆசிரியர் ''இதைக் கண்டு பிடித்து வாசித்து உருவாக்கியதே ஒரு காவியம் போலச் சொல்ல வேண்டும்'' என்கிறார். இது உலக இலக்கியம் பற்றிய ஆசிரியது சீரிய அறிவைக் காட்டுவதுடன், அண்மைக் காலக் கண்டுபிடிப்புகளைப் பற்றி அறிவதில் அவருக்கு இருந்த அறி வார்வத்தையும் ஈடுபாட்டையும் காட்டுகிறது.

'உலக இலக்கியம் மூன்று பார்வைகள்' என்ற கட்டுரை மிகவும் சிறப்பான முறையில் இந்த நூலுக்கே மணிமகுடமாக விளங்குகிறது. மொழி இலக்கியம், தேசிய இலக்கியம், உலக இலக்கியம் என்று உலக இலக்கியமாவதற் குரிய படிநிலைகளை விளக்கிக் காட்டியிருப்பது ஆசிரியரின் திறமைக்கு எடுத்துக் காட்டு.

'இலக்கியச் சிகரங்கள்' என்னும் பகுதியில் உலக இலக்கியங் களின் பட்டியல் போட்டியிருப்பது (ஏறத்தாழ 300 நூல்கள்) ஆசிரியரின் உலக இலக்கியப் பட்டறிவைக் காட்டும் பட்டியல் ஆகும். தமிழ் மொழி அளவில் இந்திய அளவில், உலக அளவில்

என்று தரமான இலக்கியங்களைப் பட்டியலிட்டுக் காட்டி யிருப்பது இளம் தலைமுறையினருக்கும், எதிர்காலத் தலை முறையினருக்கும் நல்ல வாய்ப்பாக இருக்கும்.

பல்கலைக் கழகப் பணியை நிறைவு செய்து கொண்டு அறிஞர் க.நா.சு அவர்கள் சென்னைக்குப் பயணம் ஆவதற்கு முன்பு விடை தரும் நிகழ்ச்சி ஒன்றை நாங்கள் அமைத்திருந் தோம். அந்த நாளில் தாம் எழுதிய 'உலக இலக்கியம்', 'பாரதி யின் காட்சி' என்ற இரண்டு ஏடுகளையும் பல்கலைக் கழகத்திற்கு வழங்கினார். அவற்றைப் படி எடுத்து, உள் தலைப்புகள் வழங்கிப் பதிப்புப் பணியைச் செய்வதற்கும் அச்சிடுவதற்கும் ஒப்புதல் அளித்த நம் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர் களுக்கும், ஆட்சிக் குழு உறுப்பினர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள். இப்பணியில் எனக்கு உறுதுணையாக இருந்த புதுவைப் பல்கலைக்கழகத் தமிழியல் துறை பிஎச்.டி ஆய்வாளர் கள் திரு. சிலம்பு நா. செல்வராசு திரு. க. முத்தையா ஆகிய இருவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

திருவள்ளுவராண்டு : 2020
புரட்டாசி 30. (16.10.1989)

**க. ப. அறவாணன்**
பொதுப் பதிப்பாசிரியர்

# உள்ளே...

# 1

# மொழிகளும், இலக்கியங்களும்

உலக இலக்கியம் என்றால் என்ன?

இந்திய இலக்கியம் என்றால் என்ன?

தமிழ் இலக்கியம் என்றால் என்ன என்பது தெரிகிறது. தமிழ் மொழியில் எழுதப்படுவதில் சிறந்தது எல்லாமே தமிழ் இலக்கியம் என்று சொல்லப்படுகிறது.

அதேபோல் இந்தியாவில் பல மொழிகளில் இலக்கியம் நல்ல தரத்தில் படைக்கப்படுகிறது—வங்கம், மராத்தி, மலையாளம், தெலுங்கு, கன்னடம், குஜராத்தி, காஷ்மீரி, ஒரியா, அஸ்ஸாமி போன்ற மொழிகளில் இலக்கியம் படைக்கப்படுகிறது. ''செப்பு மொழி பதினெட்டுடையாள்; சொல்லும் கருத்து ஒன்றுடையாள்'' என்று கவி பாரதியார் கூறினார்.

## இலக்கிய மொழிகள்

சாகித்திய அகாடமி என்னும் இந்தியத் தேசிய இலக்கிய அமைப்பு இராஜஸ்தானி, கொங்கனி, மைதிலி, டோகிரி போன்ற மொழிகளையும் சேர்த்து, ஆங்கிலத்துடன் இருபத்திரண்டு மொழிகளை இலக்கிய மொழிகளாக ஏற்றுக் கொண்டு செயல்படுகிறது.

இலக்கிய மொழிகளாக உள்ள இந்த இருபத்தி இரண்டு மொழிகளையும் தவிர, இலக்கிய அந்தஸ்தை எட்டாத, சில மலைவாழ் ஆதி மொழிகளில் அற்புதமான தரத்தில், முக்கிய

மான கவிதைகள் சிறிதும் பெரிதுமாக நிறையவே இருக்கின்றன. இவற்றுள் சிலவற்றை வெர்ரியர் எல்வென் போன்ற சில அறிஞர்கள் தொகுத்துத் தந்திருக்கின்றார்கள். இவற்றையும் இந்திய இலக்கியம் என்று சேர்த்துச் சொல்ல வேண்டும்.

இவை தவிர, வழக்கிறந்த சில மொழிகளும் இலக்கியம் படைத்திருக்கின்றன. பாலி, மகராஷ்ட்டிர, கன்னட, ப்ராக்கிரதங்கள் ஆபப்பிரம்தம் ஆகிய மொழிகளிலும் இலக்கியம் உண்டு.

### இந்திய இலக்கியத்தில் சம்ஸ்கிருதத்தின் செல்வாக்கு

சம்ஸ்கிருத இலக்கியமும் பெரிதாகவே இருக்கிறது. வேத காலம் தொடங்கி இதுவரை சம்ஸ்கிருதத்தில் இலக்கியம் சிறப்பாகப் படைக்கப்பட்டு வருகிறது. சமஸ்கிருதம் எந்தக் காலத்திலாவது மக்களின் பேச்சு மொழியாகச் செயல்பட்டு இருக்கிறதா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. ஆனால் இலக்கிய மொழி என்கிற அளவில், சமஸ்கிருதத்தின் ஆதிக்கம் இந்தியாவில் எல்லா மொழிகளிலுமே காணக் கிடைக்கிறது. பிராந்திய இந்திய மொழிகள் பலவற்றிலும் அநேகமாக ஆரம்ப நூல்கள் எல்லாம் சமஸ்கிருதத்தி லிருந்து வந்தவை என்று சொல்லலாம் (இராமாயணம், பாரதம், புராணங்கள் போன்றவை). தமிழில் சம்ஸ்கிருத ஆதிக்கம் மிக மிகக் குறைவாகச் சங்க காலத்தில் தொடங்கிக் கம்ப இராமாயண காலத்தில் உச்சக் கட்டத்தை எட்டியது என்று சொல்லலாம்.

இதே போல அரபி, பர்சிய மொழிகள் வழியாக இஸ்லாமியரின் பேச்சு மொழி உருது என்று தொடங்கி, அதிலும் நான்கைந்து நூற்றாண்டுகளாக இலக்கியம் படைக்கப்பட்டு வருகிறது. முக்கியமாக இந்திய மரபிலிருந்து மாறுபட்ட ஒரு மரபாக உருதுக் கவிதை செயல்பட்டு வருகிறது. முகலாயர் அரசு நசிக்கத் தொடங்கிய காலத்திலிருந்துதான் உருது மொழி சிறப்பாகச் செயல்பட்டு வந்திருக்கின்றது என்று சொல்ல வேண்டும்.

### முதல் இந்திய ஆங்கிலக் கவிதை

ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வந்தபோது அவர்களுடன் ஆங்கில மொழி பரவியது. ஒரு நூற்றைம்பது ஆண்டுகளாக ஆங்கிலம் பயிலப்பட்டும் இந்தியாவில் எழுதப் பட்டும் வருகிறது. தஞ்சாவூர் ராஜா சரபோஜி தன்குருவான ஷ்வார்ட்ஸ் பாதிரியாரைப் பற்றித் தன் சரம கவியை அவர் கல்லறையில் சலவைக் கல்லில் பதித்து வைத்திருக்கிறதுதான் (ஆயிரத்து

எழுநூற்று தொண்ணூற்று எட்டு) முதல் இந்திய ஆங்கிலக் கவிதை என்று எண்ணுகிறேன். அன்று முதல் இன்று வரை ஆங்கிலத்தில் இந்தியா முழுமையும் பரவலாக—நூல்கள், கதை, கட்டுரை, நாவல், தத்துவம் எழுதப்பட்டு வருகின்றன. இருபதாம் நூற்றாண்டில் சமீப காலமாக இந்திய ஆங்கில இலக்கியத் தரம் கூடிக் கொண்டு வருவதும் தெரிகிறது.

இப்படியாக இந்தியாவில் மட்டும் பல மொழிகளில் இலக்கியம் சிருஷ்டிக்கப் படுகிறது. சிருஷ்டிக்கப் படுவதில் பத்தில் ஒரு பங்காவது அல்லது இருபதில் ஒரு பங்காவது நல்ல இலக்கியமாகத் தேறக்கூடும். சாகித்திய அகாடமியின் ஸ்லோகம் "பல மொழிகளில் எழுதப்பட்டாலும் இந்திய இலக்கியம் ஒன்றே" என்பதாகும்.

இந்திய இலக்கியம் என்கிற சிந்தனையை வளர்க்க முயன்றவர்கள் இருக்கிறார்கள். இதைப் பிறகு பார்க்கலாம்.

### உலக இலக்கியத்தில் ஐரோப்பிய மொழிகள்

பரந்த உலகில் இந்தியாவில் இருப்பது போல, பல தரப்பட்ட மொழிகள் இருந்து வருகின்றன. சில அழிந்தும் விட்டன. பல மொழிகள் இலக்கிய வளத்துடன் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றில் மிகமிக முக்கியமானவையாக ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன், ருஷ்யா, இத்தாலியா, இஸ்பானியா, போர்ச்சுகீசிய, ஸ்காண்டிநேவிய மொழிகளுடன் ப்ளமிஷ் யுகோஸ்லாவியாவில் ஸ்லோவின் மாக்கிடோனியன் போன்ற நான்கு மொழிகளும் சேரும். ருஷ்யாவில் மட்டும் பல மொழிகள் பயிலப்படுகின்றன. இதைத் தவிரப் பல்கேரியன், ஹங்கேரியன், போலிஷ் என்றும் பல மொழிகள் உண்டு.

பொதுவாக ஐரோப்பிய மொழிகள் எல்லாம் சற்றேறக் குறைய ஓர் ஆயிரம் வருஷத்துப் பழமைதான் உள்ளவை. ஹீப்ரு, சீனம், இந்திய மொழிகளில் தமிழ், சமஸ்கிருதம் போல, அதிக பழமை உள்ளது அன்று. அதில் பல மொழிக்காரர்கள் இடைக் காலத்தில் சாம்ராஜ்ஜிய ஆதிக்கம் படைத்தவர்களாக இருந்ததனால் அவர்களுடைய செல்வாக்குப் பரவலாக இருக்கின்றது. ஐரோப்பிய மொழிகளில் இன்று பயிலப்படுவதில் எது மிகப் பழமையானது என்று தமிழ்ப் பழமை விவாதிக்கப்படுவது போல விவாதிப்பதற்குரிய விஷயமாக இல்லை.

### ஆங்கில மொழியின் செல்வாக்கு

ஐரோப்பிய மொழிகளில் ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன் போன்றவை கலோனியல் சாம்ராஜ்ஜியப் பரப்பினால் உலகின் பல பகுதிகளில் வழக்கத்திற்கு வந்தன. ஆங்கிலம் மிகமிக விரிவாகவே புழங்கியது. அதன் காரணமாக அது மிகச் சிறந்த உலக அந்தஸ்தை வகிக்கிறது என்று சொல்லலாம். இங்கு இந்தியாவிலும், ஆஸ்திரேலியாவிலும், கனடாவிலும், தென்னாப் பிரிக்காவிலும், ஜமேக்காவிலும், அமெரிக்காவிலும் ஆங்கிலத் தில் இலக்கியங்கள் படைக்கப்படுகின்றன. இங்கிலாந்தைத் தவிர மற்ற தேசங்களில் படைக்கப்படுகிற இலக்கியங்களைக் 'காமன் வெல்த் லிட்டரச்சர்' என்று சொல்லி, ஆங்கிலேயர்கள் பரப்பி வருகிறார்கள். உலகின் பல பகுதிகளில் பல பல்கலைக் கழகங்களில் காமன் வெல்த் இலக்கியம் மேல்நிலைப் படிப்பிற்கு உரியதாக இருக்கிறது. இந்தியாவில் பல்கலைக் கழகங்களில் இந்திய இலக்கியம் என்று ஒன்று படிப்பிக்கப்படாவிட்டாலும், காமன் வெல்த் இலக்கியம் படிப்பிக்கப் பெறுகிறது.

இதே போலப் பிரஞ்சு, ஜெர்மன் மொழிகளுக்கும் சாம்ராஜ் ஜிய இலக்கியப் பரப்பு இருக்கிறது. முக்கியமாக ஸ்பானிஷ் மொழி தென்னமெரிக்காவில் பல தேசங்களில் இலக்கியம் படைக்க உபயோகப்பட்டு வருகிறது. சமீப காலத்தில் தென்ன மெரிக்கா ஸ்பானிஷ் மொழி இலக்கியங்களுக்கு அதிகமாக உலகின் செல்வாக்கு ஏற்பட்டு வருகிறது.

### கிரேக்க லத்தீன் மொழிகளின் செல்வாக்கு

ஐரோப்பாவில் சில மொழிகள் கால கதியில் பேச்சு வழக்கி லிருந்து ஒழிந்து போனாலும், கருத்தளவில் உருவ அளவில் இலக்கிய அளவில் ஆதிக்கம் செலுத்துகின்றன. சில மொழிகள், மத ஸ்தாபனங்களினாலும் ஆதிக்கம் பெற்றன. கிரேக்க மொழி குறுகிய கால அளவுதான் மக்களிடையே வழக்கிலிருந்தது என்றாலும், இலக்கிய அளவில் உலகம் பூராவையும் உலக இலக்கியத்தைப் பாதித்து இருக்கிறது என்று சொல்ல வேண் டும். கிரேக்க மொழிக்குப் போட்டியாக இலக்கியத்திலும், மத சம்மந்தப்பட்ட விஷயங்களிலும், லத்தீன் மொழி செல்வாக்குப் பெற்று இருந்திருக்கின்றது. ஐரோப்பா மூலம் இன்று கிரேக்க லத்தீன் மொழி இலக்கியங்கள் உலக இலக்கியத்தை வெகுவாகப் பாதித்திருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும்.

### உலக இலக்கியத்திற்கு வழக்கொழிந்த மொழிகளின் பங்களிப்பு

அதே அளவில் இல்லாவிட்டாலும் ஓரளவிற்குக் குறுகிய பிராந்தியங்களில் இலக்கியப்பாதிப்பை ஏற்படுத்திய வழக்கிறந்த

மொழிகள் என்று கெல்டிக் (அயர்லாந்து) டுடானின் (ஜெர்மனி ஸ்காண்டி நேவியா) இவற்றையும் சொல்ல வேண்டும்.

அமெரிக்காவில் பழங்குடி மக்களை ஆங்கிலேயர்களும், ஸ்பானிஷ்காரர்களும் அழித்து விட்டார்கள். இங்கா, மாயன் முதலிய அமெரிக்க இந்திய ஆதிப் பழங்குடிகளின் இலக்கியமும், கவிதையும் சமீப காலத்தில் ஆராய்ச்சி செய்து உருப்பெற்றிருக்கின்றன. அவையும் உலக இலக்கிய வரலாற்றில் இடம் பெற வேண்டியவையே.

## உலக இலக்கியத்தில் மத இலக்கியங்கள் பெறும் இடம்

ஐரோப்பாவில் அடங்காத, ஆனால் ஐரோப்பிய நாகரீகத்தையும் இலக்கியத்தையும் பாதித்தது என்று ஹீப்ரு இலக்கியத்தைச் சொல்ல வேண்டும். இந்த ஹீப்ரு இலக்கியத்தின் பழம் பகுதி கிருஸ்துவ இஸ்லாமிய நாகரீகத்தின் முன்னோடியாகும். ஆனால் யூதர்களுக்கும் கிருஸ்தவர்களுக்கும் இருந்த கருத்து வேற்றுமை காரணமாக ஹீப்ரு மொழிக்கும் இலக்கியத்திற்கும் ''கிளாசிகல்'' அந்தஸ்தை, ஐரோப்பியர்கள் தருவதில்லை. தமிழுக்குப் பொதுவாக இந்தியாவில் கிளாசிகல் அந்தஸ்து கிடைக்கவில்லை என்பதும் இந்த மாதிரியான அடிப்படையில் தான் என்பதைக் கவனிக்க வேண்டும். ஹீப்ரு வழக்கொழியாத மொழி சீனம், சமஸ்கிருதம் போல மூவாயிரத்திற்கும் அதிகமான ஆண்டுகளாக மத இலக்கியமாகவும், யூதமக்கள் நாளிலும் வழங்கி வந்திருக்கின்றது. ஹீப்ருவிற்கு முந்திய காலத்து மொழியாக, முக்கோண வடிவெழுத்தாக க்யூனிபார்ம் எழுத்தொன்று வழக்கிலிருந்து ஒழிந்திருப்பது தெரிகிறது. உலகத்தின் ஆதி இலக்கியமான கில்காமெஷ் என்று ஒரு காவியம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி ஆண்டுகளில் கல்லில் பொதிக்கப் பெற்று முழுவதும் கிடைத்திருக்கின்றது. மனிதனின் முதல்நீண்ட இலக்கிய முயற்சி என்று இதைச்சொல்லலாம். ஆரம்ப காலத்திய ஹீப்ரு, கிரேக்க இலக்கியங்களை இது பாதித்திருப்பதும் தெரிகிறது.

ஹீப்ரு இலக்கியம் இன்று வரை மக்களின் ஒற்றுமையை மதத்தின் மூலமாக நிலைநிறுத்த உபயோகப்பட்டு வந்திருக்கின்றது. யூத குலத்தவர் சரித்திர ரீதியாகப் பட்ட கஷ்டங்களும் மேற்கொண்ட பயணங்களும் உலகசரித்திரத்திலும், உலக இலக்கியத்திலும் இடம் பெற்று விட்டன.

பண்டைய எகிப்தியர்களின் இலக்கியம் ஹீப்ரு மக்களின் இலக்கியம் அளவிற்குக் கிடைக்கவில்லை. ஆனால் அவர்கள்

கதைகள், கவிதைகள் எழுத மட்டுமின்றி வியாபாரத்திற்கும், தங்கள் சித்திர எழுத்து மொழியை உபயோகித்தார்கள் என்பது தெரிகிறது. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்கிற இன்றைய கருத்து முதல் முதலில் எகிப்து நாட்டில் தான் தலை தூக்கியது என்று எண்ண இடமிருக்கிறது.

அரபு பார்சீ மொழிகளில் இலக்கியம் பலநூற்றாண்டுகளாக செயல்பட்டு வருகின்றது. ஜாரதுஷ்டிரன் என்பவன் தான் கி.மு. 800இல் மனிதர்களின் செய்கைகளை நல்லது கெட்டது என்று பிரித்து நல்லது செய்பவர்கள் சொர்க்கத்திற்குப் போவார்கள் என்றும் கெட்டது செய்பவர்கள் நரகத்திற்குப் போவார்கள் என்றும் சொன்னான். அன்று முதல் இன்று வரை, நரகம், சொர்க்கம் என்ற சிந்தனைகள் மனித குலத்தினரிடையே ஆட்சி செலுத்தி வந்திருக்கின்றன. மனித அறிவின் முடிவு ஒளி பெறுவது தான் என்கிற அர்த்தத்தில் அறிவை ஒளியாக, அறிவுத் தேவனை ஒளித்தேவனாகக் கண்டு சொன்னது இவன் தான். ஐரோப்பாவில் இருட்டடர்ந்த காலத்தில் கிரேக்க மொழி இலக்கியங்களை அராபிய மொழி பெயர்ப்பாகக் காப்பாற்றி ஐரோப்பாவில் அறிவு மறுமலர்ச்சி ஏற்படக்காரணமாக இருந்தது அரபு இலக்கியம்.

### தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இலக்கிய வளர்ச்சி

தென்கிழக்கு ஆசியாவில் சமஸ்கிருதம், தமிழ் இவற்றின் பாதிப்புடன் ஓர் ஆயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாகவே இலக்கியம் செயல்பட்டு வந்திருக்கிறது.

சீனாவில் இலக்கியம் கி.மு. 1000, அதற்கு முந்தியிலிருந்து தொடங்கித் தொடர்ச்சியாகச் செயல்பட்டுவருகிறது. சீன இலக்கியம் அதிகமாக மதச் சிந்தனைகள் பற்றிக் கவலைப்படாமல், மனித நேயம், மனித உறவுகள், மனித சரித்திரம், கற்பனைக் கதைகள், கவிதை என்று செயல்பட்டு இருப்பது அதன் சிறப்புகளில் ஒன்றாகும். நாவல் இலக்கியம் என்று ஒன்று ஐரோப்பிய மொழி இலக்கியச் சிறப்பாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. நாவல் இலக்கியத்தின் ஆரம்பத்தைச் சீனாவிலும், இந்தியாவிலும் கி.பி. 500 வாக்கிலேயே காணலாம் என்பது இப்போதைய விமர்சன அபிப்பிராயம். கவிதை, உரைநடை இரண்டுமே ஒருமுகமாக, சீனத்தின் இலக்கியப் பகுதிகளாக வழங்கி வருவது தெரிகிறது.

சீனாவின் பாதிப்பினால் முதலில் கொரியாவிலும், பின்னர் ஜப்பானிலும் இலக்கியம் ஏற்பட்டுக் கி.பி. 500 முதல் செயல்

பட்டு வருகிறது. ஜப்பானிய இலக்கியம் இலக்கியத்தை ஒரு வாழ்க்கை வழியாகவே நிர்ணயித்துக் கொண்டு செயல்பட்ட தினால், அதில் தனியான ஓர் இலக்கியத் தெம்பு காணக் கிடைக் கின்றது என்று சொல்லுகிறார்கள்.

உலக இலக்கியங்களின் அளவு

இப்படியாக உலக மொழிகள் பலவற்றிலும் பல்லாயிரக் கணக்கான நூல்களைக் காணலாம். உலக இலக்கியமென்பது எல்லாவற்றையும் படிப்பதென்பது ஒருமனித ஜென்மத்தில், நூறு ஆண்டுகளில் கூடச் சாத்தியமல்ல. உலக மொழிகள் எல்லா வற்றிலுமே சிறப்பாக எழுதப்பட்டவை சிலதைக் கூட உலக இலக் கிய அளவில் முக்கியமல்ல என்று ஒதுக்கிவிடலாம். உலக இலக் கிய அளவில் தரமுள்ளதாக, இலக்கிய விமர்சன ரீதியில் ஒவ் வொரு மொழியிலும் சில நூல்களைப் பொறுக்கி எடுத்து, உலகம் பூராவிலும் பட்டியல் போட்டால் அறுநூறு முதல் எட்டு நூறு வரை நூல்கள் தேறலாம். அத்தனையும் படிப்பதென்பது கூடச் சிரம சாத்தியமான காரியம். ஆகவே, மிகமிக முக்கிய மானவையாக உலக இலக்கியம் என்று சொல்லி நூறு முதல் இருநூறு அல்லது முந்நூறு வரையில் பட்டியல் போட்டுக் கொண்டு, எத்தனை படிக்க முடியுமோ அத்தனை படிப்பதென் பது நடைமுறையில் சாத்தியமாகிற விஷயம். தமிழன் தமிழ் நூல்கள் பலவற்றைப் படிப்பதும் ஆங்கிலேயன் பல ஆங்கில நூல் களை அதிகமாகப் படிப்பதும், உலக இலக்கியத்தில் தவிர்க்க முடியாத காரியங்கள். குறிப்பிட்ட சில மிக மிகத் தரமான நூல்களின் பரிச்சயம் இல்லாவிட்டால், உலக இலக்கியம் அறிந்த தாகச் சொல்லிக் கொள்ள முடியாது. இன்றியமையாத நூல்கள் பட்டியல் சிறு பட்டியல் என்று ஒரு பட்டியலை இந்த நூலுக்கு அநுபந்தமாகச் சேர்த்திருக்கிறேன். அவரவர் சௌகரியப்படி சிலது சேர்த்துக்கொள்ளலாம். சிலதை விட்டு விடலாம்.

இலக்கியம் பொதுவாக ஆரம்ப காலத்தில் மத ஸ்தாபனங் களுக்கு, மதச் சிந்தனைகளுக்கு ஆதரவாக, அனுசரணையாக, மற்ற கலைகள் போலவே செயல்பட்டிருப்பதாகச் சொல்ல லாம். இதற்குத் தமிழ், ஜப்பானிய மொழி போன்ற சிலவற்றை ஓரளவுக்கு விலக்காகச் சொல்லலாம்.

உலக இலக்கியத்தின் தலையாய நோக்கம்

இலக்கியத்தின் நோக்கம், உலகம் பூராவிலும் பார்க்கும் போது, மனிதனின் மேன்மையைச் சொல்லுவதுதான். வாழ்

வைப் பயனுள்ளதாக, மேன்மையுள்ளதாக, இலட்சியங்களை உள்ளடக்கியதாக, அழகுள்ளதாகச் செய்வதே இலக்கியத்தின் முக்கிய நோக்கமாக இருந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். மனிதன் மனிதனாக வாழ இலக்கியம் கை கொடுத்திருக்கிறது. சிறந்த உலக இலக்கியங்களின் நோக்கம் மனிதன் மனிதனாக, உயர்ந்தவனாக வாழ வேண்டும் என்று எண்ணச் செய்வதாகவே இருந்திருக்கிறது.

# 2

## பாதிப்பு மண்டலங்கள்

சில மொழி இலக்கியங்கள் உலக இலக்கியப் போக்கைப் பெருமளவுக்குப் பாதித்திருக்கின்றன. சில சிறிய அளவிலேயே பாதித்திருக்கின்றன என்று சொல்லாம். இலக்கியப் பெருமை அதிகம் படைக்காத மொழிகளில் சில அதிகமான பாதிப்பை ஏற்படுத்தியிருக்கின்றன. உலக இலக்கியத்தின் தரமான நூல்கள் பல படைத்த தமிழ் இலக்கியம் மொழி, வாழ்க்கை, உலகில் அதிகம் பரவலாக இலக்கிய சிருஷ்டிகளைப் பாதிக்கவில்லை என்று தான் சொல்லவேண்டும். இத்தனைக்கும் தமிழர்களுக்கு இடைக்காலத்தில் ஒருசாம்ராஜ்யம், தென்கிழக்கு ஆசியாவில் இருந்திருக்கிறது.

திருக்குறள், சிலப்பதிகாரம், சங்கக் கவிதைகளில் சில, என்கிற முதல் தரமான தமிழ் இலக்கியங்கள் இருந்தும், தமிழின் மூலம் உலகில் இலக்கியப் பாதிப்பு அதிகம் ஏற்படவில்லை என் பதற்குக் காரணம் இவற்றை, விசேஷ இலக்கியங்களை நாம் உலகுக்கு எடுத்துச் செல்லவில்லை என்பதும், அவற்றின் விமர் சனத்தை நாமும் சரிவரச் செய்யவில்லை என்பதும்தான்.

சமீப காலத்தில் உலகம் பூராவிலும் அதிகமான பாதிப்பை ஏற்படுத்தியிருப்பதாக ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் சொல்லலாம். ஆங்கிலேய சாம்ராஜ்யம் இதற்கு ஓர் அடிப்படை காரணம். இரண்டாவது காரணம், இங்கிலாந்திலும் அமெரிக் காவிலும் முன்னதில் 500 ஆண்டுகளாக மிகப்பெரிய அளவில் தரமான இலக்கியம் தொடர்ந்து வந்து, விமரிசனத்துக்குட் பட்டுப் பரவலாக உலகைப் பாதித்திருக்கிறது. மூன்றாவதாக உலகில் நல்ல இலக்கியங்கள் எங்கு, எந்த மொழியில் எழுதப்

பட்டாலும் தேடிப் பிடித்து அதை உடனே ஆங்கிலத்தில் (அமெரிக்காவிலோ, இங்கிலாந்திலோ) மொழி பெயர்த்துத் தந்து தங்கள் இலக்கியத்தை அவர்கள் வளப்படுத்தி விடுகிறார்கள்.

இதெல்லாம் இல்லாததனால்தான் இந்திய மொழிகள் பலவும் உலகப் பாதிப்பு என்கிற அளவில் வளரவில்லை. சமஸ்கிருத மொழி இலக்கியங்களை விட்டு விட்டுக் கவனித்தால், ஹிந்தியிலோ, தமிழிலோ, வங்கத்திலோ, மராத்தியிலோ, வேறு இந்திய மொழிகளிலோ அதிகமாக உலக இலக்கியங்கள் மொழி பெயர்க்கப்படவில்லை. ஓரளவுக்கு மலையாளத்திலும் வங்கத்திலும் மொழி பெயர்ப்புகள் உண்டு. மற்ற மொழிகள் ''தங்களுக்குள்ளேயே பழங்கதைகள் பேசுவதைத்தான்'' பாரதியார் சொன்னது போலச் செய்கின்றன. சமஸ்கிருதத்துக்கு ஓரளவு பண்டிதப் பல்கலைக் கழக அங்கீகாரம் இருந்தாலும் அதற்கும் உலக இலக்கிய அளவில் செல்வாக்கு, என்று பார்க்கும் போது பாதிப்பு இல்லை என்பது தெரிகிறது. சமீப காலத்தில் ஜப்பானிய இலக்கியம் உலகம் பூராவும் பரவி, ஹைகூ என்றும் ஜப்பானிய கலை அம்சம் நிறைந்த பார்வை யென்றும் நிறைந்திருக்கிறது தெரிகிறது. இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ருஷ்யாவின் உலக இலக்கியக் கொடை

ருஷ்யாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இலக்கியத்தில், அதுவும் கதைகள், நாவல்கள் என்கிற இலக்கியத்தில், பல மேதைகள் தோன்றி உலக இலக்கியத்தைப் (கதைகள், நாவல் என்கிற அளவில்) பாதித்திருக்கிறார்கள். டர்கெனிவ், தோதால், டாஸ்டாவஸ்கி, டால்ஸ்டாய், செக்காவ், கோர்க்கி, ஷெட்ரின், குப்ரின் என்கிற நாவல் சிறுகதை நாடகாசிரியர்களின் பெயர்கள் உலகம் பூராவும் பரவி, வெகுவாக உலக இலக்கியப் போக்கைப் பாதித்திருக்கின்றன. ருஷ்ய இலக்கியத்தைப் படிப்பதென்பது பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி ஆண்டுகளில்தான் ஐரோப்பாவில் செயல்பட்டது. அதற்கு முன் ருஷ்யர்களே (உதாரணமாக டர்கெனிவ்) தம் இலக்கியத்திற்கு முன்னோடியாக ஃபிரான்ஸ் தேசத்தைத்தான் கருதினர். டாஸ்ட்டாஸ்வஸ்கி, ஜெர்மனியை முன்னோடியாகக் கருதியதாகத் தெரிகிறது. இவர்களுக்குப் பிறகு இவர்களை முன்னோடிகளாகக் கருதுகிற பழக்கம், வேறு மொழி ஆசிரியர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

ருஷ்யர்கள் அதுவரை ஐரோப்பிய இலக்கியத்தில் கிடைக்காத ஓர் ஆழத்தை, ஓர் ஆன்மீக வழியை, இலக்கியத்திற்குக் கொண்டு வந்தார்கள். இதைச் சிறப்பான ஓர் அம்சமாக ருஷ்ய நாவல் கதை இலக்கியம் பற்றிச் சொல்லவேண்டும். அந்த அளவுக்கு, இந்த ருஷ்யக் கோஷ்டியினர் ஏற்படுத்திய அளவுக்கு, சமீபகாலத்தில் இத்தனை இலக்கியப் பாதிப்பை வேறு யாரும் ஏற்படுத்தவில்லை என்று சொல்லலாம்.

## பிரெஞ்சுப் புரட்சியும் ஆங்கில இலக்கியமும்

ஆங்கில இலக்கியம் ஷேக்ஸ்பியருடன் உலக இலக்கிய அந்தஸ்தை எட்டியது என்று சொன்னாலும், பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசிப்பகுதி வரையில் ஐரோப்பிய இலக்கியம் உலகம் பூராவும் தங்கள் முன்னோடியாக, ஃபிரஞ்சு மொழி இலக்கியத்தைக் கருதியதாகத்தான் தெரிகிறது. பிரான்ஸ் தேச இலக்கியத்தில் நடை, உருவம், கருத்து மூன்றுமே விகசித்துப் பெருமை தருவதாகக் கருதப்பட்டது. மாண்டேன், ராவிலேஸ், வால்டேர், ரூஸோ, டிடரோ, பாஸ்கவ் என்று பலரும் தங்கள் சிந்தனைகளினால் பிரஞ்சிய இலக்கியத்தை வளப்படுத்தினார்கள். இலக்கிய மறுமலர்ச்சி ஐரோப்பாவில் பிரஞ்சு மொழியில் தொடங்குவதாகச் சரித்திரம் கணிக்கிறது.

ஆனால், ஆங்கில இலக்கியத்தில் உள்ளது போல நாவல்கள் ராபின்ச்ன்ஸ், ரூஸோ, கலிவர், மற்றும் பமீலா-தம் மொழியில் இல்லையே என்று ஆண்ட்ரே ழீடு என்கிற சமீப காலத்திய நாவலாசிரியர் கூறுகிறார். பிரான்சில் புரட்சிக்குப் பிறகு பரவலாக ஒரு நூற்றாண்டுக்கு ஐரோப்பா முழுவதும் பிரஞ்சுப் பாதிப்பு இருந்தது. ஓரளவுக்கு ஜெர்மன் ரொமாண்டிக் இயக்க ஆதிக்கமும் இருந்தது. ருஷ்ய ஆதிக்கம் 19ஆம் நூற்றாண்டின் கடைசி ஆண்டுகளில் ஏற்பட்டது. நார்வே, ஸ்வீடன் இவற்றின் லேசான ஆதிக்கம், பாதிப்பு, ஐரோப்பாவில் ஜியார் பிராண்டஸ் என்கிற விமரிசகர், ஹென்றி இப்ஸன் என்கிற நாடக ஆசிரியர், ஹான்ஸ் கிறிஸ்டியன் ஆண்ட்ரஸன் என்கிற டேனிஸ் மொழிக் குழந்தைக் கதாசிரியர் இவர்களுடன் ஏற்பட்டது. நட் ஹாரம்ஸன், ஸெல்மா லாசர்லெவ், பேர் லேகர் க்ஸிஸ்டு, ஆகஸ்டு ஸ்டிரிண்ட் பெர்க், ப்யெர்ண்ட்ர்ன் ப்யெர்ணயன் போன்ற நல்ல இலக்கியாசிரியர்களின் பாதிப்பு ஐரோப்பாவில் பரவலாக ஏற்படவேயில்லை.

**கிரேக்க லத்தீன் இலக்கியங்களின் தொன்மையும், பாதிப்புகளும்**

பண்டைய இலக்கியங்களில், கிரேக்க ஆதிக்கம் ஐரோப்பாவிலும், ஐரோப்பா மறந்த போதில் அராபியாவிலும், பின்னர் மீண்டும் ஐரோப்பாவிலும், ஐரோப்பா மூலம் தற்காலத்தில் உலகம் பூராவும், பரவி இருக்கிறது என்று சொல்ல வேண்டும், இத்தனைக்கும் கிரேக்கர்களுக்குச் சாம்ராஜ்யமோ, நாகரிகம் என்று சொல்லக் கூடியதோ குறைவுதான். அரசியல் சிந்தனைகள், விஞ்ஞானச் சிந்தனைகள், தத்துவச் சிந்தனைகள், இலக்கிய உருவங்கள் என்று கிரேக்கர்கள் தங்கள் மொழி மூலம் அதிசயங்கள் செய்து காட்டினார்கள். ஹோமர், சோக நாடகாசிரியர்களான ஏஷ்கிலஸ், ஸோஃபாக்ளிஸ், யூரிபிடஸ் தவிர ஹாஸ்ய நாடகாசிரியர் அரிஸ்ட்ஃபேன்ஸ், இன்னும் பிண்டார், அனக்ரியான், ஸாஃபோ என்று கவிகள், பின்னர்ப் பல தனங்களில் சிந்தித்தவர்கள் என்று ஸாக்ரடிஸ், ப்ளேட்டோ, அரிஸ்டாடில் என்பவர்கள், சரித்திரத்தின் தந்தை என்று ஹெரடோடஸ், துசிடைடிஸ் என்பவர்கள், காலத்தால் பிந்திய ப்ளூடார்க், மன்னன் அரேலியஸ் என்று கிரேக்க இலக்கியப் பாதிப்பு உலகம் பூராவும் வியாபித்து நிற்கிறது, இன்னும் சொல்லப்படுகிறது, செயல்படுகிறது.

சாம்ராஜ்ய அளவில் லத்தின் மொழிப் பாதிப்பு நின்றுவிடவில்லை. ரோமாபுரி சாம்ராஜ்யம் மிகப் பரந்தது. கிரேக்கத்தில் பாதிக்கப்பட்ட அது, வெகுகாலம் கிறிஸ்தவ மதச்சடங்குகளின் மொழியாக ஐரோப்பாவிலும், ஐரோப்பிய நாடுகள் ஆட்சி செலுத்திய கலோனியல் நாடுகளிலும் ஆட்சி செலுத்தியது. கிரேக்க இலக்கியம் போல் அழகுக்கோ, சிந்தனை ஆழத்துக்கோ, பெயர் பெற்றதல்ல லத்தின் மொழி. சமஸ்கிருதம் போல ஓசை நயம் மிக்கது. ஹாரஸ், டல்லஸ், பிரோர்ஷியஸ், ஜீவெனால், ஓவிட், சிஸரோ என்று நாகரிகமான, நகர்ப்புற அளவில் எழுந்த, லோகாயதமான, இலக்கியத்துக்காகப் புகழ் பெற்றது. வர்ஜில் ஏனியட் என்கிற காவியத்தை எழுதினார். அகஸ்டின், தாமஸ், அக்வினாஸ் போன்ற கிறிஸ்துவ மதவாதிகள் எழுதிய நூல்களும் லத்தினில் அமைந்தவையே.

லத்தினைப் புறக்கணித்து, டாண்டே தன் காவியத்தை இத்தாலிய மக்கள் மொழியில் எழுதினார். இது ஹோமர், வர்ஜிலிலிருந்து முற்றும் மாறுபட்ட காவியம். ஒரு தரும நெறி உலகத்தை, கிறிஸ்துவ தர்மத்தைப் பின்பற்றிய அக்விநாஸ் நாகரீகமாக உலகைக் காட்டிய காவியம். ஏன், இதை மக்கள் நாவில்

வழங்கும் நீச மொழியில் எழுதினேன் என்று ஒரு நூலையும் டாண்டே எழுதினார் லத்தினில்.

இங்கிலாந்தில் நவீன இலக்கியம் சாஸர் என்பவருடன் தொடங்கியது. பிரான்சில் பத்தாவது, பதினோராவது நூற்றாண்டிலேயே நவீன இலக்கியம் தொடங்கி விட்டது. இத்தாலியில் டாண்டேயுடன், ஸ்பெயின் மொழியில் 16ஆவது நூற்றாண்டில் செர்வாண்டிஸ் எழுதிய டான்குவிஹோட்டே என்னும் நாவலுடன் ஐரோப்பிய நாவல் தொடங்கியது. இங்கிலாந்தின் முதல் நாவல் ராபின்சன் க்ரூஸோ (1712). ஆனால் ஐரோப்பிய நாவல் தொடங்குவதற்கு முன்னதாகவே நாவல்கள் சொல்லப் படுகின்றன. நீளக்கதைகளாகச் சீனாவிலும், ஐரோப்பாவிலும் நாவல்கள் இருந்திருக்கின்றன. சமஸ்கிருதத்தில் காதம்பரியையும் நாவலின் முன்னோடியாகக் கருத இடமுண்டு.

## இலக்கியப் பாதிப்பு மண்டலங்கள்

சமஸ்கிருத இலக்கியத்தின் பாதிப்பு மண்டலம் தென்கிழக்கு ஆசியாவிலும், மங்கோலியாவிலும் இருந்தது. பௌத்த பாலி இலக்கியங்களின் ஆதிக்கம் சீனாவிலும் சீனா மூலம் ஐரோப்பாவிலும் பரவியது. அரபு, பாரசீக மொழி இலக்கியங்களின் ஆதிக்கம் ஜெங்கிஸ்கான், டாமர்லென் என்பவர்களின் வீரத் திக்விஜயம் காரணமாக, ஸ்பெயின் பிரதேசம் வரை எட்டியது. ஸ்பெயின் இலக்கியத்தில் பல அராபிய, பர்ஸிய பாதிப்புகளைக் காணலாம்.

ஸ்பெயினின் பாதிப்பு மண்டலம் மெக்ஸிகோவிலும் தெற்கே தென்அமெரிக்கா பூராவிலும் பரவிற்று. சமீபகாலத்தில் உலக அளவில், மெக்ஸிக, தென் அமெரிக்க இலக்கிய நூல்கள் பேசப்படுகின்றன என்றாலும், ஒரு இருநூறு ஆண்டுகளுக்கும் அதிகமாக அந்தத் தேசங்களிலெல்லாம் இலக்கியங்கள் வளர்ந்து வந்திருக்கின்றன, ஸ்பானிஷ் மொழியில்.

பலவிதமான மண்டலங்களாக, இலக்கியப் பாதிப்பு மண்டலங்களைப் பிரிக்கலாம். ஒரே உலகம் என்பது அரசியல் ரீதியில் சாத்தியமல்ல என்று ஏற்பட்டு விட்டது போலத் தோன்றினாலும், உலகில் எதிர்பாராத அளவில் பலமொழி இலக்கியங்கள் வேறு மொழி இலக்கியங்களைப் பாதித்து வளப்படுத்தி இருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். இலக்கியத்தின் நோக்கம் தேசிய அளவில் கட்டுப் படுத்தப்பட்டு எல்லைகள் கண்டாலும், உருவம், கருத்து, சிந்தனை, அழகு என்கிற அளவில் உலகில் உள்ள மக்கள் எல்லோரையும் எட்டித் தொடக் கூடியதா

கவே இருக்கிறது. இந்த அளவில் உலக இலக்கியத்தை ஒன்றா வே கருதலாம்.

'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்கிற சிந்தனை கி. மு. 11ஆவது நூற்றாண்டில் தோன்றியதாகத் தெரிகிறது. 'அகெணடான்' என்ற எகிப்திய பாரோ அரசன் அம்மன் என்கிற சக்தி வாய்ந்த தேவனின் கோயிலை இடித்து ஒரே கடவுள் ராஜ்ஜியத்தை ஸ்தாபிக்க முயன்றான். அது பலிக்கவில்லை. அவன் போனபின், அம்மன் ராஜ்யம் மீண்டும் தலைதூக்கியது.

கம்முரபி என்கிற மன்னன், கி. மு. 1200-ம் ஆண்டில் சமுதாய நலன்களைப் பாதுகாப்பதற்காக விதிகளைச் செய்து பிரசுரித்துக் கல்லில் பதித்து வைத்திருக்கிறான்.

ஹிப்ரேயர்களின் முதல் சட்டமளித்தவரான மோஸஸ் மனித குலத்தை நசிக்கவிடாமல் நீடித்த பத்து உத்தரவுகளைக் கடவுள் தந்ததாகக் கி. மு. 80இல் பிரகடனம் செய்தார். இந்த ஹிப்ரேயர்கள் தங்கள் இலக்கியத்தாலும், நாகரீகத்தாலும், மதப்பற்றாலும் பண்டை உலகத்தை வெகுவாகப் பாதித்தவர்கள். அக்கேடியர்கள், அஸ்ஸிரியர்கள், ஸுமேரியர்கள் பண்டைய பாபிலோன் எகிப்து எல்லாத் தேசத்தவர்களும் ஹிப்ரேயர்களான யூதர்களை அறிந்தவர்கள்.

பிற்காலத்திலும், தற்காலத்திலும், அவர்கள் கிறிஸ்துவச் சிந்தனைகள், இஸ்லாமியச் சிந்தனைகள், பலவற்றுக்கு ஆதாரமாக அமைந்து சிறப்புச் செய்து இன்றைய உலகையும் பாதித்துள்ளவர்கள். மத அளவில், ஹிந்துக்களைப் போல ஓரளவுக்கு மேல் மாறாதவர்கள். சமுதாய அளவில் அவர்களும் சீனர்களைப் போலப் பழக்க வழக்கங்களை விடாமல் பின்பற்றிக் காப்பாற்றி வருபவர்கள். சீனர்கள், ஹிந்துக்கள், ஹிப்ரேயர்கள் இவர்கள் தான் இந்த உலகத்தின் மிகப் பழங்குடி மக்கள் என்று சொல்ல வேண்டும். சீனம், சமஸ்கிருதம், தமிழ், ஹிப்ரூ இவை தான் உலகத்தின் மிகப் பழைய மொழிகளில் இன்றும் உள்ளன. கிரேக்கத்துக்கும், லத்தினுக்கும் சரித்திர சந்தர்ப்ப வசத்தினால் கிடைத்த பரவலான மண்டல ஆதிக்கமோ, காலநெடுகிலும் இலக்கியத்தைப் பாதிக்கும் சக்தியோ, இவற்றிற்கு இல்லாது போய்விட்டது, மிகமிக அதிசயம் தான்.

### சாம்ராஜ்ஜிய ஆதிக்கமும் இலக்கிய ஆதிக்கமும்

சாம்ராஜ்ய ஆதிக்கம் ஏற்பட்டால்தான் இலக்கியப் பாதிப்பும் ஏற்படும் என்றும் சொல்ல முடியாது. எகிப்துக்குச் சாம்ராஜ்யம் இருந்தது - இலக்கிய ஆதிக்கம் இல்லை, கிரேக்கத்துக்குச்

சாம்ராஜ்யமே இல்லை. இருந்தும், பெரிய அளவில் அதன் இலக்கியப் பாதிப்புத் தொடர்ந்து வந்திருக்கிறது. சமஸ்கிருத, தமிழ் சாம்ராஜ்யங்கள் அரசியல் சாம்ராஜ்ஜியங்களாக அல்லாமல், மொழி சாம்ராஜ்ஜியங்களாக இருந்திருக்கின்றன. தமிழ் மொழி ஆதிக்கம் மலேஸியாவில், இலங்கையில், இன்னும் பல இடங்களில் இன்னமும் இருக்கிறது.

ட்யுடானிக் இலக்கியப் பாதிப்பு அதிகமில்லா விட்டாலும் கூட வாரத்தின் கிழமைகளின் பெயர்கள் Woden, Thor, போடன் தார் என்கிற பெயர்களால் நிலைத்திருப்பதைக் காண்கிறோம். ஸெப்டம்பர், அக்டோபர், முதலியவற்றில் லத்தீன் சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்தைக் காண்கிறோம்.

இலக்கியச் சிறப்பால் உலக கவனத்தைக் கவர்ந்தவர்கள் என்று ருஷ்ய ஆசிரியர்கள் பலரை - டால்ஸ்டாய், டாஸ்டவர்ஸ்கி கோகால், செக்காவ் - இவர்களைச் சொல்லலாம். ஷேக்ஸ்பியர் தனி ஓர் இலக்கிய உருவமாகக் காட்சியளிக்கிறார். ஸெர்வாண்டிஸீம் அதே மாதிரிதான், மோலியேர், மாண்டேய்ன், வால்டேர், ரூஸோ என்பவர்கள் தனி, ஃபிரெஞ்சு ஆசிரியர்கள், ஃப்ளோபேர், ஸ்டெந்தால்,மொபஸான் ப்ரூஸ்ட் என்று சமீப காலம் வரையில் கொண்டு வரலாம். ஜெர்மனியில் ஹெய்னே கிதே ஷ்கில்லர், நீட்ஷேதாமஸ் மன், காப்கா, என்றும் அமெரிக்காவில் வில்லியம்ஃபாக்னர், ஐசக் பாஷேவிஸ்ஸிங்கர் தென் அமெரிக்காவில் பாப்லோ நெருடா மைக்கேல் ஆஸ்குரிஸ், ரூபாற்ஹேஹல், காப்ரியல் மார்க்விஸ் இங்கிலாந்தில் ஜேம்ஸ் ஜாய்ஸ். நவீன நாடகாசிரியர்கள் என்று இப்ஸன், லூயி பிரான்டெல்லோ, ஹிய சிண்டோ பென வண்டே, யூஷ்ல்லுநில் பெர்லோல்ட்ரப்கெக்ட் என்று பட்டியல் போடலாம்.

ஆசியாவில் எடுத்துக் கொண்டால் - சீனாவில் பல நாவலாசிரியர்கள் முக்கியமாக எல்லோரும் சோதரரே. கன்புஸ்யஸ், டாவ், மென்சியஸ் போன்ற சிந்தனையாளர்கள். லிபோ, டுஃபு போன்ற கவிகள் (இவர்களைச் ஷேக்ஸ்பியருக்குச் சமமாகக்கூடச் சொல்லுகிறார்கள்). ஜப்பானில் ஜென் தத்துவம் ஹைகூ, லேடி முராஸரி, முதலியனவுடன் சமீபகாலத்திய பல நாவல்கள், இந்தியாவில் வேத உபநிஷத்துகள், புத்தர் பிரசங்கங்கள், வால்மீகி, வியாசர், பாஸா, காளிதாஸர், தமிழில் சிலப்பதிகாரம், திருக்குறள், சங்க இலக்கியத் தொகுதி, பர்ஸிய, அரேபியாவில் ஸாதி, ஹாஃபிஸ், ரூமி முதலியவர்களுடன் ஓமர் • மற்றும் பிர்தௌஸின் காவியம் ஷமாநாமா என்று பட்டியல் போடலாம்.

இன்னும் பல பெயர்களையும் அவரவர் இஷ்டப்படி சேர்க்கலாம், விடலாம்.

ஆனால் இன்று வாசிப்பவனும், எழுதுபவனும், உலக இலக்கியத்துக்கெல்லாம் வாரிசு என்பதுடன், அவற்றின் தரத்தை நழுவவிட்டு விடாமல் எட்டிப் பிடித்துக் காட்ட வேண்டிய அவசியம் இருக்கிறது. இது தான் உலக இலக்கியச் சிந்தனை என்று சொல்வதின், காண்பதின் அர்த்தம்.

# 3

# இந்திய, உலக இலக்கியப் போக்குகள்

## அ. கவிதை

உலகத்துக் கவிதைகளைப் பற்றி ஒரு மணி நேரத்துக்குள் சொற்பொழிவு ஆற்ற வேண்டும் என்று எனக்குப் பணித்திருக்கிறார்கள். இது கொஞ்சம் சிரமம் என்று தான் சொல்ல வேண்டும்.

விஷயம் மிகப்பெரிது. அதில் எனக்குத் தெரிந்ததோ குறைவு. பல பகுதிகள் என் அனுபவத்துக் காட்படாமலே இருக்கலாம். எல்லாவற்றையும் கரைத்துக் குடித்து விட்டதாக நான் சொல்ல முன் வர மாட்டேன். படிக்க, படித்து அறிந்து கொள்ள, தெரிந்துகொள்ள, முயலுகிறேன் அவ்வளவுதான். எனக்குத் தெரிந்ததில் ஒரு பகுதியை இங்கு எனக்குள்ள காலவரையறைக் குட்பட்டு எடுத்துச் சொல்லுகிறேன்.

### இலக்கியமும் அனுபவமும்

இலக்கியம் என்பது பேராசிரியர்களின் ஆய்வுக்காக மட்டுமோ, பாடப் புஸ்தகங்களாகப் படிப்பதற்கு மட்டுமோ எழுதப்படுவதில்லை. நல்ல இலக்கியத்துக்கு லட்சக்கணக்கான வாசகர்கள் இருக்கலாம். ஒரு நூறு வாசகர்கள் மட்டுமே இருக்கலாம். நல்ல இலக்கியம் என்பது நமது அனுபவத்துக்குட் பட்டது. கவிதை என்பதை ரசித்து அனுபவிப்பது என்பதுதான் முக்கியம். 'கவிதை பற்றி அதிகம் சொல்லிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை படித்ததை அனுபவிப்பது முக்கியம்' என்று எஸ்ராபவுண்டு என்கிற கவி விமர்சகர் கூறுகிறார்.

இரண்டாவதாக ஒரு விஷயம். சில விஷயங்கள் சிலருக்குப் பிடிக்கும், சிலருக்குப் பிடிக்காது. சொந்த விருப்பு, வெறுப்புகள் இல்லாவிட்டால் இலக்கிய அனுபவம் ஏற்படாது. என் சொந்த விருப்புகள், வெறுப்புகள் இவற்றிற்கு ஏற்பத்தான் என் வாசிப்பு ஏற்படுகிறது.

### கிதேயின் உலக இலக்கியக் கோட்பாடு

உலக இலக்கியம் என்கிற வார்த்தைச் சேர்க்கையை ஜோஹன் வுல்ஃப் கிதே என்பவர் சென்ற நூற்றாண்டின் இருபதுகளில் உருவாக்கினார். அவருக்குப் பழக்கமான மேலைநாட்டு இலக்கியத்துக்கும், நோக்கங்களுக்கும் மாறு பட்டதாக அவருடைய பார்வைக்கு அப்போது பாரசீகக் கவிஞர் கள் ஷாதி முதலியவர்களும், இந்திய நூல்களாக உபநிஷத்துகள், விஷ்ணுபுராணம், பகவத்கீதை, காளிதாஸனின் கவிதைகள் நாட கங்கள் (முக்கியமாகச் சாகுந்தலம்) முதலியனவும் சீனச் சிந்தனை யாளர்களில் கன்ஃபூஷியஸ், முதலியவர்கள் வந்திருந் தார்கள். இவை மாறுபட்டிருந்ததுடன் இவற்றின் நோக்கமும், இயல்பும் குணாதிசயங்களும் சாதனைகளும் தனி என்று கண்ட அளவில் மேலைநாட்டு இலக்கியங்களுக்கு அப்பாலும் இலக்கி யங்கள் உண்டு என்றும், உலக இலக்கியம் என்று அதற்குப் பெயர் கொடுத்து அவற்றை யெல்லாம் உலக மக்கள் படிக்க வேண்டும் என்றும் எண்ணினார்.

### உலக இலக்கியக் கோட்பாட்டின் வளர்ச்சி

உலக இலக்கியம் என்கிற சிந்தனை கிதேயுடன் நின்று விட வில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலே பலர் - ஆங்கிலேயர்களில் ஸர். ஜான் வ்பரி, ஃபிரெடரிக் ஹாரிஸன் என்று பலர் - இவர்கள் இருவரும் ஆங்கிலேயர்கள் - உலக இலக் கியத்திலிருந்து நூறு நூல்களைப் பொறுக்கி எடுத்து இவற்றைப் படிக்காதவன் படித்தவனல்லன் என்று பட்டியல் போட்டுத் தந்தார்கள். ஷிகாகோ சர்வகலா சாலை, உலகத்துச் சிறந்த நூல்கள் என்று பலவற்றைப் பொறுக்கி எடுத்துச் சில சமயம் சுருக்கியும் ஒரு தொகுதியாக வெளியிட்டிருக்கிறது. எத்தனை பகுதிகள் என்று எனக்கு இப்போது நினைவில்லை. ஐம்பதுக்கும் அதிகம் என்று எண்ணுகிறேன்.

போக்குவரத்துச் சாதனங்கள் அதிகரித்திருப்பதாலும் பல எலெக்ட்ரானிக் சாதனங்கள் தோன்றி ஒரே உலகமாக இவ்வுல கம் செயல்படுவதனாலும் உலக இலக்கியம் என்று ஒரு சித்தாந் தத்தைச் சாதிப்பது மிகவும் சுலபமான காரியமாக இருக்கவேண்

டும். ஆனால் அப்படியொன்றும் சுலபமாகச் சாதித்து விடக் கூடிய காரியமும் அல்ல என்றும் சொல்லலாம். மொழி பெயர்ப்பு களினால் தான் இது சாத்தியமாக வேண்டும். ஒவ்வொரு நல்ல நூலுக்கும், ஒவ்வொரு தலைமுறைக்கும், புது மொழி பெயர்ப்பு கள் வேண்டியதாக இருக்கிறது. ஆங்கிலத்தில், அதுவும் அமெரிக் காவில், பலதரப்பட்ட பரவலான மொழிபெயர்ப்புகள் சாத்திய மாக இருக்கின்றன. இந்தியாவில் அத்தனை மொழிபெயர்ப்பு கள் வருவதில்லை. தமிழில் மொழிபெயர்ப்பில் நூல்கள் வருவது மிகவும் குறைந்து விட்டது. நாற்பதுகளில், ஐம்பதுகளில் இப்படியில்லை.

பெயர்களை நான் அதிகமாகச் சொல்லப் போவதில்லை. எல்லாப் பெயர்களையும் பேச்சுவாக்கில் காதில் வாங்கி மனத்தில் இருத்திக் கொள்வது சிரமம்.

**உலக இலக்கியத்தில் காவியங்கள் பெறுமிடம்**

கவிதை என்கிற விஷயத்துக்கு வந்தோமானால் அதில் காவியங்கள் என்கிற பகுதியை முதலில் கவனிக்க வேண்டும். இது மிகவும் சக்தி வாய்ந்த பகுதியாக உலகத்து மக்களைப் பாதித்திருக்கிறது. மக்களின் பொது அறிவில் காவியங்கள் பற்றிய அறிவும், பாதிப்பும் கணிசமாகவே இருக்கின்றன.

**அண்மைக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ஆதிகாவியம்**

ஐரோப்பிய இலக்கியத்துக்கும், கிரேக்க இலக்கியத்துக்கும் ஆதிகவியாக ஹோமரைக் கருதுவது மரபு. ஆனால் அதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த ஒரு காவியத்தை இப்போது கண்டுபிடித்தார்கள். அதன் பெயரே மக்கள் நினைவி லிருந்து மறைந்து விட்டபோதிலும் அது பைபிளின் முதல்பகுதி, ஹோமர், வால்மீகியையும் கூடப் பாதித்திருப்பது தெரி கிறது. இந்தக் காவியம் கி.மு.சுமார் 2500 அல்லது 3000 ஆண்டில் வழக்கில் இருந்ததாகவும் க்யூனிஃபார்ம் என்கிற முக்கோண வடிவப் பாபிலோன் பிரதேச மொழியில் சுலபமாகக் கண்ணில் படாத மலைகளில் பொறித்து வைத்திருப்பதாகவும், அதைக் கண்டுபிடித்து வாசித்து உருவாக்கியதே ஒரு காவியம் போலச் சொல்லவேண்டும் என்றும் சொல்கிறார்கள். இந்தக்காவியம் ER'c of Gil Gamesh என்ற ஆங்கில மொழிபெயர்ப்பில் பெங்குவின் நூலாகக் கூட வெளிவந்திருக்கிறது.

கதை அளவில் வீர காவிய மரபைச் சேர்ந்தது கில்காமெஷ். கில்காமெஷ் என்கிற வீரன் தன்னை விடப் பலசாலி உலகில்

இல்லை என்று இறுமாந்து அகங்காரம் பிடித்தவனாக ஆட்சி செலுத்துகிறான். ஜனங்களுக்கு அவன் நல்லதுதான் செய்கிறான், கொடுங்கோலன் அல்லன், என்றாலும் அவன் கொட்டத்தை அடக்க அவனைப் போன்ற இன்னொரு பலசாலியை உற்பத்தி பண்ணித் தரவேண்டும் என்று ஜனங்கள் தங்கள் தேவனை வேண்டுகிறார்கள். அப்படியே ஒரு பலசாலியை உற்பத்தி செய்து தருகிறான் அவர்கள் தேவன். இவன் பலம் பற்றிக் கேள்வியுற்றுக் கில்காமெஷ் அவனை மல்யுத்தப் போட்டிக்கு அழைக்கிறான். இருவரும் பதினைந்து நாட்கள் ஒருவருக்கொருவர் சளைக்காமல் யுத்தம் செய்கிறார்கள். ஒருவரும் செலிக்கவுமில்லை; தோற்கவும் இல்லை. போட்டி வியர்த்தம் என்று முடிவு கட்டிக் கொண்டு இருவரும் இணை பிரியாத நண்பர்களாகி விடுகிறார்கள். இருவரும் பல வீரச் செயல்களைப் புரிகிறார்கள். ஆனால் நாளடைவில் ஒரு மந்திர வாதி காரணமாகக் கில்காமெஷின் நண்பன் இறந்து விடுகிறான். நண்பனின் பிரிவைத் தாங்க மாட்டாமல் கில்காமெஷ் உத்தான பிஷ்டம் என்கிற உலகில் நித்தியமாக இருக்கும் ஒருவனைத் தேடிப்போய் பல சாகஸங்களுக்குப் பிறகு உலகில் மனிதர்கள் சாகாமல் வாழ்வதற்கான ஒரு கடல் மூலிகையைப் பெற்றுக் கொண்டு அதைக் கொண்டு தன் நண்பனை உயிர்பித்து விடலாம் என்கிற நம்பிக்கையுடன் ஊர் திரும்புகிறான். வழியில் ஒரு மகர மீன் அந்த மூலிகையை விழுங்கி விடுகிறது. கில்காமெஷ் தவிர்க்க முடியாதது இது, விதிக்கப்பட்டது, என்று உணருகிறான் என்பது கதை. இதில் நவரஸங்களுக்கும் இடம் தந்து காவியம் அமைத்திருக்கிறார்கள். இதைக் கவனம் செய்தவர்கள் சிநேகிதம், அன்பு, காதல், வீரம், கருணை என்பதெல்லாம் தூக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. இன்றுள்ள அறிவு எட்டுகிற வரையில் இதைத்தான் முதல் உலக இலக்கிய நூலாகக் கருத வேண்டும். அந்த அளவுக்கு இதைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன்.

காவிய இலக்கியத்தில் ஹோமரின் பங்களிப்பு

ஹோமர் என்பவரின் பெயரில் வழங்குகிற காவியங்கள் இரண்டு. இலியாதும், ஒடிஸியும். டிராய் நகரைப் பத்து வருஷங்கள் முற்றுகையிட்ட கிரேக்கர்கள் தங்கள் கிரேக்க சகோதரர்களின் நகரத்தை வஞ்சனையினால் தீக்கிரையாக்கி விடுகிறார்கள். இந்தப் போரில் ஒரு சிறுசம்பவம்தான் இலியாதின் விஷயம். அக்கிலிஸ் என்கிற மாவீரன் ஒரு அல்ப விஷயத்துக்காகக் கோபித்துக் கொண்டு போரிலிருந்து விலகிக் கொள்கிறான்.

அக்கிலிஸ் இல்லாததால் ஏற்பட்ட தைரியத்தில் ட்ராய் நகரத்து வீரர்கள் கிரேக்கர்களின் ஒரு கப்பலைக் கொளுத்தி விடுகிறார் கள். பட்ராக்ளின் என்ற அக்கிலிஸின் நண்பன் ஹெக்டர் என்கிற ட்ராய் ராஜகுமாரன் கையில் சாகிறான். அத்தியந்த நண்பனை இழந்த அக்கிலிஸ் கோபம் கொண்டு எழுந்து போர் செய்து ஹெக்டாரைக் கொன்று, அவன் உடலைத் தேர்க்காலில் கட்டிப் போர்க்களத்தில் டிராய் நகரைச் சுற்றி மூன்று முறை இழுத்து வருகிறான். ஹெக்டாரின் தகப்பன்-கெஞ்சிக் கேட்டு ஹெக்டாரின் சடலத்தை மீட்டுப் போய் உரிய சடங்குகளுடன் தகனம் செய்கிறான்.

வீரத்தைப் போற்றுகிற காவியம் என்று இதைச் சொன் னாலும் அதே சமயம் வீரத்தின் வியர்த்தத்தையும் சொல்லு கிறார் கவி என்பது அவர் பெருமை. ராமாயணத்தில் ராமன் அளவுக்கில்லா விட்டாலும் பெரியவனாகவே ராவணனை வான் மீகி காட்டுகிற மாதிரியே ஹோமர் அக்கிலஸைவிட பலவற்றில் உயர்ந்தவனாக ஹெக்டாரைக் காட்டுகிறார் தரும நியாயங்களினால் மதிப்பு வைக்காத கிரேக்க தேவ தேவிகளின் போக்குகளைக் கிண்டல் செய்கிறார் கவி என்று ராபர்ட் க்ரேஸ் போன்ற நவீன கவிகள் இன்று அபிப்பிராயப்படுகிறார்கள். காவியம் என்றால் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு முன் மாதிரியாக அமைந்த காவியம் ஹோமரின் இலியாது.

ஒடிஸியை ஹோமர் எழுதவில்லை என்று ஒரு கட்சி உண்டு. வீரத்துடன், குடும்ப வாழ்வு, புருஷன் மனைவி இருபது ஆண்டு களுக்கு மேல் பிரிந்திருந்தாலும் ஒருவருக்கொருவர் அன்பு குறை யாமை, யஜமான விசுவாசமுள்ள நாய், அடிமை என்றெல்லாம் பல வேறுபட்ட விஷயங்கள் ஒடிஸியில் இடம் பெறுகின்றன. ஒடிஸியில் சாகஸமும், புத்தி சாதுர்யமும் உலகில் உள்ள இடைஞ்சல்கள், இன்பங்கள் எல்லாம் இதில் இடம் பெறு கின்றன. இலியாதைவிட இதை அதிகம் சிறப்புள்ள காவிய மாகக் கருதுகின்றனர். பத்து ஆண்டுகள் அலைக் கழிக்கப்பட்டு ஒடிஸியஸ் தன் மகனையும், மனைவியையும் இருபது ஆண்டுகள் பிரிவுக்குப்பிறகு (ட்டிராய் முற்றுகை பத்து ஆண்டுகள் நீடித்தது) சென்று சேர்வதை வீரகாவியமாகத் தீட்டியிருக்கிறார் ஹோமர்.

ஹோமரைப் பற்றி நிச்சயமாக ஒரு விவரமும் தெரிய வில்லை. எங்களூரில் பிறந்தவர் என்று அவரைப் பத்து ஊர்கள் போட்டி போட்டுக் கொண்டு சொந்தம் கொண்டாடுகின்றன என்று சொல்லுவார்கள். ஹோமர் குருடர் என்று ஒரு செய்தி

யும் பிற்காலத்திலிருந்து வந்திருக்கிறது. அதுவும் எவ்வளவு தூர உண்மை என்பது தெரியவில்லை. கி. மு. எட்டாவது நூற்றாண்டில் தோன்றிய இந்தக் காவியங்கள் லைர் என்கிற கிரேக்க இசைக்கருவி பின் தொடரக் கிரேக்கக் குறுநில மன்னர்கள் சபையில் பாடப் பட்டதாகவும், அக்காலத்தில் வழக்கிலிருந்த பல காவியங்களில் சிறந்த இலக்கியமாக இவை இரண்டும் நிலைத்து விட்டன என்றும் அனுமானிக்கலாம். இலக்கிய மேன்மையில் மட்டும் உலகின் கவனத்தைக் கவர்ந்த நூல் இது என்பது இதன் தனிப் பெருமையாகும்.

## உலக இலக்கியத்தில் இந்தியக் காவியங்கள்

அடுத்துச் சொல்ல வேண்டிய சிறப்பான இரு உலகக் காவியங்கள் இராமாயணமும், மகாபாரதமும். இலக்கிய அளவிலும், மக்கள் மதிப்பிலும் இவை இரண்டுக்கும் ஹோமருக்கு உள்ள அளவு மேன்மைகள் உண்டு.

ராமாயணத்தில் காருண்யம் என்பதை அடிநாதமாகக் கொண்டு ஒரு காவியத்தை உருவாக்கியிருக்கிறார் என்பது பிற்கால இலக்கிய விமர்சகர்கள் (அபிரவ குப்தா, ஆனந்த வர்த்தன்) ஏற்படுத்தித் தந்த ஒரு மரபு. ஹோமரில் மனிதனின் மேன்மையான குணாதிசயங்கள் வெளிப்படவில்லை. வால்மீகி மனிதனின் High Water Mark என்று மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் குறிப்பிட்ட மாதிரி ராமனைச் சிருஷ்டிக்கிறார். கவிதை அளவிலும் இந்தியக் கவிதையைத் தொடங்கி வைத்த காவியம் இது. ஆதிகவி என்று வால்மீகியைப் போற்றுவது மரபு.

வியாஸர் என்கிற பெயர் மகாபாரதத்துடன் பிணைத்துச் சொல்லப்பட்டாலும் பாரதத்துக்கு உள்ள மூன்று உருவங்களையும் அவரே படைத்தாரா என்பது தெரியவில்லை. மகாபாரதத்தின் அடிநாதம் இது என்று குறிப்பிடுவது இந்திய விமரிசன மரபில் இல்லை. அதைத் தருமம் என்று குறிக்கலாம் என்று தோன்றுகிறது. எந்தக் காலத்திலுமே தருமம் என்பது சிக்கலானது. சுலபமாகக் கண்டுபிடிக்க முடியாதது. தருமசங்கடமான நிலைமைகளைச் சிருஷ்டித்து அவற்றை விடுவிப்பதையும் காவிய நயத்துடன் மகாபாரத ஆசிரியர் செய்திருக்கிறார்.

இந்திய இலக்கியம் என்கிற பெருமாளிகை இந்த இரண்டு காவியங்களின் பலமான அஸ்திவாரத்தின் மேல்தான் எழுந்திருக்கிறது என்று சொல்லலாம்.

## உலகக் காவியங்களில் விடுபட்ட இரு உலகக் காவியங்கள்

இந்தப் பேச்சுக்கு முன்னுரையாகத் தலைவரால் வாசிக்கப்பட்ட 'வ.வே.சு. ஐயரின் கவிதை' என்கிற கட்டுரையில், ஒன்பது பத்துக் காவியங்களைச் சிறந்த உலகக் காவியங்களாக அய்யர் குறிப்பிடுகிறார். ஓரிரு காவியங்களை அவர் விட்டு விட்டார். இந்தப் பத்திருபது எஞ்சியிருக்கிற காவியங்களில் இரண்டு ஹோமர், வான்மீகி என்பவர்களின் தரத்துக்கு வருவதாக என் நினைப்பு. ஒன்று இத்தாலிய மொழியில் எழுதப்பட்ட டாண்டேயின் தேவ ஜீவனம், இரண்டாவது தமிழில் எழுந்த தனிப்பெருங் காவியமான இளங்கோவின் சிலப்பதிகாரம்.

இரண்டுக்கும் உள்ள ஒற்றுமையை விரிவாகப் பார்க்க வேண்டிய அவசியம் உண்டு. இங்குச் சுருக்கமாகச் சொல்கிறேன். இரண்டு காவியக் கர்த்தாக்களும் பூர்ண விமரிசன அறிவுடன் தெரிந்து சில விஷயங்களை ஒதுக்கி விட்டுச் சில விஷயங்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டு கவிதை செய்கிறார்கள். இரண்டு காவியங்களும் சமய ஒழுக்க நீதி நெறிகளைச் சொல்ல முன் வருகின்றன—டாண்டே கத்தோலிக்கக் கிறிஸ்துவத்தையும், இளங்கோவடிகள் சமண ஹிந்து நீதி நெறியையும் சொல்லுகிறார்கள். மூன்றாவதாக, டாண்டேயின் காவியம் மனிதன் கடவுளை எட்டுவதைக் குறிப்பாகக் காட்டுகிறது. இளங்கோவின் காவியம் ஒரு மனிதன் தேவனேயாகிக் கோயிலில் குடியேறுவதைக் காட்டுகிறது. இந்த இரண்டுமே வீர காவியங்கள் அல்ல.

இன்னும் பல ஒற்றுமைகள் சொல்லலாம். விரிவாகச் சொல்லி ஸ்தாபிக்க வேண்டிய விஷயம் அது. இங்கு விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். தமிழில் கம்பனைத்தான் சிறந்த காவிய கர்த்தாவாகச் சொல்வது ரசனை மரபாக இன்று வரை வந்திருக்கிறது. ஆனால் இலக்கிய விமரிசன ரீதியில் இளங்கோவின் சிலப்பதிகாரம்தான் தமிழில் உயர்ந்த காவியமாகப் போற்றப்பட வேண்டும் என்பது என் நினைப்பு. கம்பன் பல தனிப்பட்ட மாறுதல்களுடன் வான்மீகி காவியம் செய்ததையேதான் எடுத்துக் கையாளுகிறார். உலக அரங்கில் ஒரு தரம் ஏறிய கதை அது. சிலப்பதிகாரம் தமிழில் மட்டும் தோன்றி முதல் தடவையாகக் காவியம் ஆனது. உலக அரங்கில் அதுவரை இல்லாத ஒன்றைத் தருகிறது. கவியாகக் கம்பனுக்கும் இளங்கோவுக்கும் ஏற்றத் தாழ்வு சொல்ல இயலாது; இருவரும் கவி காரியத்தைப் பூரணமாகச் செய்தவர்கள்.

ஒரு காலத்தில் ஜான்மில்டனைப் பெரும் காவிய கர்த்தா வாக மதித்தார்கள். அதே போல அதிக காலம் வர்ஜீல் என்கிற லத்தீன் காவிய (எனியட்) கர்த்தாவையும் பெரிதாக மதித் தார்கள். இதேபோல, பல தரப்பட்ட காவியங்கள் உள. ஆங்கிலோ ஸாக்ஸனில் போ∴வுல்∴ப் ஸ்காண்டிநேவிய ஸாகாக்கள் பெர்சிய-∴பிரதெனஸின் ஷாநாமா, அசுவகோஷரின் புத்தசரிதம் என்று பல சொல்லலாம். இந்தக் காலம் காவியங்கள் எழுத அனுசரணையாக இல்லை என்றும் சொன்னாலும்கூட இந்தக் காலத்தில் கூடக் காவியங்கள் எழுதப்படுகின்றன. நிகாஸ் காஸ ரண்ட்ஸகிஸ் என்பவர் மீண்டும் இதாகா விட்டுக் கிளம்பிய ஒடிஸியஸ் பல கடல்களில் சுற்றித் திரிந்ததை ஒரு காவியமாக, நவீன கிரேக்க மொழியில் எழுதியிருக்கிறார். கார்ஸ் ஸ்பிட்டலர் என்கிறவர் ஜெர்மன் மொழியில் கிரேக்க ஒலிம்பஸ் தேவ தேவி களைப் பற்றி ஒரு காவியம் செய்து அதற்காக 1919-ல் நோபல் இலக்கியப் பரிசு பெற்றார். தாமஸ்மன் என்பவர் பைபிளில் ஒரு சம்பவத்தை எடுத்து 1500 பக்கங்களில் ஜோஸ∴ப்பும் அவன் சகோதரர்களும் என்று நான்கு பாகங்களாகக் காவியச் சுவை மேம்பட வசனத்தில் எழுதியிருக்கிறார். இப்படிப் பல சொல்ல லாம்.

**மனித இனத்தின் முதல் இலக்கிய வடிவம் கவிதையே**

காவியங்களைப் பற்றி இவ்வளவு போதும். இப்போது கவிதை என்று பார்க்கலாம்.

பொதுவாக உலக மொழிகளில் எல்லாம் கவிதைதான் முதலில் தோன்றியது என்று ஒரு நினைப்பு இருக்கிறது. அப்படி முழுவதும் சொல்லிவிட முடியாது என்றே தோன்றுகிறது. சீனத்தில் ஆரம்பக் காலத்தில் கவிதை இருந்திருந்ததால் அது இன்று வரை வந்திருப்பதாகத் தெரியவில்லை. ஜப்பானில் கவிதையும், வசனமும் சற்றேறக் குறைய ஒரே காலத்தில் தோன்றியதாகவே தெரிகிறது. இப்படிச் சில மொழிகளில் மாறு பட்டாலும் பொதுவாக இலக்கியம் கவிதையாகத் தான் சமுதாயங்களில் உருவாகியிருக்கிறது என்று சொல்லலாம்.

அமெரிக்க இகாக்களின் கவிதையை யுனெஸ்கோ ஒரு நூலாகப் பிரசுரித்திருக்கிறது. அதேபோல், இந்திய மலைவாழ் மக்கள் கவிதைகளைப் பலர் மொழி பெயர்த்துத் தந்திருக் கிறார்கள். இலக்கியமாக உருவாகிய பல கவிதைகளையும் விட இதில் சக்தியும், வேகமும், நேரடித் தாக்கமும் அதிகமாக இருப்பது போலத் தோன்றுகிறது. அது ஒரு வகைக் கவிதை

உலகில் பல பாகங்களிலும் பரவலாகக் கிடைக்கிற, காணக் கிடக்கிற அற்புதமான கவிதை. சமீப காலத்தில்தான் இதெல்லாம் பற்றிய ஆராய்ச்சிகள் விரிவாக நடக்கின்றன.

முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன் Great Poems of the West என்று ஒரு பெரிய நூல் வழக்கிலிருந்தது. இப்போது அது கிடைக்குமா என்று தெரியவில்லை. அந்த நூலில் முதற்கவிதைகள் எகிப்தில் கி.மு. 3000 ஆண்டில் எழுதப்பட்டதாக வெளியாகியிருக்கிறது. அதுதான் முதல் உலகக் கவிதையா? என்பதும் நிச்சயமாகத் தெரியவில்லை.

**உலகக் கவிதைகளின் போக்கு**

கவிதைகள் மொழி அடிப்படையில் உருவாவது மட்டுமல்ல பூகோள, பிராந்திய, சீதோஷ்ண நிலைகளாலும் உருவாகின்றன. தேசத்துக்குத் தேசம், பிராந்தியத்துக்குப் பிராந்தியம், கவிதை மரபு வித்தியாசப்படுகிறது. இந்த வித்தியாசங்களுக்கு அப்பாற்பட்டதாக ஓர் உலக கவிதை மரபு உருவாவதும் நமக்குத் தெரிகிறது என்று சொல்லலாம். ஒரு மொழியில் உள்ள கவிதைகளையே அறிந்து கொள்ள ஒரு வாழ்நாள் போதுவதில்லை. மறுபிறப்பிலும் தொடர்பு விட்டுப் போகாமல் இருந்தால் நல்லது என்று தோன்றுகிறது. பல ஜென்மங்கள் வேண்டும் கவிதையை அனுபவிக்க. மாணிக்கவாசகர், நடராஜ உருவத்தை அனுபவிக்க மானுடப்பிறவியும் வேண்டியதே என்று பாடியதுபோல.

வேதகாலத்துக் கவிதைகளில் இயற்கையையும், அதன் சக்திகளையும் கண்டு வியந்து கவிதை செய்திருப்பது தெரிய வருகிறது. உஷஸ் என்றும், இரவு என்றும் பல பாடல்கள் மனித அறிவு அனுபவத்தின் சிகரங்களாக இடம் பெற்றுள்ளன.

ஹிப்ரு தீர்க்கதரிசிகள் மக்கள் போகிற போக்கை அவர்கள் காலத்தில் கண்டு மனிதகுலத்தையே உருப்படமாட்டாய் என்று சபிப்பது போலத் தீர்க்கமாகச் சாபக் கவிதைகள் செய்திருக்கிறார்கள். இந்த அளவுக்குச் சாபக் கவிதைகள் இந்தியப் புராணங்களில் இடம் பெற்றதாகத் தெரியவில்லை. சாபங்கள் இருக்கும், நிவர்த்தியும் இருக்கும். சுருக்கமாக, அவசரமாக முடிந்து விடும். ஹிப்ரு சாபக் கவிகள் இலக்கிய நயத்துடன் அன்றும் இன்றும் மனித குலத்துக்குப் பொருந்துவதாகப் பைபிளில் இடம் பெற்றுள்ளன.

சீனத்துக் கவிதைகளில் யதார்த்தமும், லட்சிய வேகமும் கலந்து வருவது ஒரு சிறப்பு. குஃபூ, லீபோ என்று பல மகாகவி

கள் சீன இலக்கியத்தை அலங்கரித்திருக்கிறார்கள். ஒரே ஒரு சுருக்கமான கவிதை மட்டும் சொல்லுகிறேன் நினைவிலிருந்து.

**உதாரணத்திற்கு ஒரு சீனக்கவிதை**

ஞூஉகி என்னும் ஒரு சீனக்கவி கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். பல பெரும் பதவிகளை வகித்து விட்டு நடுவயதில் அவற்றையெல்லாம் இழந்து ஏழையாக மலைச்சரிவில் ஒரு கிராமத்தில் வசிக்கிறான். அவனை ஒருவரும் வந்து தொந்தரவு செய்வதில்லை. வறுமையில், கிடைப்பதைச் சாப்பிட்டுக் கொண்டு எழுபது வயது தாண்டிவிட்டான். ஊரில் பிறந்த ஒரு குழந்தைக்கு நாமகரணம் செய்கிற சடங்குக்கு ஒரு ஏழைப் பெற்றோர் அவனைத் தெரியாத்தனமாக அழைத்து விட்டனர். அவரிடம் இனாம் தர எதுவுமில்லை. பிறந்து பதினோரு நாள் ஆன குழந்தைக்கு ஒரு கவிதை எழுதித் தருகிறான். அந்தக் கவிதை பின்வருமாறு அமைந்தது.

> "என் அறிவை நான் பூரணமாக வளர்த்துக் கொண்டு புத்திமான் என்று பெயர் பெற்றுப் பதவி வகிக்கத் திறனில்லாமல் வறுமையில் வாடுகிறேன். குழந்தாய்! நீ வளர்ந்து பெரியவனாகி அறிவேயில்லாமல் வாழ்ந்து பெரியவனாக மந்திரியாகிச் சுகப்படுவாயாக என்று எனக்குத் தெரிந்த தேவனை வேண்டுகிறேன்".

இது ஒரு மாதிரிக் கவிதை. இந்த மாதிரி நடப்பு அறிவு அதிகமுள்ள கவிதைகள் சீனத்தில் அதிகம் உண்டு. வேறு இயற்கையைப பாடும் கவிகளும், வாழ்க்கை நிலையாமை பற்றிய கவிகளும் உண்டு.

இந்தியாவிலும் சமஸ்கிருதத்தில், தமிழில், மற்ற மொழிகளிலும் இந்த மாதிரிக் கவிதைகள் உண்டு.

தர்மகீர்த்தி என்பவர் பாடிய கவிதை:

> "ஏ நிஜ அன்னமே, இங்கு நீ வராதே; இங்கு வாத்துகள் அன்னம் என்று சொல்லி நடைபோடுகின்றன. நிஜ அன்னமான
> உன்னைக் கண்டால் அவை கொன்று போட்டு விடும்".

வேறு ஒருவர் பாடுகிறார்!

> "காதுக்கு ஆபரணங்கள் செய்கிற கலைஞரே! இங்கு ஏன் வந்தீர்! இந்தத் தேசத்தில் உள்ள ஒருவருக்கும் காதுகளே இல்லை என்று உமக்குத் தெரியாதோ!"

ஜப்பானில் கவிதை 8ஆவது நூற்றாண்டு முதல் வழக்கி லிருந்து வந்திருப்பதாகத் தெரிகிறது. சங்கத் தொகுப்பு நூல் போல 4440 கவிதைகள் அடங்கிய ஒரு பழங்கவிதைத் தொகுப்பு வெளியாகி இருக்கிறது. மன்யோஷா என்று பெயர். பிரிவு, அன்பு, காதல், போர், வீரம் என்று பல விஷயங்களைப் பாடுகிற கவிதைகள் உண்டு.

**கையேந்திக் கவிகள்**

தமிழில் சங்க இலக்கியத்தில் உள்ளது போலக் "கையேந்தும் கவிதைகள்" இதில் இல்லை என்பது கவனிக்க வேண்டிய விஷயம். எந்தச் சமுதாயக் கட்டாயத்தில் தமிழில் இத்தனை கையேந்தித் தருமவான்களைப் புகழும் கவிதைகள் உண்டாயின என்பது தெரியவில்லை. ஏற்பதிகழ்ச்சி என்று சொல்லிக் கொண்டே புலவர்கள் கொடுப்பவர்களைத் தேடியலைந்திருப் பது தமிழில் ஒரு மரபாக வந்திருக்கிறது. நானும் அந்த மரபில் வந்தவன்தான். இது ஏன் என்று ஆய்ந்து பார்ப்பது அவசியம்.

**கிரேக்கக் கவிதைப் போக்கு**

கிரேக்க இலக்கியத்தில் நடுப்பகுதியில் பல சில்லறைக் கவிதைகள் தோன்றின. துளக்ரியான், பிண்டார், ஸாஃபோ என்று பலர் தோன்றினர். ஸாஃபோ என்கிற கவியரசி பற்றி ஒரு வார்த்தை. அவள் லெஸ்பாஸ் என்கிற தீவில் பெண்கள் பள்ளிக் கூடம் நடத்தியதாகத் தெரிகிறது. பெண் அழகில் ஸ்பெஷலிஸ்டு என்று சொல்ல வேண்டும். பெண்களைக் காதலிப்பதை ஸாஃபிக் லவ், லெஸ்பியன் லவ் என்று சொல்வது இங்கு இவரு டன் தொடங்குகிறது. இவர் கவிதைகள் பெண்களின் அழகை யும் காதலையும் பாராட்டுவதாக அமைந்துள்ளன. இவருடைய கவிதைகளில் ஒன்றுகூட முழுசாகக் கிடைக்கவில்லை என்றாலும் கிடைக்கிற பகுதியிலிருந்து இவருடைய உணர்ச்சி வேகமும், வார்த்தைத் திறனும் கவிதாசக்தியும் உலகம் பூராவையும் கவர்ந்த ஒரு விஷயம்.

**வள்ளுவர் குறள் வடிவத்தைக் கையாண்டது ஏன்?**

கிரேக்க லத்தின் மொழிகளில் எபிக்ரம்ன் என்கிற அளவில் சொற்செட்டுடன் செயலாற்றுகிற கவிதைகளைச் சிருஷ்டித்தார் கள். ஓர் உதாரணம்:

"அவள் பேச்செல்லாம் பெண் அழகு பற்றியும்
பெண்களோடு பழகுவது பற்றியும்தான் இருக்கிறது.

என்றாலும் அவன் மனைவி ஒரு பிள்ளையைப் பெற
இரண்டு பேருடன் சோரம் போக வேண்டியிருந்தது''.

இந்த அளவுக்குச் சொற்செட்டு என்பதைத் திருவள்ளுவரில் நாம் காணமுடிகிறது. குறள் என்கிற உருவம் ஆசிரியருக்கு எப்படிக் கிடைத்தது என்று யோசித்துப் பார்க்கும் போது எனக்கு ஒன்று தோன்றுகிறது. அவர் தன் மனைவியிடமும், தாயாரிடமும் கேட்ட பழமொழிகளைப் போல இலக்கியமாகச் செய்து பார்க்க ஆசைப்பட்டுச் செய்திருக்கிறார். அனுபவமும், வார்த்தைகளும் ஒருங்கிணைந்து இழைந்து வந்த கவிதைகள் என்று உலகில் குறள் போலத் தேடினாலும் ஒரு சிலவேதான், மிகச் சிலவேதான் கிடைக்கும்.

## இந்தியக் கவிகளுக்கு மேல்நாட்டுக் கவிகளின் தாக்கம்

பொதுவாக மேலைநாட்டுக் கவிதைப் போக்குகள் நம்மில் பலருக்குத் தெரியும். ஆங்கிலப் படிப்பின் மூலம் முதலில் இந்தியாவில் பாதிப்பை ஏற்படுத்திய போக்கு ஷெல்லி, கீட்ஸ், வேர்ட்ஸ்வர்த், டென்னிஸன், எட்வின் ஆர்னால்டு என்கிற பத்தொன்பதாம் நூற்றாண்டுக் கவிகளில் ரொமாண்டிக் கவிதைத் தாக்கம். அதிலும் புரட்சியில் நம்பிக்கையுள்ள ஷெல்லிதான் கவியாக அதிகமாகத் தாக்கம். ஷெல்லியிடம் நமது ஆரம்ப கால நவீன கவிகள் பலருக்கு அபாரநம்பிக்கை. தாகூர், பாரதியார், குமாரன் ஆசான் என்பவர்கள் எல்லோரும் ஒரு காலத்தில் தங்களை ஷெல்லிதாஸன் என்று சொல்லிக் கொண்டதாகவே தெரிகிறது.மைக்கேல் மதுசூதனன் தத் என்பவரை வங்கமில்டன் என்று சொல்லுகிற பழக்கமும் இருந்தது.

பழங்காலக் கவிகளில் அலெக்ஸாண்டர் போப், ஜான்டிரைடன், ஜான்ஸன் என்கிற ரொமாண்டிக் கவிகளுக்கு முந்திய கவிகள் படிக்கப் பட்டாலும் பரவலாக இந்தியாவில் படிக்கப்படவில்லை. வில்லியம் ஷேக்ஸ்பியரை நாடகாசிரியராக மட்டும் கருத இயலாது. மிகச்சிறந்த கவியாகவும் கருதவேண்டும். அவர் எழுதியுள்ள ஸானெட்டுகள் மிகவும் சிறப்பானவை என்பதும் அவர் கவிதை செய்கிற போது ஒரு நித்தியத்துவின் எல்லையை எட்டிவிடுகிறார் என்றும் சொல்லலாம். ஆண்ட்ரூ மார்வெல், மற்றும் நாடகம் எழுதிய கிறிஸ்டஃபா, மார்லோ முதலியவர்கள் நல்ல ஆங்கிலக் கவிகள். சாஸர் என்பவருடன் நவீன ஆங்கிலக் கவிதைத் தொடங்குகிறது. அதற்கு முன் 'மிடில் இங்கிலீஷ் என்றும் பழைய ஆங்கிலம் என்றும் மாறுபட்ட மொழிகளில் இலக்கியம் இருந்து வந்திருக்கிறது.

**ஐரோப்பியக் கவிதை இலக்கியப் போக்கு**

ஐரோப்பியக் கவிதை இலக்கியத்தை மிகவும் பாதித்தவர்கள் என்று 'புரொவன்ஸல்' கவிஞர்களைச் சொல்ல வேண்டும். கிறிஸ்தவக் க்ரூஸேடுகள் நடந்த காலத்தில் பிரபுக்கள் வீரர்கள் புடை சூழப் போருக்கும் போய் விடுவார்கள். அவர்கள் மனைவிமார்கள் காதல் வேண்டித் தவிப்பார்கள். இந்தக் காதல் தவிப்பை (உடல் அளவில் இல்லாமல் மனஅளவில்) தீர்ப்பவர்களாகப் 'பிரபடார் புரொவன்சல்' கவிகள், ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டு போய்த் தங்கள் கவிதை உருவங்களுக்குக் காரண கர்த்தாக்களாக விளங்கினார்கள் என்பதுடன் பிற்காலத்தில் ஐரோப்பா பூராவிலும், ஏன், இன்று இந்தியத் தமிழ் இலக்கியங்களும் கையாளும் காதல் என்கிற ஒரு சித்தாந்தத்துக்கும் பிதாமகர்கள் ஆனார்கள் என்று சொல்லலாம். எஸ்ரா பவுண்டு என்பவர் இந்தப் புரொவன்ஸல் கவிகள் பற்றி நிறையவே எழுதியிருக்கிறார். படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

'ஸானெட்' என்கிற 14 வரிக் கவிதை அதன் சக்தி வாய்ந்த உருவத்தில் இத்தாலியில் தோன்றி ஐரோப்பாவில் பரவிற்று என்று சொல்வார்கள். தன் மானஸிக நித்திய காதலி பியாட்ரிஸையும் அவள் தனக்கு அளித்த புது வாழ்வு பற்றியும் டாண்டே நூறு ஸானெட்டுகள் எழுதியிருக்கிறார். உலகத்தின் மிக அற்புதமான கவிதை என்று அதைச் சொல்ல வேண்டும்

மக்கள் கதைகளைச் சொல்லும் பாவகம், மற்றும் பல நாடகரீதியான கவிதைகளும் அந்தந்த மொழிகளுக்கேற்ப வெவ்வேறு மொழிகளில் உண்டாகிச் சில சமயம் வேறு இடங்களுக்கும் பரவியிருக்கின்றன. 'லிரிக்' என்கிற உருவம் கிரேக்க "லைர்" இசை வாத்தியத்துக்குப் பொருந்தப் பாடுகிற வழக்கத்தில் ஏற்பட்டுத் தன் உணர்ச்சிகள் சொல்கிற கவிதைகளுக்கு என்று பெயர் சொல்வது பரவியது. அதைக் குறுந்தொகைக் கவிதைகளுக்கு உபயோகிப்பது வழக்கிலிருந்தாலும் சரியல்ல என்றே எனக்குத் தோன்றுகிறது.

கவிதை நாடகங்கள் பல மொழிகளில் தோன்றியுள்ளன. கவிதைச் சிறப்புடன் நாடகச் சிறப்பும் பெற்று அவை உயர்வு பெறுகின்றன.

பெருங்காவியங்கள் தவிர, சிறு காவியங்களும், குறுங் காவியங்களும் பல மொழிகளில் உள்ளன. சமஸ்கிருதத்தில் காளிதாஸனின் மேகசந்தேகம், குமாரஸம்பவம், ரகுவம்சம் என்ப

வற்றைச் சிறு காப்பியங்களாக ஏற்றுக் கொள்ளலாம். அதே போலத் தமிழிலும் வேறு பல இந்திய மொழிகளிலும் உண்டு. பல ஐரோப்பிய மொழிகளிலும் சீனத்திலும், ஜப்பானிலும், கொரியாவிலும் குறுங் காவியங்கள் இருக்கின்றன.

மொழிவளம், மரபு, பிராந்தியப் பழக்க வழக்கங்கள் இவற்றால் கட்டுப் படுத்தப்பட்டுத் தான் கவிதை சிருஷ்டியாகிறது. என்றாலும்கூட இவற்றைத் தாண்டி ஒரு மனித குலத் தன்மையையும் பொது உலகையும், உணர்ச்சியையும், காலம் கடந்த ஒரு தன்மையையும் காட்டும் போது தான் உலகக் கவிதை என்பது தோன்றுகிறது. இதை உலகத்தின் சொத்தாகத் தங்கம், வயிரம், என்பதுடன் சேர்த்துக் கணிக்க வேண்டும் என்றே சொல்ல வேண்டும்.

### கவிதை உலகின் புதிய போக்கு

தொன்று தொட்டு வந்திருக்கிற கவிதை உலகில் நவீன காலம் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டைக் குறிப்பிடலாம். விஞ்ஞானம், தொழில் வளம் என்பதெல்லாம் ஏற்பட்டதுடன், கலோனியல் ஆதிக்கத் தேய்வு, தொழிலாளர் வர்க்க மேன்மை. மார்க்ஸியம், மனோதத்துவத்தில் சிக்மண்ட் பிராய்ட், அதற்கு முன் சார்லஸ் டார்வின் என்பவர்கள் எல்லாம் தோன்றி இலக்கியத்தில் மனிதச்சிந்தனையில் கவிதைகளில் ஒரு மாறுதலைத் தோற்றுவித்தார்கள்.

'எட்கர் ஆலன் போ' என்பவர் 1830 கடைசி ஆண்டுகளில் கவிதை பற்றி ஒரு விமர்சனக் கட்டுரை எழுதினார். பேர்வை அவர் தேசத்துக்(அமெரிக்க)கவிகள் அதிகமாகப் பாராட்டா விட்டாலும் ஃபிரெஞ்சு இலக்கியக்கர்த்தாக்கள் அவர் சித்தாந்தங்களை ஏற்றுக் கொண்டு செயலாற்றினார்கள். இவர்களில் முக்கியமானவர்கள் என்று பாடலேர், ஸ்டீஃபன் மல்லார்மே, ஆர்தர்ரிம்போ முதலியவர்களைச் சொல்லலாம். இவர்களைப் புதுக்கவிதை உத்திகளையும், பாணிகளையும் துவக்கி வைத்தவர்களாக மேலைநாட்டுக் கவிதையுலகம் போற்றுகிறது.

### புதுக் கவிதைகளின் போக்கு

அமெரிக்காவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த இன்னொரு புரட்சியும் முக்கியமானது. இதைச் செய்தவர் வால்ட் விட்மென் என்பவர். இவருடைய நூல் கவிதையானாலும் வசன ரூபத்திலே அமையலாம் என்று நிரூபித்துக்

காட்டியது. அதைத் தொடர்ந்து உலகம் பூராவும், இந்தியா விலும், தமிழிலும்கூட, ஒரு புதுக்கவிதை இயக்கம் தோன்றி வளம் பெற்றது. பாரதியார்கூட வசன கவிதை என்று காட்சி களை எழுதினார். தொடர்ந்து கம்பன், நகுலன், ஷண்முக சுப்பையா, பசுவய்யா, ஞானக்கூத்தன் முதலியவர்கள் இன்று புதுக்கவிதை செய்திறார்கள். சிலருக்கு நவீன ஆங்கிலக் கவி களான டி. எஸ். எலியட்டும், டபுள்யூ. டி. யேட்ஸூம் வழி காட்டிகள்.

எந்த மொழியிலும் கவிதை என்கிற இலக்கியத்துறை ஓரளவு காலத்துக்கு ஏற்ற அளவில் புதுமை பெற்றுப் புதுப் பொலிவுடன் புது வளத்துடன் செயல்படுகிறது என்பதைக் காண இயலுகிறது. இதுபோகப் பல பழைய கவிதைகளில் புதுமைகளை இன்றும் காண இயலுகிறது. வள்ளுவர் குறளி லும், இளங்கோவின் சிலப்பதிகாரத்திலும் திருமூலரின் திருமந்தி ரத்திலும், காரைக்கால் அம்மையாரின் அற்புதத்திருவந்தாதியிலும், சித்தர்பாடல் சிலவற்றிலும் பெரும் அளவில் இந்தப் புதுமை காணக் கிடக்கிறது என்பது அவற்றின் பெருமையாகும். இது தமிழின் தனிச் சிறப்பு என்பதுடன், உலக மொழிகளில் உள்ள எல்லா நல்ல கவிகளைப் போல் சிறப்பாகவும் கருதப்பட வேண்டும். ஆங்கிலத்தில் பிரெஞ்சில், ஜெர்மனில், ஸ்பானிஷில் இத்தாலியனில், அராபிக்கில், பெர்சியனில், இந்தியாவில் மற்ற மொழிகளில், சீனத்தில், ஜப்பானில், லத்தீன் அமெரிக்காவில் என்று உலகத்தில் எந்த மொழிக் கவிதையை எடுத்துக் கொண் டாலும் அதில் புதுமை தலைமுறைக்குத் தலைமுறையாகக் காணக் கிடக்கிறது என்பது கவிதை பற்றிய வரையில் மிகச் சிறந்த உண்மை. ஷேக்ஸ்பியர் சொல்வதும், யாயும் ஞாயும் யாராகியரோ என்று செம்புலப்பெயல் நீரார் சொல்வதும், 'பழசு என்பதில் பெருமையில்லை; புதுசு என்பதில் சிறுமை யில்லை' என்பதும், 'உலகில் ஒரு தடவை செய்யப்பட்டதை மீண்டும் செய்யாதே' என்று எஸ்ரா பவுண்டு சொல்வதும், சென்ற காலமும், இறந்த காலமும் என்று டி. எஸ். எலியட் சொல்வதும், அழகைப் பாடிய பல கவிஞர்கள் குருடர்கள் என்று சொல்லிய டபிள்யூ. பி. யேட்ஸூம்—புதுமையை நாடியவர்கள், ஸ்தாபித்தவர்கள்.

இன்றைய கவிதையைத் தெரிந்து கொள்வதற்குச் சில சமீப காலத்திய கவிஞர்களைப் படித்திருக்க வேண்டும் என்று நிச்சய மாகச் சொல்லலாம். ஜெர்மன் மொழியில் எழுதிய 'ரெயினர் மேரியா ரில்கே' பிரெஞ்சு மொழியில் எழுதிய பால்வலேரி,

ரெனே சார், செயன்ட் ஜான்பெர்ஸ், ஆங்கிலத்தில் எழுதிய டி. எஸ். எலியட், டபுள்யூ. பி. யேட்ஸ், ஸ்பானிஷ் மொழியில் எழுதிய ஃபிரடெரெக் கார்சியா லோர்க்கா, அமெரிக்காவில் எழுதிய எஸ்ரா பவுண்டு, மரியாள்முர், வில்லியம் கார்லாஸ் வில்லியம்ஸ் என்பவர்களுடைய கவிதைகளைப் படித்து அறிந்து கொள்வது மிகமிக அவசியம்.

**பூரணமான கலையே கவிதை**

இலக்கியம் என்பது பல்கலைக் கழக ஆய்வுகளுக்காகவோ, யாரோ ஒருவர் தங்கள் விஷயம் பற்றிப் பிரத்யேமாகச் சலுகை காட்டி ஆராய்ந்து படிக்கப் போகிறார்கள் என்பதற்காகவோ தோன்றுகிற விஷயம் அல்ல. இயக்கம், சிருஷ்டி என்பது கவிதை போன்ற சிருஷ்டி மேன்மை காட்டுகிற துறைகளில் மிகவும் தனிமையில் ரகசியத்தில் கூடநடக்கிறது என்றுசொல்லலாம். இது அம்பலமாகும் போது எல்லோருக்கும் இல்லாவிட்டாலும் பலருக்கும் சில நூதன அனுபவங்களை உண்டாக்குகிறது. வாக்கினிலே தெளிவாக்குகிறது; மனச்சந்துஷ்டியும், ஆனந்தமும் உண்டாக்குகிறது. வாக்கினிலே தெளிவும், உண்மையும் எப்படி வருகிறது என்று பாரதி சொன்னான்-உள்ளத்திலே உண்மைஉண்டானால் வாக்கினிலே உண்மைஉண்டென்று. உலகத்தில் மிகச்சிறந்த கவிஞர்கள் எல்லாம் உள்ளத்திலே உண்மையுள்ளவர்கள். அந்த உண்மை வார்த்தைகளிலும் வெளிப்படப் பிரகாசிக்கிறவர்கள் ஒளி தருகிறார்கள். 'கவிதை என்கிற கலையைப் பூரணமான கலை' என்றே சொல்லலாம். வ.வே.சு ஐயர் கூறுகிறார், பூரணமான கலை என்பதற்கு அர்த்தம், 'கவிதை தருகிற அனுபவத்தை வேறு ஒரு கலையும் மனிதனுக்குத் தர இயலாது என்று அர்த்தப்படுத்திக் கொண்டால் அது மிக மிக பூரணமான கலை தான்.

இன்னும் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருக்கிற அளவுக்கு என் கவிதை அனுபவம் எனக்குக் கை கொடுக்கிறது. என்னைக் கேட்பவர்களில் ஒரு சிலரேனும் இந்த உலகக் கவிதைகளை அனுபவிப்பதற்கு ஒரு அளவுக்கேனும் முயற்சி செய்வார்களேயானால் நான் பேசியதற்கும், எடுத்துச் சொன்னதற்கும் பயன் உண்டு என்று நினைப்பேன்.

## ஆ. நாடகம்

கிரேக்க, இந்தியச் சமுதாயங்களில் நாடகங்களை இலக்கியத் துறைகளில் சிறந்த ஒன்றாக நினைக்கிற பழக்கம் ஆதிகாலத்திலிருந்தே ஏற்பட்டு வந்துள்ளது. வேறு சில சமுதாயங்களில் சீனா, ஜப்பான் என்கிற சமுதாயங்களில் நாடகங்கள் மிகவும் பிற்காலத்தில் தோன்றின. ஆயின் அவை அவ்வளவாக முன்னணியில் இருந்ததாகத் தெரியவில்லை.

கிரேக்கர்களைப் பின்பற்றி ரோமாபுரி லத்தின் மொழிக்காரர்களும் சோகநாடகங்கள், ஹாஸ்ய நாடகங்கள், கிண்டல், கேலி நாடகங்கள் என்று சிருஷ்டித்தார்கள் என்றாலும் அவர்கள் கிரேக்க உன்னதத்தை எட்டவில்லை.

**மதம் சார்ந்த நாடக இலக்கியங்கள்**

கிரேக்க லத்தீன் மரபுகளை ஏற்றுக் கொண்டு, செயலாற்றிய ஐரோப்பிய இலக்கிய உலகத்தில், ஆரம்பகாலத்து நாடகங்கள், கிறிஸ்தவ மதப் பிரசார நாடகங்களாக இருந்தன. கத்தோலிக்கர்கள் உருவ வழிபாட்டுக்கு எதிரிகள் அல்லர். ஆகவே நாடகங்கள், புரோடஸ்டாண்டுகள் தோன்றுகிற வரையில், ஏசுவின் கதையைப் பின்பற்றி எழுதப்படுவதாக அமைந்தன. இவற்றை மிஸ்டரி என்று சொல்லுகிறார்கள். இவை சமயப் பிரச்சாரத்துக்கும், மத அனுபவத்துக்கும் ஏற்றவையாக இருந்தன. நாடக இலக்கியமாக இவற்றை மேன்மையானவையாகச் சிறப்பானவையாகச் சொல்ல இயலாது.

நிகாஸ் காஸாண்ட்ஸிகிஸ் என்கிற நவீன கிரேக்க நாவலாசிரியர் ஒரு நாவல் எழுதியிருக்கிறார். அதில் ஏசு வேஷம் போட்ட நடிகன் ஏசுவாகவே மாறி விடுவதாகவும், ஜூடாஸ் வேஷம் போட்டு நடித்த நடிகன் ஜூடாஸாகவே மாறி விடுகிறான் என்றும் கற்பனை செய்திருக்கிறார். இதே மாதிரிக் கற்பனைகள் நம் ஊரிலும் உண்டு. நரஸிம்மாவதாரம் நாடகத்தில் நரசிம்ம வேஷம் போட்டவர் நரசிம்மராகவே ஆவேசம் பெற்றுச் சமனப்படுத்தப்பட வேண்டியவராக ஆகிவிடுகிறார் என்றும் கற்பனைகள் உண்டு.

ஓபர்மார்கோ என்கிற ஜெர்மன் கிராமத்தில் பாஷன் ப்ளே என்ற நாடகம் பல நூற்றாண்டுகளாக இன்று வரை நடிக்கப்

பட்டு வருவதாகத் தெரிகிறது. சமயப் பூர்வமாக, மத உணர்ச்சிகளை இது தூண்டி ஆழம் உள்ளதாகச் செய்யப் பயன்பட்டாலும் இதையெல்லாம் நாடக இலக்கியமாகக் கருதுவதற்கில்லை. இதே மாதிரி மரபுகள் நம் ஊரிலும் உண்டு. தெருக்கூத்துகள், வீதி நாடகம், குறவஞ்சி, பள்ளு, மெலட்டூர் நாட்டிய நாடகம், மணிபூரில் கிருஷ்ணன் சம்பந்தப்பட்ட ஸ்தலங்களில் நடக்கும் நாடகங்கள் இவற்றைக் குறிப்பிடலாம்.

### தொன்மை நாடக இலக்கியங்கள்

நாடகம் இலக்கிய அந்தஸ்தை மூன்று மொழிகளில் பழங்காலத்தில், அதாவது பத்தொன்பதாவது நூற்றாண்டுக்கு முன் அடைந்திருக்கிறது என்று சொல்லலாம். கி. மு. ஐந்தாவது ஆறாவது நூற்றாண்டுகளில் கிரேக்க மொழியில், முதல் எலிஸபத்தின் காலத்தில் இங்கிலாந்தில், மூன்றாவது நூற்றாண்டு முதல் எட்டாவது நூற்றாண்டு வரையில் இந்தியாவில் சமஸ்கிருதத்தில் மிகவும் இலக்கியத்தரமான நாடகங்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. இது ஏன் இப்படி ஒரு குறுகிய காலகட்டத்தில் மட்டும் தோன்ற வேண்டும். மற்ற இடங்களில், மொழிகளில் ஏன் நாடக இலக்கியமே இல்லை என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

இலக்கியம், கலை என்பது ஒரு தனிமனிதத் தனித்துவத்தின் மூலம் உருவாகிறது. நாடகத்தில் பலர் சேர்ந்து பாடுபட வேண்டியதாகவும் இருக்கிறது. ஓரளவுக்குப் பொருளாதார வளம் உள்ள இடத்தில் தான் நாடகங்கள் மேடையேற்றப்பட முடியும். கிரேக்கர்களின் உள்ளங்களைத் தொடுவதாகவும், இந்திய சஹிருதயர்களின் அழகுணர்ச்சியைத் தொடுவதாகவும் கிரேக்க சமஸ்கிருத நாடகங்கள் அமைந்ததற்குக் காரணங்களைக் கண்டு யாரும் சொன்னதாகத் தெரியவில்லை.

### நாடக இலக்கணத்தில் அரிஸ்டாடிலின் பங்கு

கிரேக்க நாடகங்களைப் பற்றி அரிஸ்டாடில் என்கிற விமர்சகன் சோக நாடகங்களுக்கு இவை விதிகள் என்றும், ஹாஸ்ய நாடகங்களுக்கு இவை விதிகள் என்றும் விவாதமாக வகுத்திருக்கிறார். காலம், இடம், போக்கு என்பதில் ஒரு ஒருமை வேண்டும் என்றும், ஒரு உச்சக்கட்டம் வரையில் மன எழுச்சியை உண்டாக்கி அதைச் சமனப்படுத்துகிற மாதிரி முடிவு அமைய வேண்டும் என்றும் கிரேக்க நாடகங்களை வைத்து அவர் விதிகள் வகுத்தார். இதையொட்டியே ஐரோப்பிய நவீன மொழி நாடகாசிரியர்கள் பலகாலம் நாடகம் சமைக்க முயன்றார்கள்.

சிலசமயம் ஒரு நாடக மேதை இந்த விதிகளை மீற முடிந்தாலும் பொதுவாக இவை அங்கீகரிக்கப்பட்டன. ஃபிரான்ஸ் தேசத்திலும், ஸ்பெயின் தேசத்திலும், இத்தாலியிலும், ஜெர்மனியிலும் இந்த விதிகளுக்குட்பட்ட நாடகங்கள் பலவும் சிறந்ததாகக் கருதப்பட்டன.

### இந்திய நாடக இலக்கணமும் பரத முனிவரும்

சமஸ்கிருதத்திலும் இலக்கிய விமர்சனத்துக்குத் தந்தை என்று கருதப்படுபவராகிய பரதமுனிவர், நாட்டிய சாஸ்திரத்தில் நாடகம்தான் உயர்ந்த கலை-ஏனென்றால் அதில் மற்ற எல்லாக் கலைகளும் அடங்கி விடுகின்றன-சாஹித்தியம், இசை, நாட்டியம், சிற்பம், சித்திரம் போன்ற எல்லாக் கலைகளும் அதில், அடங்குகின்றன-என்று கூறுகிறார். ரஸம், பாவம், நீதி என்பதாக நாடக விளைவுகளைப் பிரித்துக் காட்டுகிறார். சாந்தம் என்கிற ரஸம் மேடையில் காட்ட முடியாது என்பதனால் அதைத் தவிர்த்து மற்ற எட்டு ரஸங்களும் நாடகத்தில் வரலாம் என்று சொல்லுகிறார். அரிஸ்டாட்டிலை விட அதிகமாகவே குஷ்மமாகவும், ஸ்தூலமானதுமான விதிகளை அவர் கண்டு சொல்லுகிறார், என்பதுடன் இன்னதனால் இன்னது விளைகிறது என்றும் சொல்கிறார். நாட்டியம் என்று அவர் சொல்கிற போது, நாடகத்தை மனத்தில் வைத்துக் கொண்டு தான் சொல்கிறார் என்று தோன்றுகிறது. அது எப்படியானாலும், அரிஸ்டாட்டில் ஐரோப்பிய இலக்கியத்தில் செய்த காரியத்தைப் பரத முனிவர் இந்தியாவில், முக்கியமாகச் சமஸ்கிருதத்தில் செய்திருக்கிறார்.

### இந்திய நாடக முன்னோடிகள்

பாஸன் என்கிற, தங்களுக்கு வழிகாட்டிய ஒரு மேதையைப் பற்றிக் காளிதாஸன், பவபூதி முதலிய சமஸ்கிருத நாடகாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். 'ஸ்வப்பனா வாஸவதத்தம்' என்கிற ஒரு நாடகம் மட்டும் அவருடையதாகக் கருதப்பட்டு வழக்கில் இருந்தது. பாஸனின் மற்ற நாடகங்கள் எதுவும், வெகுநாள்வரை கிடைக்கவில்லை. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில், திருவனந்தபுரத்தைச் சேர்ந்த பத்மநாபபுரம் அரண்மனையில், மலையாள எழுத்தில் பல சமஸ்கிருத நாடகங்கள் கண்டுபிடிக்கப்பட்டு அவையெல்லாம் பாஸனின் நாடகங்கள் என்று நிரூபிக்கப்பட்டுள்ளன. அவிமாரக, ஊறுபங்கம், ஸ்வப்னாவாஸவத்தம் போன்ற

நாடகங்கள் மிகவும் சிறப்பான இலக்கியமாகவும், நாடக மாகவும், கவிதையாகவும் அமைகின்றன.

பாஸனுக்கு முந்தைய காலத்தவராகிய அசுவகோஷனை இந்திய நாடகத்தின் தந்தை என்று சொல்லுகிற ஒரு கருத்து உண்டு.

ஆனால், அசுவகோஷனின் நாடகங்கள் ஒன்றும் கிடைத்திருப் பதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம், அவர் பிற்காலத் தில் பௌத்த மதத்தைப் பின்பற்றியவராக, மாறியதாக இருக்க லாம். அவருடைய புத்தசரிதத்திலேயே கூட ஒரு பத்து ஸர்க்கங்களுக்கு மேலாக, அவை புத்த போதனைகளைச் சொல் கின்றன என்பதற்காக வேண்டுமென்றே நழுவவிட்டு விட்டவர் கள் ஹிந்துக்கள்-இந்தப் பகுதிகள் 1920க்குப் பிறகு திபத்தன் மொழியில் கண்டுபிடிக்கப்பட்டு இப்போது ஆங்கிலத்திலும் கிடைக்கின்றன. பரதர் விதிகள் வகுத்தது அசுவகோஷன் நாட கங்களை முன்மாதிரியாகக் கொண்டுதான் என்று சொல்பவர் கள் உண்டு. பரதமுனிவரின் காலமோ, அசுவகோஷரின் காலமோ நிச்சயமாகத் தெரியவில்லை. முன்னவர் கி.மு. நாலாவது நூற்றாண்டு முதல் கி.பி. நாலாவது நூற்றாண்டு வரையுள்ள காலகட்டத்தில் எதிலோ வாழ்ந்தவர் என்றும், அசுவகோஷர் வால்மீகியின் சமகாலத்தவரோ, அதற்குச் சற்று முந்தியவராகவோ இருக்கலாம் என்றும் சொல்லுவது வழக்கு. வால்மீகியின் காலமும் சரிவரத் தெரியவில்லை. ஆதிகவி என்பதனால், எல்லோருக்கும் முந்தியவர் என்பது மட்டும் தெளிவுபடுத்தப் பட்டிருக்கிறது.

சமஸ்கிருத இலக்கிய நாடகங்களை இயற்றியவர்கள் என்று சூத்திரகர், பவபூதி, காளிதாஸன் முதலியவர்களைச் சொல்ல வேண்டும். இவர்களில் காளிதாஸனின் பெயர் இந்தியர்களி டையே மட்டும் அல்ல-சமஸ்கிருதம் அறிந்த வெளி உலகத்திலே யும் வெகுவாகப் போற்றப்படுவது ஆகும். முதன்முதலில் சாகுந்தலத்தைப் படித்து விட்டுக் 'கீதே' என்கிற ஜெர்மன் கவி எழுதிய ஸானெட் மிகவும் பிரசித்தமானது. ''சாகுந்தலா! உன் பெயரே அழகின் பெயர்'' என்று தொடங்குகிறது அக்கவிதை. பவபூதியையும், சூத்திரகரையும், காளிதாஸனுக்கு அடுத்தபடி யாக முக்கிய இலக்கிய நாடகாசிரியர்களாகக் கருதவேண்டும். சீதைக்கு வால்மீகிதான் காவியத்தில் போதுமான நீதி இழைக்க வில்லை, அநீதியே செய்து விட்டார் என்கிற கோஷ்டி பவபூதி யில் தொடங்கிக் குமரன் ஆஸான், புதுமைப்பித்தன் என்று தொடர்ந்தது. சீதையும், ராமனும் மீண்டும் ஒன்று சேருவதை

மையமாக வைத்து நாடகம் செய்தார்கள். மிருச்சகடிகம் என்கிற சூத்திரக நாடகம் அக்காலத்திய அரசியல் போக்குகளை விவரிப்பது.

இதைத் தவிர ராமாயணக் கதைகளையும், பாரதக் கதை களையும் கையாண்ட, இந்தத் தரத்துக்கு எட்டாத பல நாடகாசிரியர்கள் ச ம ஸ் கி ரு த த் தி ல் இருந்திருக்கிறார்கள். கனமான விஷயங்களைக் கையாளாமல், சமூக, மத, தெய்வீக விஷயங்களைக் கையாண்ட பல நாடகாசிரியர்கள் சம்ஸ்கிருதத் தில் உண்டு. பிரஹஸனங்கள் என்று பல நாடகங்கள் உண்டு. ஆனால், ஏற்கனவே சொன்ன நால்வரையும் மிகச் சிறந்த இலக்கிய நாடகாசிரியர்களாகக் கருத வேண்டும்.

சமஸ்கிருத இலக்கிய நாடகங்கள் மேடையேற்றவும் பொருத்தமாக இருக்கின்றன என்றாலும், இவை அரிதாகத் தான் இந்தக் காலத்தில் மேடையேற்றப்படுகின்றன, 'சம்ஸ் கிருத நாடகங்களை ரங்கா ஸ்தாபனம் சென்னையில் சிலசமயம் மேடையேற்றியிருக்கிறது; சிலதை நானும் பார்த்திருக்கிறேன். உஜ்ஜயினியிலும் நடப்பதாகச் சொல்லுகிறார்கள். வேறு இடங் களிலும் நடைபெறலாம். நி யூ யா ர் க் கி லு ம், சிலசமயம் லண்டனிலும் மேடையேற்றப்படுவது பற்றித் தகவல்கள் கிடைக்கின்றன. ஜெர்மனியில் ஹிட்லர் காலத்தில் ஒரு சமஸ் கிருத நாடகத்தை—மிருச்ச கடிகத்தை மொழி பெயர்த்து மேடையேற்றிய வியான் ஃபாக்ட்வாங்கர் என்கிற இலக்கியா சிரியர் அதற்காக ஓர் ஆண்டு ஜெயிலில் போடப்பட்டு ஜெயிலில் இருந்தார் என்று தெரிகிறது.

### நாடக உலகில் ஷேக்ஸ்பியர் பங்களிப்பு

ஷேக்ஸ்பியர் என்கிற நாடக மேதையை அறியாதவர் இல்லை என்றே சொல்லலாம். இந்தியாவை மட்டும்தான் எட்டியது அவர் பெயரும் புகழும் என்று நினைத்தால் தவறு செய்தவர்களாவோம். போரில் பாஸ்ர்நாக் போன்ற ருஷ்ய மேதைகள் ஷேக்ஸ்பியரைத் தங்கள் மொழிகளில் மொழி பெயர்க்க ஆசைப்பட்டுச் செய்திருக்கிறார்கள். மற்ற இலக்கிய ஆசிரியர்கள் புகழ் ஒரு சமயம் மங்கும்; ஒரு சமயம் ஓங்கும்; மேலும் கீழுமாக ஊஞ்சலாடும், அப்படியெல்லாம் இல்லாமல், ஒரே சீராக ஷேக்ஸ்பியரின் இலக்கியப் புகழ் உலகெங்கும் ஓங்கி ஒரே மாதிரியாக நிற்பதற்கு, அவர் மேதாவிலாசம் புரிந்த சாதனைதான் காரணம். அங்கே ஒரு டால்ஸ்டாய், இங்கே ஒரு பெர்னார்டுஷா. அவர் புகழ் நியாயமற்றது என்று சொல்லலாம்.

டால்ஸ்டாய் சிங்லியரை அசட்டுக்கதை என்றார். ஷாவின் அபிப்பிராயத்தில் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் ஒரு படிப்பினை இல்லை. இதெல்லாம் குறையோ, நிறையோ—ஐரோப்பிய இலக்கிய—வுலகில் ஹோமருக்கு அடுத்தபடியாகப் பெரும் புகழ் பெற்றவர் ஆங்கிலக் கவி நாடகாசிரியர் ஷேக்ஸ்பியர்தான். ஷேக்ஸ்பியர் வேண்டுமா, சாம்ராஜ்யம் வேண்டுமா என்று கேட்டால் ஷேக்ஸ்பியர்தான் வேண்டும் என்று ஆங்கிலேயர்கள் சொல்லுவார்கள் என்று தாமஸ் கார்லைல் எழுதினார். அது மிகமிக உண்மையாகும்.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் எண்ணிக்கையில் முப்பதுக்கும் அதிகம். பல தரங்களிலும், பல சுவைகளையும் தருவதாக அவர் நாடகங்கள் எழுதியிருக்கிறார். சோக நாடகங்கள், ஹாஸ்ய நாடகங்கள், சரித்திர நாடகங்கள் என இவற்றைப் பிரிப்பது வழக்கம். சோக நாடகங்களில் ஹாம்லெட், மாக்பெத், சிங்கிலியர் போன்றவையும், சோகம் அல்லாத நாடகங்களில் டெம்பெஸ்டு, மர்சண்ட் ஆஃப் வெனிஸ், மெஷர்ஃபர் மெஷர், விண்டர்ஸ் டேல் என்பவையும், ஹாஸ்ய நாடகங்களில் 'ஆஸ் யூ லைக் இட், ட்வெல்த் நைட், மச்சடோ அபவுட் நத்திங்' இவற்றையும் குறிப்பிட வேண்டும். சரித்திர நாடகங்களில் நாலாவது ஹென்றி (இரண்டு பாகங்கள்), ஐந்தாவது ஹென்றி போன்றவை இங்கிலாந்து தேசத்துச் சரித்திரத்தையும், கொரியாலானோல், ஜூலியஸ் சீஸர் போன்றவை ரோமாபுரி சரித்திரத்தையும் கையாளுகின்றன. எல்லா ஷேக்ஸ்பியர் நாடகங்களுமே படித்து அனுபவிக்கத் தகுந்தவை என்பதுடன் மிகச் சிறந்த இலக்கிய அனுபவத்தைத் தருவதாகவும் உள்ளன. கிரேக்க நாடக இலக்கியாசிரியர்களில் சிலரைத் தவிர, ஷேக்ஸ்பியரைவிட உயர்ந்த நாடக இலக்கியாசிரியர் இல்லை என்று சொல்லத் தோன்றுகிறது.

அவர் அளவுக்கு வராவிட்டாலும், ஷேக்ஸ்பியர் காலத்தில் ஆங்கிலத்தில் எழுதிய பல நல்ல நாடக இலக்கியாசிரியர்கள் உண்டு. கிறிஸ்டஃபர் மார்லோ, ஜான்வெப்ஸ்டர், சைரில் டொர்ணியர், ஃபிலிப் மாஸிங்கர் என்று பலர் உண்டு. இவர்களில் மார்லோ இலக்கியத்தரம் மிகுந்தவர். ஷேக்ஸ்பியர் காலத்தில் அவரைவிட அதிகமாகப் பெயர் பெற்றவராகப் பென் ஜான்ஸன் என்பவர் இருந்தார். "ஷேக்ஸ்பியருக்குக் கிரீக்கும் தெரியாது; லத்தினும் தெரியாது;" என்று கேலியாகச் சொன்ன பென்ஜான்ஸன், "மேதையிருக்கிறது—வேறு என்ன வேண்டும்?" என்று கேட்டதாகச் சொல்லுவார்கள்.

மேலை இலக்கிய நாடக முயற்சிகள்

தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையிலும் அதற்கப்பால் இன்று வரையிலும்கூட, ஆங்கிலத்தில் நாடக முயற்சிகள் நடைபெற்று வந்திருக்கின்றன. ஹெரிடன், கோல்ட் ஸ்மித், ஷெல்லீ என்று பல நாடகாசிரியர்கள் ஆங்கில நாடக அளவில் புகழ் பெற்றவர்களே தவிர மேன்மையான இலக்கிய அளவுக்கு எட்டியவர்கள் அல்லர்.

இவை எல்லாவற்றிற்கும் முந்திய காலத்தைச் சேர்ந்த கிரேக்க நாடகங்கள் நூற்றாண்டுக் கணக்கில் ஒலிம்பிக் விளையாட்டுக் கென நடத்தப்பட்டதாகத் தெரிகிறது. நாடக மேடை சாத னங்கள் குறைவாக இருந்த அந்தக் காலத்தில், மிகச் சிறந்த இலக்கிய நாடகங்களாக ஏஷ்கில்ஸ், ஸோஃபாக்ளிஸ், யூரிபிடிஸ் என்கிற சோக நாடகாசிரியர்களின் சில நாடகங்களும், அரிஸ்டஃபென்ஸ் என்பவருடைய கேலி—ஹாஸ்ய நாடகங் களும் நமக்குக் கிடைக்கின்றன. அவர்கள் எழுத்தில் ஒரு பகுதிதான் கிடைத்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஸோஃபாக்ளிஸின் 'ஓடிபஸ்' மூன்று நாடகங்களையும் படிப்பது வேறு எங்கும் கிடைக்க முடியாத ஒரு இலக்கிய அனுபவத்தை நமக்குத் தருகிறது. அதேபோல ஏஷ்கிலஸ், யூரிபிடிஸீம் அவரவர் அளவில் நல்ல இலக்கிய அனுபவத்தைத் தருகிறார்கள். இந்த நாடக இலக்கிய மேன்மையுடன், ஷேக்ஸ் பியர், காளிதாஸன் என்கிற உலகில் சிறந்த நாடக இலக்கியத் தையும், ஹோமர், டாண்டே, வால்மீகி, இளங்கோ போன்ற காவியங்களையும்தான் சொல்ல முடியும்.

ஒலிம்பிக் நாடகப் போட்டிகள் சில நூற்றாண்டுகள் நடை பெற்றதாகவும் இதில் பல கிரேக்கப் பகுதிகளும், நகரங்களும் பங்கு பெற்றன என்றும், பரிசாக ஒரு லாரல் இலைமகுடம் தவிர வேறு பொருளாதார ரீதியில் லாபம் கிடையாது என்றும்; சோக நாடகங்கள் முக்கியமாக மக்களின் மனச் சிக்கல்களிலி ருந்தும் ஆவேசத்தினிடமிருந்தும் விடுதலை பெற உபயோகிக்கப் பட்டன என்றும் தெரிகிறது. பெண்கள் நாடகம் எழுதும் போட்டியிலோ நடிப்பதில் கூடக் கலந்து கொள்ளக் கூடாது என்று விதி இருந்தது. உண்மையில் ஒலிம்பிக் பிரதேசத்திலே பெண் வாடை வீசக் கூடாது என்றே அவர்கள் விதித்திருந் தார்கள். அத்துமீறி ஒரு பெண் வந்து விட்டால் அவள் சித்திர வதையில் உயிரிழக்க வேண்டியதாக இருக்கும்.

இன்னும் ஒரு நாடகாசிரியர் பற்றிச் சொல்லி விட்டால் உலக நாடக இலக்கியத்தில் பெரும் பகுதியும் பற்றிச் சொல்லி விட்டதாக ஆகிவிடும். இவர் மோலியேர் என்கிற ஃபிரெஞ்சு மொழி நாடகாசிரியர். ஹாஸ்யமாக, சமுதாயப் போக்குகளை, தனி மனிதப் போக்குகளைக் கேலி செய்து நிறையச் சிந்தனைக்குத் தீனி தருகிற நாடகங்களை எழுதியிருக்கிறார். ஐரோப்பாவிலே ஷேக்ஸ்பியருக்கு அடுத்தபடியாக வைத்து எண்ணப்பட்டவர்.

ஃபிரெஞ்சு மொழியில் கிளாசிகல், நாடகங்கள், அரிஸ்டாட்டில் சொன்ன விதிகளைப் பின்பற்றி நிறைய எழுதப் பட்டன. அவற்றில் சிலவற்றின் ஆசிரியரான ராஸின் என்பவரைச் சிறப்பாகச் சொல்லுவார்கள்.

அண்மைக் கால நாடக முயற்சிகள்

இத்துடன் நாம் நவீன நாடக இலக்கியத்தைக் கவனிக்கலாம். நவீன தற்கால நாடக இலக்கியம் என்பது ஹென்ரிக் இப்ஸன் என்கிற நார்வேஜிய நாடக ஆசிரியருடன் தொடங்குகிறது. அவரின் 'பொம்மை வீடு' பெண் விடுதலை இயக்கத்துக்கு ஒரு தூண்டு கோலாகவும் அதில் ஒரு மைல் கல்லாகவும், அமைந்தது. பிராண்ட், கொத்து மேஸ்திரி என்று பல 'கலை' நாடகங்களை எழுதினார் அவர்.

இப்ஸனுக்குப் பின் வந்த ஸ்வீடிஷ் மொழி நாடகாசிரியரான ஆகஸ்ட் ஸ்டிரின்பெர்த் என்பவர் ருஷ்ய நாவலாசிரியர்கள் நாவலுக்குச் செய்தது போல ஓர் ஆன்மீக ஒளியை நாடக இலக்கியத்துக்குத் தந்தார். இவருடைய கலைத்திறம் சமீப காலத்தில் தான் பரவலாகப் பேசப்படுகிறது.

ருஷ்யாவில் கோகால், டால்ஸ்டாய், செக்காவ், கார்க்கி என்பவர்கள் புது நாடக இலக்கியங்களைப் படைத்துத் தந்தார்கள். இவற்றில் பலவும் நாடக மேடையிலும் வெற்றி பெற்றன. நாடக இலக்கியமாகவும் தரமாக இருந்தன.

இத்தாலியில் 'லூயிகி பிராண்டெல்லோ', 'யூகோ பெட்டி', பெல்ஜியத்தில் மாரிஸ் மாடர்லிங்க், ஹங்கேரியில் ஃபெரய்க் மோல்நர், இஸ்பானிய மொழியில் ஷ்யசிண்டோ பெனாபண்டே, இங்கிலாந்தில் பெர்னார்ஷா, அமெரிக்காவில் யூஜின் ஓ நில், வில்லியம் ஸ ரோ ய ன், டென்னா வில்லியம்ஸ், தார்ண்டன் வைல்டர் போன்றவர்கள் நாடக இலக்கியத்தைத் தரமாகச் செய்ய முயன்று வெற்றியும் பெற்றிருக்கிறார்கள்.

இன்னும் பல பெயர்களைச் சொல்லலாம். என் நினைவிலிருப் பதைச் சொன்னேன். ஃபிரான்சில் ழீன்கெனே, ழீன்பால் சார்த் தரே, ஆல்பெர்காமு, ழீன்காக்டோ என்று பலநாடகாசிரியர்கள் நாடகங்களை இலக்கியமாகச் செய்து பார்க்க முயன்றார்கள். ஜெர்மனியில் கெர்ஹார்ட் ஹாப்ட்மன், எர்ணஸ்ட் டாலர், மற்றும் 'டர்ரன்மாட்' ஆகியோர் நாடக இலக்கியத்தைச் சிருஷ்டித்துத் தந்திருக்கிறார்கள். இங்கிலாந்தில் எலியட், யேட்ஸ், ஸிஞ்ச், ஸான் ஓ காஸி என்று பல பெயர்களைச் சொல்லலாம்.

இந்தக் காலகட்டத்தைத் தாண்டி வரும் போது ஒரு "அபத்த" நாடக இலக்கியம் தோன்றி வலுப்பெற்று மக்கள் கவனத்தைக் கவர்ந்தது. இந்த நாடகாசிரியர்களில் எத்தனை பேரை இலக்கியத்தரமானவர்களாகச் சொல்ல இயலும் என்று தெரியவில்லை. அனில்ஷ் பெக்கெட் என்று பல பெயர்கள் மிகப் பிரபலம். இதே அளவில் இல்லா விட்டாலும் சித்தாந்த நாடகங்கள் எழுதிய பெர்டோல்ட் ப்ரெக்ரும் நாடகமேடைத் தரமாக அமைந்த நாடகங்களை எழுதினாரே தவிர நாடக இலக்கியமாக அவர் நூல்கள் தாங்காது என்றே நான் எண்ணு கிறேன். இந்த ரகத்தைச் சேர்ந்த பல நாடகாசிரியர்கள் பல மொழிகளிலும் எழுதிக் கொண்டிருக்கிறார்கள்.

ஜப்பானிய நாட்டியம் 10-ஆம் நூற்றாண்டிலும் 'நோ' மற்றும் 'க்யோஜென்' நாடகங்கள் 15-ஆவது நூற்றாண்டிலும் தோன்றின. இவற்றில் தெருக்கூத்து, இசைநாடகம் என்று இந்திய மரபுக் கலைகளில் உள்ளது போல மரபுப் பிடிப்பு அதிகம். மேடையேற்றப் பல விதிமுறைகள் கவனமாகப் பின் பற்றப்படுகின்றன. இந்த நாடகங்களையும் இலக்கியமாகக் கருதுவதற்கில்லை.

**தமிழில் தற்கால நாடகப் போக்குகள்**

இந்தியாவில் ஷேக்ஸ்பியரைப் பின்பற்றிப் பல மொழிகளில் நாடகங்கள் எழுதப் பெற்றுள்ளன. தமிழில் மனோன்மணியம் (சுந்தரம் பிள்ளை)அப்படி வந்தது தான். அது இலக்கியத்தரமாக அமைந்திருப்பதாகச் சொல்ல இயலாது. 1928-ல் வடுவூரார் எழுதிய திலோத்தமை மனோன்மணியத்தைவிட இலக்கியத்தர மாக இருப்பதாகச் சொல்ல எனக்குத் தோன்றுகிறது.

தமிழில் பத்தொன்பதாவது நூற்றாண்டில் வேம்பு அம்மாள் எழுதிய ருக்மாகத சரித்திரம் தொடங்கிப் ப. சம்பந்த முதலி யார் எழுதிய முதல் நாடகமான லீலாவதி சுலோசனா வரையில்

நூற்றுக்கணக்கான நாடகங்கள் எழுதி நடிக்கப்பட்டன. அவற்றில் 'டம்பாச்சாரி விலாசம்' தமிழ் அளவில் முக்கியம் என்றாலும் இலக்கியத்தரத்தில் உலக அளவிற்கு எட்டவில்லை. சம்பந்த முதலியார் பல்வேறு மூலங்களைத் தழுவி நூற்றுக்கணக்கான நாடகங்களை எழுதியிருக்கிறார். அவற்றையோ, மற்றும் 'சோ' உள்ளிட்ட பல தமிழ் நாடகங்களையோ இலக்கியமாகக் கருதுவதற்கில்லை, என்றே எனக்குத் தோன்றுகிறது.

தமிழை இயல், இசை, நாடகம் என்று மூன்று பிரிவாகப் பிரித்து முத்தமிழ் என்று சொன்னாலும், பழைய தமிழ் நாடகங்கள் எதுவும் கிடைக்கவில்லை. நாடகங்கள் இருந்திருக்கவே வேண்டும். ஆனால் அவை மேடையேற்றப்பட்டாலும், இலக்கியமாக அமையாததால், இன்றுவரை நிலைக்கவில்லை. குறவஞ்சி, பள்ளு, நொண்டி நாடகங்கள் பதினெட்டாவது நூற்றாண்டில் தொடங்கி ஒரு நூற்றாண்டு செயல்பட்டிருக்கின்றன. இவை இலக்கிய அளவில் முக்கியமானவை.

தமிழில் நாடகங்களை இலக்கிய முயற்சிகளாகச் செய்து பார்த்தவர்கள் என்று புதுமைப்பித்தனைச் சொல்லலாம். அவர் எழுதிய 'வாக்கும், வக்கும்' நல்லதோர் இலக்கியமாக அமைந்தது. சமீபகாலத்தில் ந. முத்துசாமியும், இந்திரா பார்த்தசாரதியும், தமிழில் நாடகத்தை இலக்கியமாகப் புதுப்பித்துப் பார்க்க முயலுகின்றனர். அவர்கள் நாடகங்கள் தமிழ் அளவில் முக்கியமானவை என்று சொல்லலாம்.

நாடகமேடை முயற்சிகள் பல நகரங்களில் — டெல்லி, பம்பாய், சென்னை, கல்கத்தா—நகரங்களில் தோன்றிச் செழித்துள்ளன. அவை காரணமாக விஜய் டெண்டுல்கர், கிரீஷ் கர்னாட், பாதல் சர்க்கார் என்று பலநாடகாசிரியர்கள் தோன்றியிருக்கிறார்கள். உலக நாடக இலக்கியத்தில் இடம் பெறுகிற அளவுக்கு இவர்கள் ஏதாவது செய்திருக்கிறார்களா என்பது சந்தேகமே. நாடகம் பற்றிய வரையில் இன்று ஒரு திரிசங்கு நிலை இருக்கிறது. நாடகமேடை உத்தி வளம் பெற்றிருக்கிற அளவுக்கு நாடக இலக்கியம் வளம் பெறவேயில்லை.

# இ. கட்டுரைகள்

## கட்டுரை என்பது எது?

கட்டுரைகள் என்கிற பகுதியில் சாதாரணமாக ஆங்கிலத்தில் என்று சொல்வதுடன் வேறு சில கவிதை, நாடகம், நாவல், சிறுகதை என்கிற துறைகளில் சேராத விஷயங்களையும் சேர்த்துப் பார்க்கலாம் என்று தோன்றுகிறது. சித்தாந்த நூல்கள், கார்ல்மார்க்ஸ் புத்தர், கன்ஃபூஷியஸ், ஸாக்ரடீஸ் போன்றவர்களுடைய மனித மனப்போக்கில் மாறுதல் ஏற்படுத்திய பேச்சுகள், தத்துவ நூல்கள், விஞ்ஞான நூல்கள், இலக்கியம் பற்றி விமரிசனமல்லாத நூல்கள் என்பவற்றையும் அடக்கிச் சொல்லலாம் என்று எண்ணுகிறேன். சமீப காலத்தில் பலவிதமான மனசம்மந்தப்பட்ட புரட்சிகளை உண்டாக்கிய ஸிக்மண்ட் ஃபிராய்டு ஆண், பெண் பாலுணர்ச்சிகளைப் பற்றி எழுதிய ஹல்லாக் எல்லிஸ், காட்டுமிராண்டிகளாகக் கருதப்படுகிற ஜனங்களின் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சம்பிரதாயச் சடங்குகள் இவற்றை ஆராய்ச்சி செய்து எழுதிய ஜே. ஜி ஃப்ரேஸர், சார்லஸ், டார்வின் முதலியவர்களின் நூல்கள் இதில் அடங்கும்.

அவர்களில் பலர் அறிவுத் துறைகளில் உழைத்தவர்கள். ஆனால் மிகவும் இலக்கியத்தரமான நூல்கள் எழுதியவர்கள். இவர்களை குறிப்பிட்ட அறிவியல் துறையில் ஈடுபட்டிரா விட்டால் இவர்களை இலக்கியம் ஈர்த்திருக்கும் என்று சொல்லலாம். எழுதியதை இலக்கியத்தரமாக எழுதியிருப்பவர்கள். இலக்கியத்தில் வேறு எந்தத் துறையிலும் இவர்கள் எழுத்துகள் அடங்காதவை. அதனால் அவற்றையும் கட்டுரைகள் என்பதில் சேர்த்துப் பார்ப்பது சரி என்று எனக்குத் தோன்றுகிறது.

## கட்டுரை வளர்ச்சியில் இதழியல்

தமிழில் தற்கால இலக்கியத்தில் கட்டுரைகள் இல்லை. அவற்றைப் பத்திரிகைகள் வெளியிடுவதில்லை என்று சொன்னார் இன்று தலைமை தாங்கியவர். ஆரம்பகாலத்தில் எங்களில் பலர் ஆர்வத்துடன், இலக்கியத்தரமான கட்டுரைகள் எழுதினோம். வ.ரா. புதுமைப்பித்தன், தி. ஜ. ர. என்று பலர் கட்டுரைகள் எழுதிப் பார்த்தார்கள். நானும் என் பங்குக்குக் கட்டுரைகள் எழுதினேன். இந்த முயற்சி நீடிக்காததற்குக்

காரணம் அதற்குப் பத்திரிகைகளிடையே ஆதரவில்லாதது தான். கட்டுரைகளையே தாங்கி வந்த பத்திரிகையாகச் சிந்தனை என்பதைத் த. சீனிவாஸராகவன் என்பவர் நடத்திப் பார்த்தார். இரண்டு ஆண்டுகள் தான் நடந்தது. கலைமகளில் ஆரம்ப காலத்தில் நல்ல கட்டுரைகள் பல வந்தன. முக்கியமாக டாக்டர் சாமிநாத ஐயர் எழுதிய கட்டுரைகளைச் சொல்ல லாம். நினைவுக் கட்டுரைகள், சரித்திர சம்பவக் கட்டுரைகள், நிகழ்ச்சிக் கட்டுரைகள் என்று அவர் பல எழுதியுள்ளார். டி. கே. சி. எழுதிய இதய ஒலி என்கிற நூலில் அடங்கிய கட்டுரைகளை இலக்கிய விமர்சனக் கட்டுரைகள் என்று சொல்லாமல் இலக்கியக் கட்டுரைகள் என்று சொல்லலாம். தான் அனுபவித்த ஆனந்தத்தை உலகம் அனுபவிக்கட்டும் என்று பலர் இந்த மாதிரி ரஸனை இலக்கியக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்

எஸ்ஸேஸ் என்கிற இலக்கியத் துறைக் கட்டுரைகள்

Essays என்கிற இலக்கியத் துறையைக் கட்டுரைகள் விவரிப்பது வழக்கம். உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு சிருஷ்டிக்கப்படாமல் அறிவுத் தளத்தில், கட்டுக்கோப்பு என்று எதையும் ஏற்றுக் கொள்ளாது மனம் போகிற போக்கில் போக விட்டு விட்டு உலகம் எல்லாம் பற்றிப் பேசி அதில் தன் இடம் எது என்று சுட்டிக் காட்டுவதை இந்த வகைக் கட்டுரைகளைச் சேர்ந்தவையாகச் சொல்ல வேண்டும்.

இந்த இலக்கியத் துறையை ஐரோப்பாவில் தொடங்கி வைத்தவர் என்று 15ஆவது நூற்றாண்டில் வாழ்ந்த பணக்காரர் மிகேல் டி மின்டேய்ன் என்பவரைச் சொல்வார்கள். மூன்று பகுதிகளாக அவர் கட்டுரைகள் ஓர் எழுபதுக்கும் அதிகம் கிடைத்திருக்கின்றன. ஒரு சித்தாந்தத்துக்கும் அடிமையாகி விடாமல், மத தத்துவ தரிசனம் எதையும் வற்புறுத்தாமல் ஒரு பாணியில், இதை நீ ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்று சொல்லாமல் எழுதுகிறார் அவர். அவர் காலத்திய உலக அறிவு அவர் எழுத்தில் வராதது இல்லை. இப்படித்தான் என்று அடித் துச் சொல்லாமல் இப்படியும் இருக்கலாமோ யோசித்துப் பாருங் கள் என்று எழுதியவர் அவர். ஷேக்ஸ்பியர் நாடகங்களில் பெரும்பகுதி மாண்டேய்னைப் படித்து அவர் அறிந்து கொண் டது என்று சொல்வார்கள். பிரெஞ்சு மொழியில் அவரை ஷேக்ஸ்பியர் ஸ்தானத்துக்கு இலக்கியத்தில் உயர்த்தியே பேசு வார்கள்.

இவர் ஆரம்பித்து வைத்த இந்த இலக்கியத்துறை ஃபிரெஞ்சிலும், ஆங்கிலத்திலும், மற்ற ஐரோப்பிய இலக்கிய மொழிகளிலும் வெகுவாகக் கையாளப்பட்டு, பெரும் இலக்கியத்துறையாக வளர்ந்தது. கட்டுரை இலக்கியம் என்பது கவிதைகளைப் போல அல்லாமல், நாடகங்களைப் போல அல்லாமல், நாவலைப் போல அல்லாமல், மற்ற இலக்கியத் துறைகளைப் போல அல்லாமல், அதிகமாக அதனதன் மொழியளவில் தான் தெரிகின்றன. ஆங்கிலத்தில் சிறந்த கட்டுரையாளர் என்றும், ஃபிரெஞ்சில் சிறந்த கட்டுரையாளர்கள் என்றும் பலரைக் குறிப்பிடலாம். இவர்களில் சிலர் உலக இலக்கியத் தரத்தை எட்டியவர்கள்.

**உலக இலக்கியக் கட்டுரையாளர்கள்**

ஃபிரான்ஸிஸ் ஸ்லார்டு பேகன் என்பவர் ஆங்கிலத்தில் இத்துறையை ஆரம்பித்து வைத்தவர். அவர் காலத்தில் மிக மிக அறிவாளி என்று அவரைப் புகழ்வதுடன் அவரே ஷேக்ஸ்பியர் நாடகங்களை எழுதியவர் என்று சொல்லுகிற வழக்கம் உண்டு. இவர் கட்டுரைகள் பல. ஆங்கிலக் கட்டுரையாளர்கள் பலரின் பெயர்களை, ஆங்கிலப் படிப்புப் படித்த இந்தியர்களுக்குத் தெரிய வைத்தவை.

ஸர் தாமஸ் ப்ரவுன் எழுதிய Religui Medici என்கிற நூல் ஒரு பெரிய கட்டுரை என்று சொல்லலாம். நடை அழகுடன் சிந்தனைத் தரமும் படைத்த நூல். சிலஆராய்ச்சிகளின் வியர்த்தமான போக்கு பற்றி என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர். உலிஸிஸை மயக்கிய ஸைரன் தேவிகள் என்ன பாட்டைப் பாடினார்கள் என்று ஆராய்கிறார்கள். முதலில் யுலிஸிஸ் என்று ஒருவர் இருந்தாரா என்பதே தெரியவில்லை. ஸைரங்கள் என்கிற தேவிகள் அவரை எதற்காக மயக்க வேண்டும் என்று தெரியவில்லை. புனைகதை விவரம் ஒன்றை உண்மை என்று ஏற்றுக் கொண்டு ஆராயப்புகுவது எத்தனை அசட்டுத்தனம் என்று கேலி செய்கிறார் ஸர் தாமஸ் ப்ரவுன்.

இதே மாதிரி லான்சிலாட் ஆண்ட்ரூஸ் செய்த மதப்பிரசங்கங்கள் எல்லாமே அற்புதமான கட்டுரைகளாக வாசிக்கக் கிடைக்கின்றன. இவர் தான் பைபிளின் இலக்கியப்பூர்வமான கிங் ஜேம்ஸ் மொழிபெயர்ப்புக் குழுவுக்குத் தலைவராக இருந்தவர். இவரைப் பற்றி ஓர் ஆழ்ந்த தவத்தில் டி. எஸ். எலியட் ஒரு நூலே எழுதியிருக்கிறார்.

ஆபிரஹாம் கௌலீ என்பவர் எழுதிய, "என்னைப் பற்றி" என்கிற கட்டுரை அநேகமாக ஒரு கால கட்டத்தில் ஆங்கிலம்

கற்ற எல்லோருக்குமே தெரியும். சிறப்பான முன்னுதாரணமான நல்ல கட்டுரையாக இதைச் சொல்லலாம்.

## இங்கிலாந்தில் கட்டுரை இலக்கியத்தின் பொற்காலம்

இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றாண்டைக் கட்டுரையாளர்களின் பொற்காலம் என்று சொல்லலாம். பத்திரிகைகள் தோன்றியதால் இந்தப் பத்திரிகைகளில் இலக்கியத்தரமான கட்டுரைகள் எழுதுவது என்பது வழக்கமாக இருந்தது. இப்படிக் கட்டுரை எழுதிப் புகழ் பெற்றவர் ஜோஸஃப் எடிசன், ரிச்சர்ட்ஸ் ஸ்டீல், ஸாமுவெல் ஜான்ஸன், ஆலிவர் கோல்ட்ஸ்மித், ஜானதான் ஸ்வீஃப்ட் என்று பலர் ஆங்கில இலக்கியத்தில் பெரும்புகழ் பெற்றவர்கள். இவர்களில் ஜான்ஸனும், கோல்ட்ஸ்மித்தும் தனிரகம். கோல்ட்ஸ்மித்தின் கட்டுரைகள் மிக மிகப் பிரசித்தமானவை. அதே அளவு பிரசித்தமடையா விட்டாலும் பலர் இலக்கியத் தரத்துடன் கட்டுரைகள் படைத்தார்கள். இந்தப் பதினெட்டாம் நூற்றாண்டுக் கட்டுரைகள் ஆங்கில இலக்கியத்தில் ஒரு கணிசமான பகுதியாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சார்லஸ் லாம்ப் என்பவருடைய ஆங்கிலக் கட்டுரை மாண்டேய்னுடைய தரத்தை எட்டியது என்று பொதுவாகச் சொல்லுவார்கள். ஆங்கிலத்தில் சிறந்த கட்டுரையாளர் யார் என்று கேட்டால் சட்டென்று லாம்ப் என்று சொல்லி விடுவார்கள். அவர் இலக்கியப்புகழ் இந்த எலியா கட்டுரைகள் மூலம் ஏற்பட்டது தான். பல மிக மிகச் சில்லறையான விஷயங்களைச் சுற்றிக் கட்டுரைகளை எழுப்பி அற்புதமான கூட கோபுரங்கள் ஜோடித்துக் காட்டுகிறார் அவர். சிந்தனை அளவில் மாண்டேய்ன் அளவில் இல்லா விட்டாலும், இனிமை, அழகு என்கிற அளவில் இவர் பிரமாதமாகவே விஷயங்கள் ஜோடித்துக் காட்டுகிறார்.

இன்னும் பல கட்டுரையாசிரியர்கள் அந்தக் காலத்தில் இருந்தார்கள். நல்ல பயன் தரும் உரைநடையில் ஆணித்தரமாக சரித்திர இலக்கியவிஷயங்கள் பற்றி லார்டு மெக்காலே என்பவர் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். மெக்காலேயை இந்திய இலக்கியத்துக்கு எதிரியாக அறிந்தவர்கள் இதுபற்றி ஆச்சரியப்படலாம். ஆனால் அவர்காலத்தில் மிகவும் போற்றப்பட்ட மிகச் சிறந்த இலக்கிய ஆசிரியர் லார்டு மெக்காலே. இந்தியர்கள் அவரை அதிகமாக இப்போது படிப்பதில்லை என்றாலும் உலக இலக்கியத்தரத்தில் இலக்கியம் செய்தவர் அவர்.

டிக்கென்சியின் The confession of an opium later, ஸர் தாமஸ் ப்ரௌனின் ரினிஜியோ மெடிசி போல நீண்ட கட்டுரை, ஜிலு, ஜிலு என்கிற நடையில் தன் கஞ்சா அனுபவங்களைத் தீட்டுகிறார். டிக்கன்சி, கோல்ரிட்ஜ், 'லே' ஹன்ட், ஹாஸ்லிட் இன்னும் பலரும் இலக்கியத் தரமான கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். வால்டர் பேட்டர், ஜான் ரஸ்கில், ஸ்டீஃபன் என்று பலரையும் சொல்லலாம். சார்லஸ் டிக்கன்ஸ் தன் பிரயாண அனுபவங்களை எழுதியிருக்கிறார். இவர்களில் ஆர். எல். ஸ்டீவென்ஸன் என்பவர் மிகவும் முக்கியமானவர் அவருடைய 'Virginibus Puctisque' என்கிற தொகுதியிலுள்ள கட்டுரைகளை மிகவும் சிறப்பாகச் சொல்லுவது வழக்கம். 'Travels With Donkey' என்கிற அவர் பிரயாண நூலும் கட்டுரை இலக்கியத்தில் பெயர் சொல்லக் கூடியது.

## இங்கிலாந்தில் இருபதாம் நூற்றாண்டில் கட்டுரை வளர்ச்சி

இருபதாம் நூற்றாண்டின் முதல் நாற்பது, ஐம்பது ஆண்டுகளில் பதினெட்டாம் நூற்றாண்டைப் போலப் பத்திரிக்கைகளில் பல சிறப்பான கட்டுரைகள் இடம் பெற்றன. இவற்றை எழுதியவர்கள் ஏ. ஜி. கார்டினர், ஈ. வி. லூகாஸ் ஹிலேர் பெல்லாக், ராபர்ட் வீண்ட், ஈ. பி. நாக்ஸ், போன்றவர்கள். இவர்களில் 'நவீன சார்லஸ் லேம்ப்' என்று பெயர் பெற்றவர், ஈ.வி.லூகாஸ் என்பவர். இவர்கள் எல்லோரையும் விட மிக நேர்த்தியாகவும் ஆழ்ந்த ஒருதளத்திலும் கட்டுரை எழுதியவர் G.K. செஸ்டர்டன் என்பவரைச் சொல்ல வேண்டும். மற்றவர்களுடைய கட்டுரைகள் காலத்தினால் திரிந்து விடுகின்றன. செஸ்டர்டனின் கட்டுரைகள் சிந்தனை ஆழத்தினாலும், வேறு யாவரும் தர முடியாத போக்கினாலும் இலக்கியத்தில் நிரந்தரமான இடம் பெறுபவை என்று சொல்ல வேண்டும்.

பெர்டிராண்டு ரஸ்ஸல், வர்ஜினிய வுல்ஃப் போன்றவர்கள் ஆழமான தளத்தில் அரசியல் இலக்கியக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். தத்துவ தரிசனம், அரசியல் அறிவு, சமுதாயப் பிரச்சனைகள், விஞ்ஞானத் தளம் என்று பல கட்டுரைகள் இந்தக் காலத்தில் எழுதப்பட்டுள்ளன. இவைகளில் பல, உலக இலக்கியத்தில் இடம் பெறக் கூடியவை. அறிவுத்துறைக் கட்டுரைகள் சமீப காலத்தில் மிகவும் அதிகமாகவே எழுதப்படுகின்றன அவற்றில் சில மிக மிக நன்றாக இருக்கின்றன,

## அமெரிக்காவில் கட்டுரை இலக்கியம்

அமெரிக்காவில் கட்டுரை இலக்கியம் 'வாஷிங்டன் இர்விங்' என்பவருக்கு முன்பாகவே தொடங்கினாலும் அவருடையதை முதலாவது கட்டுரையாகச் சொல்லுவது வழக்கமாகி விட்டது. அவருக்குப் பின் வந்த ரால்ஃப் வால்டோ எமர்சனின் கட்டுரைகள் உலக இலக்கியத்தில் மாண்டெய்ன், லாம்ப் இவர்களுடைய கட்டுரைகளுடன் இடம் பெறக் கூடியவை. மார்க்ட்வெயின், வால்ட் விட்மன், ஹெர்மன் மெல்வில் போன்ற வேறு துறையில் பிரசித்தமானவர்களும் கூடப் பல நல்ல கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்.

இருபதாம் நூற்றாண்டை ஒரு விதத்தில் அமெரிக்காவின் கட்டுரை இலக்கியத்தின் பொற்காலம் என்று கூறலாம். நடை அழகிலும், சிந்தனைப் போக்கிலும் மிகவும் சிறப்பாகப் பல ஆசிரியர்கள் எழுதியுள்ளார்கள். அவர்களில் ஒருவரான மெங்கன் என்பவர் 'Prejudices' என்கிற பெயரிட்டு (வெறுப்பான விஷயங்கள்)ஏழெட்டுத்தொகுதிகளாகக் கட்டுரை களை வெளியிட்டிருக்கிறார். லேசான விஷயங்களை வைத்துக் கொண்டு கிறிஸ்டஃபர் மார்லி என்பவர் நல்ல கட்டுரைகள் எழுதியுள்ளார். Safety Pins என்பது அவர் தொகுப்பு ஒன்றின் தலைப்பு.இன்னும் பலரையும் நல்ல தரமான கட்டுரையாளர்கள் என்று சொல்லலாம். இலக்கிய விஷயங்கள் பற்றி எட்மண்ட் வில்சன் என்பவர் எழுதிய கட்டுரைகள் மிகவும் சிறப்பானவை. லயனில் டிரில்லர் என்பவர் எழுதிய கட்டுரைகள் மிகவும் சிறப் பானவை. லயனில் முதலியவர் இலக்கிய விமரிசனத்துடன் பல இலக்கியக் கட்டுரைகளும் எழுதியிருக்கிறார்கள்.

## பிரான்சில் கட்டுரை இலக்கியம்

ஃபிரான்ஸில் நாவலாசிரியர்கள் மேன்மையான நாவல்கள், படைத்ததைவிடச் சிந்தனைக் கட்டுரையாளர்கள்தான் அதிக மேன்மை படைத்திருக்கிறார்கள் என்று ஆண்ட்ரேமீட் என்பவர் அபிப்பிராயம் சொல்லுகிறார். பாஸ்கல், டிடரோ, ரூஸ்ஸோ, வால்டேர் என்பவர்கள் எல்லோருமே கட்டுரையாளர்கள்தான். அவர்கள் சமுதாய மேம்பாட்டுக்கும், சமூகப் புரட்சிகளுக்கும் வழிவகுத்துத் தந்தவர்கள். பதினெட்டாம் நூற்றாண்டில் இது மிகமிகச் சிறப்பாக அறிவுத் தளத்தில் செயல்பட்டது. பத் தொன்பதாம் நூற்றாண்டிலும் கட்டுரை இலக்கியம் குறைந்து

விடவில்லை என்றாலும் முந்திய நூற்றாண்டின் ஆசிரியர் களைப் போல உலகக் கவனத்தைக் கவரவில்லை.

ரோமென் ரோலாந்து என்பவர் உலகக் கவனத்தைக் கவரத் தக்க அளவில் கட்டுரைகள் எழுதியுள்ளார். ராமகிருஷ்ணர், விவேகானந்தர், காந்தி என்பவர்கள் பற்றி அவர் எழுதிய கட்டு ரைகள் உலகக் கவனத்தை இவர்கள்பால் திருப்பின. மாரீஸ் மேடர்லிங்க் என்கிற ஒரு ஃபிரெஞ்சு நாடகாசிரியர் தாகூருக்கு முந்திய ஆண்டு நோபல் பரிசு பெற்றவர்-விதியும் மதியும் என்றும், தாழ்ந்தவர்களின் ஐசுவரியம் என்றும் பல கட்டுரை களை எழுதியிருக்கிறார். இவை ஒரு காலத்தில் உலகத்தின் கவனத்தைக் கவர்ந்தவை. பின்னர், அதுபோல்-ஃபிரான்சு, பால்வலேரி, ஹென்றி பெர்க்ஸன் போன்றவர்களின் கட்டுரை களும் உலக இலக்கியத் தரத்தை எட்டுபவை.

**உலகின் பிறமொழிகளில் கட்டுரை இலக்கியம்**

ஸ்பானிய மொழியில் மிகேல் டெ யுனுமானோ என்பவர் எழுதிய புரட்சிக் கருத்துக் கட்டுரைகள் மிகவும் முக்கியமானவை. நவீன சகாப்தத்தை உண்டாக்கிய பெருமை அவருக்கு உண்டு. இதே அளவில் ஸால்வடார் படோரியாகா என்பவர் நூல்களும், கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். ஜெர்மன் மொழியில் தாமஸ் மன் என்கிற உலகப்புகழ் பெற்ற நாவலாசிரியர் எழுதிய கட்டு ரைகள் மொழி பெயர்க்கப்பட்டு இலக்கியத் தரமாக அமைந் திருப்பது நமக்கும் தெரிகிறது.

சீனத்திலும், ஜப்பானிலும் கட்டுரைகள் எழுதுகிற பழக்கம் பல நூற்றாண்டுகளாகவே இருந்து வந்திருப்பது தெரிகிறது. நாற்பது, ஐம்பது தொகுப்புகள், கட்டுரைகள் ஜப்பானில் 14, 15ஆம் நூற்றாண்டுகளில் தொகுக்கப்பட்டுப் பிரபலமாக இருந்த தாகத் தெரிகிறது. அதே தலைப்பில் இன்று இத்கேபி என்று ஒரு ஜப்பானியப் பேராசிரியர் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இவருடைய தொகுப்பு ஒன்றை சமீபத்தில் நான் வாசிக்க நேர்ந்தது. மிகவும் சிறப்பாக ஓரளவில் மாண்டேயினின் சிந்தனை அடிச்சுவட்டையொட்டிச் செயல்படுவதாகத் தெரி கிறது. லின் யுடாங் எழுதிய இரண்டு புஸ்தகங்களையும் படித்த வர்களுக்கு அவர் பல சீனக்கட்டுரையாளர்கள் பற்றிச் சொல்லு வதிலிருந்து பல விஷயங்கள் தெரிய வருகின்றன. சீனத்துக் கட்டுரைகள் பல மொழி பெயர்க்கப்படாமலே உள்ளதாகத் தெரிகிறது. The Importance of Living என்கிற நூலை எழுதிய லின்யூடாங்கையே பெரிய கட்டுரையாளராகக் கருத வேண்டும்.

### இந்தியாவில் கட்டுரை இலக்கியம்

இந்தியாவில் சமஸ்கிருத மொழியிலோ, ஆரம்ப காலத்தில் மற்ற நவீன மொழிகளிலோ கட்டுரை இலக்கியம் கட்டுரை என்கிற அர்த்தத்தில் பயிலப்பட்டதாகத் தெரியவில்லை. கனமான, தத்துவரீதியான கட்டுரைகள் பல இருக்கின்றன. அவற்றைப் பற்றி இரண்டாவது பகுதியில் கவனிக்கலாம்.

தமிழில் வ.வே.சு. ஐயருடைய கட்டுரைகளும், பாரதியாருடைய கட்டுரைகளும் மிகவும் சிறப்பானவை. வ.வே.சு. அய்யர் மெர்ஸனின் என்கிற கட்டுரையை நேராக மொழி பெயர்த்தும் பார்த்திருக்கிறார். தி.ஜ. ரங்கநாதன் என்பவரின் 'பொழுது போக்கு' என்கிற கட்டுரைத்தொகுப்பு இலக்கியரீதியில் கவனம் பெறவேண்டிய ஒன்று. வ.ரா.வின் கட்டுரைகள் மிகவும் சிறப்பானவை- 'மழையும், புயலும்', 'நடைச்சித்திரம்' என்று இரண்டு தொகுப்புகள் வெளிவந்துள்ளன. Essay என்கிற பதத்துக்கு நடைச்சித்திரம் என்கிற தமிழ்ப்பெயர் மிகவும் பொருத்தமானது என்று சொல்ல வேண்டும். ஏ.கே. செட்டியாரின் பிரயாணக் கட்டுரையில் உலக இலக்கியத்தில் சிறப்பான இடம் பெற வேண்டியவை என்பது என் கணிப்பு. ராமசாமிப் பெரியாரின் கட்டுரைகளில் உண்மை ஒளி காணவில்லை. குரல், இலக்கியத் துக்கு ஒவ்வாத அளவில் உரக்கத் தொனிக்கிறது என்பதனால் தோன்றுகிறது.

### கட்டுரையின் பாடுபொருள்

கட்டுரைகளில் இரண்டாவது பகுதியை இப்போது பார்ப் போம். இந்தப் பகுதியில் உலக சிந்தனையை வெகுவாகப் பாதித் திருக்கிற பல நூல்கள் அடங்கும். இது விஸ்தாரமான பகுதியல்ல என்றாலும், ஓரளவுக்கு இலக்கியத்துக்குள் அடங்கிய பகுதியல்ல என்றாலும் இவையும் உலக இலக்கியமாக, இலக்கியத் தரமாக அமைந்திருக்கின்றன என்று சொல்ல வேண்டும்.

இலக்கியம் மட்டும் வாழ்க்கைக்குப் போதுமா என்று கேள்வி கேட்க நினைப்பவர்களுக்கு இந்தப் பகுதி மிகமிக முக்கியமானது. இதை இங்கு ஓரளவுக்குத் தொட்டுக் காட்டுகிறேன்.

கி.மு. ஆறாவது நூற்றாண்டில் உலகெங்கும் பரவலாக ஒரு சிந்தனைப் புரட்சி ஏற்பட்டது. இந்தச் சிந்தனைப் புரட்சியைச் சாத்தியமாக்கியவர்கள் மூவர்-சீனத்தில் கன்ஃபூஷியஸ், இந்தியாவில் புத்தர், கிரேக்கத்தில் ஸாக்ரடீஸ், மூவரும் மூன்று விதமான வித்தியாசப்பட்ட வாழ்க்கை வாழ்ந்தவர்கள்.

கன்ஃபூஷியஸின் உபதேசங்கள் அவர் சொன்னதாகச் சொல்லப்படும் சிறு சிறு சம்பாஷணைகளாகவும், சம்பவங்களாக வும் நமக்கு அவருடைய Analects என்கிற நூலில் கிடைக் கின்றன. அவற்றை இலக்கியத் துறையாக வேறு எதிலும் அடக்க முடியாது. 'எங்கே மனிதன் மனிதனாகவும், பொன் பொன்னாகவும், மந்திரி மந்திரியாகவும், பிரதானி பிரதானி யாகவும், அதிகாரிகள் அதிகாரிகளாகவும் நடந்து கொள்கிறார் களோ-அங்கே அமைதி நிலவுகிறது; சுபிக்ஷம் நிலவும்'', என்றும், ''உனக்கு இந்த ஆட்டுக்குட்டி உயிர் துறப்பது தவறு என்று தோன்றுகிறது எனக்கு பலி கொடுக்கும் சடங்கு அழகானதாகத் தோன்றுகிறதே!'' என்றும், ''முற்காலத்தில் சரித்திரம் எழுதிய வர்கள் தங்களுக்குத் தெரியாத விஷயங்கள் உண்டு என்று குறிக்கத் தங்கள் நூல்களில் சிலபக்கங்களைக் காலியாக விடுவார் கள். இன்றுள்ளவர்கள் எல்லாப் பக்கங்களையும் நிரப்பி விடு கிறார்களே'', என்றும், ''மனிதர்களைப் பற்றிப் பூரணமாகத் தெரிந்து கொண்ட பின் கடவுளைப் பற்றிக் கவலைப்படு வோம்'', என்றும் சொன்னார் கன்ஃபூஷியஸ்.

புத்தர் பற்றி நமக்கெல்லாம் தெரியும், இந்தியாவில் வைதிக கருமானுஷ்டானங்களை எதிர்த்துக் காருண்யம் என்கிற தத்து வத்தையும், 'ஆசைப்படாதிருப்பதே வாழ்க்கை வழி' என்றும், 'மோக்ஷம் என்பது சூனியம்', என்றும் சொன்னவர் இவர். இவரு டைய நேரடி உபதேசங்கள் எல்லாம் பாலி மொழியில் பிரசங்க ரூபமாக வெளிவந்தன. இந்தப் பிரசங்கங்களை எந்த இலக்கிய வகையில் சேர்ப்பது என்பது நிச்சயப்படாத விஷயம். தம்ம பதம், தீப்பிரசங்கம் முதலியவற்றையும் கட்டுரை இலக்கியமாக ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. இவை இலக்கியமாக உயர்ந் திருப்பதுடன் உலகப் போக்கையும் வெகுவாகப் பாதித்த நூல்கள்.

கிரேக்க தத்துவ ஞானியாகிய அவர் காலத்திய மிகச்சிறந்த அறிவாளியாகவும் மதிக்கப்பட்ட ஸாக்ரடீஸ் என்பவர் ஒரு நூலும் எழுதியதாகத் தெரியவில்லை. எனக்குத் தெரிய வில்லை, நீ சொல்லு!, என்றே விவாதரீதியில் எதிராளியையே உண்மை என்கிற நழுவிப்போகும் விஷயத்தை எட்டச் செய் தவர் அவர். அவர் சம்பாஷணைகளை அவர் சிஷ்யர்களான ப்ளேடோ, ஸெனாஃபன்! போன்றவர்கள் நமக்காகத் தொகுத்துத் தந்திருக்கிறார்கள். ஸாக்ரடீஸ் என்கிற அஸ்தி வாரம் இல்லாவிட்டால் ஐரோப்பிய இலக்கியம், ஐரோப்பிய தத்துவம், ஐரோப்பிய விஞ்ஞானம் என்றெல்லாம் கிடையாது

என்று சொல்லுகிற அளவுக்கு முக்கியமானவர். ஸாக்ரடீஸின் சம்பாஷணைகள் என்கிற இலக்கியத்தையும் கட்டுரை இலக்கியத்தில் சேர்த்து—அது வேறு எங்கும் இடம் பெறாது என்பதனால்—பார்ப்பது நல்லது.

உலகில் ஒரு புதுமாதிரி அறிவுத்தேடலை ஸ்தாபித்ததுடன் 'எல்லோரும் சிந்தித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வரக்கூடிய சக்தி பெற்றவர்கள்!' என்று தெளிந்து சொன்னவர் ஸாக்ரடீஸ். இந்த அளவில் அவர் இன்று போற்றப்படுகிற ஜனநாயகத்துக்கு அடிகோலியவர் என்று சொல்ல வேண்டும். வினாவிடை முறை அதற்கு முன் பழக்கத்திலிருந்தாலும் அந்த முறையை ஒரு லக்ஷிய வேகத்துடன் செய்தவர். நமக்குத் தெரியாது என்று எண்ணுவதே தெரிந்து கொள்வதன் அறிவின் அஸ்திவாரம் என்று இவர் நம்பிச் செயலாற்றினார். இதுவே பல விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கும் அஸ்திவாரமாக அமைந்தது. மனிதச் சிந்தனைக்கு எட்டாதது எதுவும் இல்லை என்பதும் ஸாக்ரடீஸின் பாணியில் தொக்கி நிற்கிறது. இது நவீனத்துவத்தின் ஓர் அடிப்படை. இதெல்லாம் போக, ஸாக்ரடீஸ் வேறு ஒரு விதத்திலும் நமக்கு மிகவும் நெருங்கியவராகிறார். அவர் உலகுக்கெல்லாம் உபதேசித்து மனமாற்றினாலும் வீட்டில் 'ஸாந்திப்பே' என்கிற அவர் சண்டித்தனமான சகதர்மிணியிடம் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதாகத்தான் இருந்தது. இன்றைய உதாரணம் சுப்பிரமணிய பாரதி, எத்தனைதான் பெண்கள் விடுதலை, சமூக சீர்திருத்தம் என்று பாடினாலும், ஆடினாலும், அவர் மனைவியிடம் அவர் தோல்வியை ஏற்றுக்கொள்ள வேண்டியே இருந்தது. அவர் மனைவி அவருக்குப்பின் மொட்டையடித்துப் பிராம்மண விதவையாகக் காட்சியளித்ததை நான் பார்த்திருக்கிறேன்.

இந்த மூன்று சிந்தனையாளர்களின் கருத்துகள் பல்வேறு ரூபங்களில் வெளியான கட்டுரைகள். இதே போலப் பகவத்கீதை, விவேகாநந்தர் பிரசங்கங்கள் இவற்றையெல்லாம் சொல்லலாம்.

ஸெயின்ட் அகஸ்டினின் சுயசரிதத்தை முதல் சுயசரிதமாகச் சொல்வது வழக்கம். அதையும் கட்டுரை இலக்கியமாகவே கருதலாம். 'ப்ளூடார்க்' எழுதிய கிரேக்க-ரோமாபுரி வீரர்கள் சரித்திரத்தையும் கட்டுரைகளாகவே கருதவேண்டும் என்பதும்; பின் ஸர் டாண்டே இத்தாலிய மொழியை லத்தீனுக்குப் பதிலாக உபயோகிப்பது நல்லது என்று எழுதிய நூலையும் கட்டுரை இலக்கியத்தில் சேர்த்துக் கொள்ளலாம்.

கார்ல் மார்க்ஸின் 'காபிடல்' சிக்மண்ட்ஃப்ராய்டின் கனவு களின் அந்தரம் போன்ற நூல்கள், நீட்ஷேயின் நூல்கள்எல்லாம் கட்டுரை இலக்கியத்தின் பகுதிகளாகும், சார்லஸ் டார்வினின் மனித இனத்தின் ஆரம்பம்! வஸாரியின் சித்திரக்காரர்களின் சரித்திரம் (இத்தாலியனில்) என்று இந்த வரிசை மிக நீளமாக வளர்ந்து வருகிறது.

இன்று கார்ல்ஸகான் என்பவர் எழுதிய பிரபஞ்ச விஞ்ஞான நூலைக்கூடக்கட்டுரை இலக்கியமாகவேதான் சேர்க்கவேண்டும்.

இந்தியாவில் ஸ்வாமி விவேகானந்தர், மகாத்மா காந்தி, ஜவஹர்லால் நேரு போன்றவர்கள் எழுதிய கட்டுரைகள் இலக்கியமாகவே இடம் பெற்று உலகக் கட்டுரை இலக்கியத்தை அலங்கரிக்கின்றன. இந்த அளவில் பார்க்கும்போது ஈ.வே.ரா. எழுத்துகளையும் இலக்கியமாகவே கருத வேண்டியிருக்கிறது.

## ஈ. சிறுகதை

உலகத்தில் கதை இலக்கியம் வெகுகாலமாக இருந்து வந்தி ருக்கிறது. ஆனால் சிறுகதை என்கிற இலக்கியத்துறை தோன்றி இயங்கத் தொடங்கியதைப் பத்திரிகைகள் தோன்றிய பிறகு பத்திரிகைகள் தேவையை அனுசரித்துச் செயல்பட்டன என்று சொல்ல வேண்டும்.

உலகத்தின் கதைவளம் சிறப்பாக இந்தியாவிலும் சீனாவி லும் அராபிய பாரசிகப் பிரதேசங்களிலும் செயல்பட்டிருக்கின் றன. தமிழில் சங்ககாலக் கவிதைகள் சிலவற்றைக் கதை இலக் கிய அடிப்படையில் பார்க்கலாம். சமஸ்கிருதத்தில் கதாசரித் ஸாகரம், புத்தர் ஜாதகக் கதைகள், என்று பலவற்றை முன் உதாரணமாகக் கூறினாலும் சிறுகதை இலக்கியம் எட்கார் ஆலன்போ என்கிற ஒரு அல்பாபுஸ் அமெரிக்க மேதையுடன் தான் தொடங்குகிறது என்று சொல்ல வேண்டும்.

### உலகச் சிறுகதையாளர்களும், போக்கும்

எட்கார் ஆலன்போவுக்கும், புதுமைப்பித்தனுக்கும் பலவித ஒற்றுமைகள் உண்டு. சிறுகதைகளில் பல ரகங்களை உற்பத்தி செய்து மிகவும் சிருஷ்டித்தரமான அளவில் தன் மேதையைக்

காட்டியிருக்கிறார் போ. சமகாலத்தவர்கள் அவரைப் பைத்தியக்காரராகவும், குடிகாரனாகவும், நம்பிக்கை வைக்கத் தகாதவனாகவும், கருதினர்கள் என்றாலும், கஷர் லிட்டில் வீழ்ச்சி, அமரண்டில்லாமே, விஜிமா, பெண்டலமும் என்கிற சிறுகதைகளை எழுதிய சிருஷ்டிகர்த்தரை உலகின் சிறந்த சிறுகதையாசிரியராகவே கருதவேண்டும்.

ஃபிரான்சில் கை. டி. மோபஸான் என்பவர் சிறுகதையில் பல சாதனைகளைச் செய்ய முடியும் என்று செய்து காட்டினார். இவர் கதைகளில் பால் உணர்ச்சி ஃபிரெஞ்சு வாழ்க்கை மரபுக்கேற்றபடி இடம் பெற்றது. பல அற்புதமான கதாபாத்திரங்களைச் சிருஷ்டித்துத் தந்திருக்கிறார்.

ருஷ்யமொழியில் எழுதிய ஆண்டன் செக்காவைச் சிறுகதை இலக்கியத்தில் ஒரு சிறப்பான சிகரமாகச் சொல்ல வேண்டும். முடிவில்லாத முடிவுகளைச் சிந்தனையைத் தூண்டுவதாக அமைத்துத் தருகிறார் என்பது இவர் சிறப்பு.

'ஓ ஹென்றி' என்கிற அமெரிக்க மேதை கடைசி ஒரு வாக்கியத்தில் கதைக்கு ஒரு திருப்பம் தந்து ஒரு அதிசயமான பாவத்தை உற்பத்தி செய்து கதையை முடிப்பதில் வல்லவர்.

இந்த நான்கு மேதைகளோடு சமீபகாலத்தில் தென்அமெரிக்காவில் தோன்றிய ஸ்பானிய மொழியில் கதைகள் எழுதிய ஜார்ஜ் லூயி போர்வெரஸ் என்பவரையும் ஒரு புது அறிவுப் பரிமாணத்தைச் சிறுகதைகளுக்குக் கொணர்ந்தவர் என்று சேர்த்து ஐவரையும் உலகச் கிறுகதையின் ஐந்து தூண்களாகச் சொல்ல வேண்டும்.

நல்ல தரமான சிறுகதைகள் என்று உலகத்தில் ஓர் ஆயிரம் சிறுகதைகள் தேர்ந்தெடுக்கலாம். அதில் ஐம்பது, அறுபது தற்காலத்திய இந்தியச் சிறுகதைகள் சேரும். உலக இலக்கிய அளவில் தமிழில் எழுதுபவர்களில் புதுமைப்பித்தன், கு. பா. ராஜகோபாலன், மௌனி, தி. ஜானகிராமன், லா. ச. ராமாமிர்தம், கு. அழகிரிசாமி என்று பலரைத் தமிழிலிருந்து சொல்லலாம்.

சில சிறுகதையாசிரியர்களின் பெயர்களை மட்டும் சொல்லுகிறேன். அவர்கள் தருகிற அனுபவங்கள் பற்றி விரிவாகச் சொல்ல இங்கு இடமில்லை.

அமெரிக்கர்களில் ப்தெட் ஹார்டே, நதானியல், ஹாதார்ண், ஆம்புரோஸ் பியர்ஸ், ஹேமிங்வே, காதரின் ஆன் போர்ட்டர், வில்லியம் ஸரோயன், ஆங்கிலத்தில் காதரின்

மான்ஸ்ஃபீல்டு, ஆர்.எல். ஸ்டீவென்ஸன், ருட்பார்ட் கிப்ளிங், ஜேம்ஸ் ஜாய்ஸ்; ஃபிரான்ஸில் ஓகனார் ஃபிரான்சு ஆண்ட்ரே ழீட், கோலெட்; ஜெர்மனியில் பால்வான் ஹெய்லே, தாமஸ்மன், ஹெர்மன் ஹெறுலே; செக்கோஸ்லோவேகியாவில் காரெல் சாபெக்; ருஷ்யாவில் டர்கெனிவ், கோகால், டால்ஸ்டாய், கார்க்கி; ஸ்காண்டிநேவியாவில் ஸெல்மாலாகர் லெவ், நட்ஹம்ஸன், யோகஸ் ஜென்சன், ஜப்பானில் டையிகோ ஹிராபர்பாஷி, ஜானிசிரோ டனிஸாகி, சீனாவின் சொஸுன் என்று இந்தப் பட்டியல் பெரும்பட்டியலாக நீளும். அநேகமாக எல்லா நவீன நாவலாசிரியர்களுமே சிறு கதைகளும் எழுதிப் பார்த்திருக்கிறார்கள். 1930 களில் யூதச்சிறுகதைகள் உலகத்துச் சிறந்த சிறுகதைகள் என்று ஒருதொகுப்பு வந்து பிரமாதப்பட்டது நினைவிருக்கிறது. எகிப்திலும், டாக்கியிலும் நல்ல சிறு கதைகள் எழுதுகிறவர்கள் இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. சிலருடைய கதைகள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் படிக்கப்படுகின்றன. ஆப்பிரிக்காவில், மலேசியாவில், இன்டோநீஜியாவில் புதுத்துறை யாகச் சிறுகதை செயல்பட்டு வளம்பெற்றுக் கொண்டிருக்கிறது.

### இந்தியச் சிறுகதைகளின் போக்கு

இந்தியாவில் முதல் சிறுகதையாளர் ரவீந்திர நாத் தாகூர். காலத்தில்முந்தியது அவருடைய சிறுகதைத்தொகுப்பு. அவரைத் தொடர்ந்து பல மொழிகளிலும், பல சிறந்த சிறுகதையாசிரியர்கள் எழுதி வந்திருக்கிறார்கள். நல்ல உலகத் தரத்தை இலக்கிய ரீதியில் எட்டுவதாக நூறு கதைகள் வரையில் பல மொழிகளிலிருந்தும் தொகுத்தால் அதில் 50 கதைகளாவது விமர்சகர்களால் நிச்சயமாகப் பாராட்டப் பெறலாம்.

### உலகச் சிறுகதையாசிரியர்களில் இடம்பெறும் தமிழர்கள்

தமிழில் முதல் சிறுகதையை எழுதியவர் வ.வே.சு. அய்யர். அய்யரும், பாரதியாரும் தாகூர் கதைகளை மொழிபெயர்த்திருக்கிறார்கள். உலக இலக்கியத் தரத்தை மனத்தில் கொண்டு முதல் இரண்டு மறுமலர்ச்சிகளை உருவாக்கியதாக ஆறு சிறு கதாசிரியர்களைப் பெயர் குறித்துச் சொல்லலாம். புதுமைப் பித்தன், கு.பா.ரா., மௌனி, கு.ப. அழகிரிசாமி, தி.ஜானகிராமன் லா.ச.ரா பின்னால் வந்தவர்களில் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவர்கள் ஜெயகாந்தன், சுந்தரராமசாமி, நகுலன்; ச. கந்தசாமி, அசோகமித்திரன், வண்ணநிலவன், கோபி கிருஷ்ணன், வண்ணதாஸன், நாஞ்சில்நாடன் என்று இன்று வரை சிறுகதை சிருஷ்டிகள் உயர்தரத்தை எட்டியுள்ளனர்.

நல்ல சிறுகதைகள் என்று ஓர் ஆசிரியருக்கு ஏற்கக் கூடியதாக அறுபது கதைகள் வரையில் இந்த அறுபது எழுபது ஆண்டுகளில் கணக்கெடுத்துச் சொல்லலாம். சிறுகதை வளம் பெற்றுக் கொண்டிருக்கிற ஒரு துறை.

குறுநாவல் என்று ஒரு துறை பத்திரிகைத் தேவைகளினால் தமிழில் உள்ளது. இது நார்வேயில் ப்யோர்ன்ஸன் என்பவரும், இத்தாலியில் பல இலக்கியாசிரியர்களும் கையாண்ட துறை. தமிழில் இத்துறையில் தி. ஜானகிராமனும், ஜெயகாந்தனும் ஓரளவுக்குச் சாதனை காட்டி இருக்கிறார்கள் என்று சொல்லலாம்.

இந்தியச் சிறுகதையாசிரியர்கள் என்று சொல்ல, பரசுராம் (வங்கம்), பிரேம்சந்த் (ஹிந்தி), காரூப் நீலகண்ட பிள்ளை (மலையாளம்), மாஸ்தி வேங்கடேச ஐயங்கார், யூசுப், அனந்த மூர்த்தி, (கன்னடம்), பி. பத்மராஜு (தெலுங்கு), கய்காதர் காட்கில் (மராத்தி) என்று பலரைச் சொல்லலாம். இந்தப் பட்டியல் பூரணமாகாத பட்டியல். எனக்கு எட்டியவரையில் சில பெயர்களைக் குறித்திருக்கிறேன்; என் கண்ணுக்கெட்டாத பல சிறு கதையாசிரியர்கள் இருக்கவே கூடும்.

## உ. நாவல்

**உலக நாவலாசிரியர் இருவர்**

நாவல் என்கிற இலக்கிய உருவத்தை மிகவும் சிறப்பாகப் பல நூற்றுக் கணக்கானவர்கள் பல்வேறு மொழிகளில் கையாண்டிருக்கிறார்கள்.

உலகில் மிகச் சிறந்த நாவல் எது என்று கேட்டால் விமர்சகர்களில் ஒரு சாரார் லியோ டால்ஸ்டாயின் Warandpeace என்ற நாவலைச் சொல்லுவார்கள். டால்ஸ்டாயே இன்னொரு சிறந்த நாவலையும் - அன்னாகரினீனா- எழுதியிருக்கிறார்.

உலகில் சிறந்த நாவலாசிரியர் யார் என்று கேட்டால் அநேகமாக எல்லா விமர்சகர்களுமே வியோடா டாஸ்டாவ்ஸ்கி என்கிற நாவலாசிரியரைத் தான் சொல்லுவார்கள். அவர் சிறப்பாக, நல்ல இலக்கியத்தரமாக நாலைந்து நாவல்களாவது எழுதியிருக்கிறார்.

இன்று இவ்விருவருடைய தரத்தில் இல்லாவிட்டாலும் உயர்ந்த தரத்தில் எழுதியவர் சார்லஸ் டிக்கன்ஸ் என்பவர். பல நூற்றுக்கணக்கான பாத்திரங்களைப் படைத்து உலாவ விட்டிருக்கிறார். இந்த அளவுக்கு உலகில் உயிருள்ள பாத்திரங்களாக வேறு ஒருவர் ஃபிரெஞ்சு மொழியில் எழுதிய 'ஹொரேஸர் டி பால்ஸாக்' சிருஷ்டித்திருக்கிறார். அவர் தன் நாவல்களை மனித ஹாஸ்ய நாடகம் என்கிற தலைப்பில் நாற்பது நாவல்கள் வரை எழுதினார் என்று சொல்லுகிறார்கள்.

இப்படி மேன்மையான நாவலாசிரியர்களிடையே கூடப் பல குறைகளைக் காண்பவர்கள் உண்டு. டால்ஸ்டாய் சரித்திரம் பற்றிப் பலர் ஏற்றுக் கொள்ளாத சித்தாந்தத்தை ஸ்தாபிக்க முயன்று தோற்று விடுகிறார். பல பாத்திரங்கள் அவர்கள் சம்பந்தப்பட்டதாக நாவலில் சொல்லப்படாத பல சந்தர்ப்பங்களில் கூட எப்படிநடந்து கொள்வார்கள் என்று வாசிப்பவருக்கு எளிதில் விளங்கிக் கொள்ள எழுதியிருப்பதாக விமர்சகர்கள் சொல்லுவார்கள். உதாரணமாக,'ப்ரின்ஸ் ஆண்ட்ரூ' இப்போது இந்த ஹாலுக்குள் வந்தால் எந்தக் காலை அறைக்குள் முதலில் வைப்பார், யாரைப் பார்த்து முதலில் பேசுவார், என்ன சொல்லுவார் என்று அனுமானிக்கும் படியாக மிகவும் அழுத்தமாகப் பாத்திர சிருஷ்டி செய்திருக்கிறார் என்று சொல்லுவார்கள். இருந்தும் சரித்திர தத்துவத்தை ஒரு கலாசிருஷ்டி மூலம் ஸ்தாபித்தும் பிரச்சாரம் செய்வது ஒரு குறையே என்று பல விமர்சகர்கள் கருதுகிறார்கள்.

### நாவல் இலக்கியத்தில் பிரச்சாரங்கள்

அதே மாதிரி டாஸ்டாய்வ்ஸ்கி மிகவும் உயர்ந்த நாவலாசிரியர் தான் என்றாலும் அவருடைய நாவல்களில் ஒரு மெலாட்ராமாடிக் போக்கு அதாவது குரலை உயர்த்தி உணர்ச்சி மேலிட எழுதுவதும், சில இடங்களில் அதிகமாக வார்த்தைகளைக் கொட்டுவதும் அவர் குறைகள். என்றாலும், ஆன்மாவைத் தொட்டுக் காட்டுகிற மாதிரி எழுதுவது அவருடைய குணம். இந்த அளவுக்கு ஆன்மீக ஆழத்தையும், உயரத்தையும் எட்டியவர்கள் என்று கவிகளில் சிலரைச் சொல்லலாம்; நாவலாசிரியர்களில் வேறு யாரையும் சொல்ல இயலாது என்பார்கள்.

சார்லஸ் டிக்கன்ஸ் என்கிற ஆங்கில நாவலாசிரியர் உயிருள்ள பல பாத்திரங்களைச் சிருஷ்டித்து நடமாட விட்

டாலும் அவர் காலத்தில் அவர் கண்ட சமுதாயக் குறைகளை அதிகமாக வைத்துக் கதை செய்வதனால் ஓரளவுக்கு அந்தச் சமுதாயக் குறைகள் இன்று நீங்கிய பிறகு, அவர் கலை பங்கமுறுகிறது என்கிறார்கள். கடனாளியைச் சிறையில் அடைப்பது, கல்வி கற்கும் மாணவர்களைத் துன்புறுத்தி இன்பம் காணும் உபாத்தியாயர்கள் நீதித்தளங்களில் நீதி கிடைப்பதில் தாமதம் என்பதையெல்லாம் பற்றி அவர் பெரிசுபடுத்தி எழுதுகிறார் என்பது அவர் குறைகளில் முக்கியமானதாகச் சொல்லுவார்கள்.

பால்ஸாக்கின் பாத்திர சிருஷ்டி வியப்படையச் செய்வதேயாயினும் அவர் புரட்சிகரமான மனப்பான்மை படைத்தவரல்லர். மனிதனின் யோர்ஷிவா குணாதிசயங்களைப் பற்றியே பெரிதாக எழுதுகிறார் என்று குறை சொல்லுவார்கள்.

இப்படி மேன்மையான நாவலாசிரியர்களில் கூடக் குறைகள் இருப்பதாகக் கருதப்படுகிறது. இருந்தாலும் இவர்களைப் பெரும் கலை புரிந்த நாவலாசிரியர்களாகச் சொல்லுவது வழக்கம்.

### ஆங்கில நாவலாசிரியர்கள்

நாம் ஆங்கில மூலம் தான் பொதுவாக ஐரோப்பிய இலக்கியங்களைப் பார்க்கிறோம் என்பதனால் முதலில் ஆங்கில இலக்கியத்தில் தரமான நாவலாசிரியர்களைப் பற்றிப் பார்ப்போம்.

ஆங்கிலத்தில் முதல் நாவல் என்று டேனியல் டிஃபோவின் ராபின்ஸன் க்ரூஸோவைச் சொல்லுவார்கள். அது பொதுவாக ஒரு சிறுவர் கதையாகச் சொல்லப்பட்டாலும் அதன் அந்தரார்த்தங்கள் விரித்து உரைக்கப்பட்டு அது மேன்மையான நூலாகவே கருதப்படுகிறது. ஒரு தனிமனிதன் எந்தச் சந்தர்ப்பத்தையும் நிதானமாக எதையும் எதிர்கொண்டு வெற்றி பெற்று வாழமுடியும் என்பதைக் க்ரூஸோ தனித்தீவு அனுபவங்கள் மூலம் நம்மை உணர வைப்பதாகச் சொல்லுகிறார்கள்.

ஜானதான் ஸ்விஃப்ட் என்பவர் எழுதிய கல்லிவர் என்கிற நாவல், கருத்துகள் நிறைய உள்ள நாவலாக இங்கிலாந்தின் நடப்பு முறைகள், தத்துவப்போக்கு, அரசியல் விஷயங்களைக் கேலி செய்ய எழுந்தது இதை நாவல் கலைத்திறத்துடன் அழகாகச் செய்திருக்கிறார். கருத்து நாவல் என்பதன் ஒரு சிகரமாக இதைக் கருத வேண்டும்.

லாரன்ஸ் ஸ்டெர்ன் என்கிறவர் எழுதிய டிரிஸ்புரம் ஷாண்டி என்கிற நாவல் அதன் உத்தி விசேஷங்களுக்காக இன்றளவும் பாராட்டப் பெறுகிறது. ஒரு குழந்தை பிறக்கிற சமயத்தில் ஆண் மருத்துவனை அழைப்பதா, பெண் மருத்துவச்சியை அழைப்பதா என்கிற விவாதத்தை விஷயமாக வைத்துக் கொண்டு உலகத்தை விண்டு விண்டு காட்டுகிறார் ஆசிரியர்.

இவையெல்லாம் பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இவை தவிர ஹென்றி ஃபீல்டிங், ஆலிவர் கோல்ட்ஸ்மித், ஸாமுவெல், ரிச்சர்ட்ஸன், டாக்டர் ஜான்ஸன் எல்லோரும் நாவல்கள் எழுதியிருக்கிறார்கள், டாம் ஜோன்ஸ் (ஃபீல்டிங்), விகார் ஆஃப் வேக், பீல்டும் (ஆலிவர் கோல்ட ஸ்மித்) மிகவும் சிறப்பான நாவல்களாக ஆங்கிலேயர் கவனத்தில் வெகுகாலம் நீடித்தவை.

## நாவல் இலக்கியத்தில் சில புதிய முயற்சிகள்

ஃபிரெஞ்சு மொழியில் எழுந்த திகில் பயங்கர நாவல்களை ஒட்டிப் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல பல நாவல்கள் ஆங்கிலத்திலும் எழுதப் பெற்றன. மர்மமான ஒரு கோட்டை, இருட்டான ஒரு பின்புலம் பீதி விளைவிக்கும் ஒரு சூழ்நிலை, சில அமானுஷ்யமான அனுபவங்கள், சம்பவங்கள் என்று இந்தத் திகில் நாவல்கள் மிகவும் ஜனரஞ் சகமாக இருந்தன. விஞ்ஞான பூர்வமாகப் பிணங்களின் பாகங்களை எடுத்துச் சேர்த்து உயிரூட்டி ஃபிராங்கன்ஸ்டீன் ஒரு பாத்திரத்தைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம் பத்தில் உலாவ விட்டார் மேரிஷெல்லி. இந்த ஃபிராங்கன் ஸீடினை விஞ்ஞானக் கதைகளுக்கு முன்னோடியாகக் கருத வேண்டும்.

திகில் அம்சங்களே யில்லாமல் வீட்டு முன்னறையில் நடக்கிற சம்பவங்களை வைத்து, எதிர்பார்க்கிற விருந்தாளி களில் யாருக்கு தங்கள் வீட்டுப் பெண்களில் யாரைக் கலியாணம் செய்து வைக்கலாம் என்கிற நினைப்பு எழ ஒரு குடும்பச் சூழ்நிலையில் அதிகமாக அலட்டிக் கொள்ளாமல் ஐந்நூறு நாவல்களைச் சிருஷ்டித்தார் ஜேன் ஆஸ்டின். இவர் நாவல் களில் அரசியல் உலகமோ, சரித்திர நிகழ்ச்சிகளோ குறுக்கிடுவ தில்லை என்பது இவர் குறையாகக் கருதப்படுகிறது என்றாலும் ஆங்கில நாவலாசிரியர்களில் மிக முக்கியமானவராகச் சொல்ல வேண்டும்.

**பெண் நாவலாசிரியர்கள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும், மத்தியிலும், பல நல்ல நாவலாசிரியைகள் செயல்பட்டார்கள். இவர்களில் 'ஜியார்ஜ் எலியட்' என்கிற ஆண் பெயரில் எழுதிய மேரி ஆன் இவான்ஸ் என்பவர் அறிவியல் நாவலை ஆங்கிலத்தில் தொடங்கி வைத்தவர் என்று பெயர் பெற்றவர். ப்ராண்டே சகோதரிகள் மிகவும் உயர்ந்த தரத்தில் பல நாவல்கள் தனித் தனியாக எழுதியிருக்கிறார்கள். மேரியா எட்ஜ்வொர்த், எலிசபெத் காஸ்கெல் போன்றவர்கள் நல்ல நாவல்கள் எழுதியிருக்கிறார்கள். உலக நாவல் தரத்தை அவை எட்டாவிட்டாலும் அவையும் சிறப்பான நாவல்கள். ஆங்கில இலக்கியத்தின் பொக்கிஷங்கள் என்று சொல்ல வேண்டும்.

ஆண்டனி டிராலோப் திட்டமிட்டுப் பல நாவல்களை ஒன்றன் பின் ஒன்றாக எழுதினார். இங்கிலாந்தில் சமுதாய நிலையை மிகவும் சிறப்பாகச் சிருஷ்டிக்கிற இந்த நாவல்கள் கலை அம்சங்கள் கூடியவை அல்ல என்றாலும் சிறப்பான நாவல்கள் என்றே சொல்ல வேண்டும்.

**உலக நாவல் இலக்கியப் போக்குகள்**

ஃபிரெஞ்சு மொழி நாவல்களும், ஆங்கிலமொழி நாவல்களும் வெகுவாக ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவையாக, ஒன்றையொன்று பாதிப்பவையாக இருந்திருக்கின்றன. நடை, உருவம் என்பதிலும் வெகுவாகக் கவனம் செலுத்தினார்கள் ஃபிரெஞ்சு ஆசிரியர்கள். ஆனால் ஆண்ட்ரே ழீட் சொல்லுகிற மாதிரி ஃபிரெஞ்சு மொழியில் ஒரு பத்து உலகத்தர நாவல் ஆசிரியர்களைக் கண்டு சொல்லுவது சிரமம். ஸ்டெந்தால் என்பவர் மனோதத்துவ இயலில் அழகு கூடப் பல நாவல்களைச் சிருஷ்டித்தார். 'எனது நாவல்களை ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு தான் ஃபிரெஞ்சு மக்கள் புரிந்து கொள்வார்கள்', என்று சொன்னார் ஸ்டெந்தால். இன்று எழுதப்படும் கவிதையை விட உரைநடையே சிறந்ததாக இருக்கிறது என்றும் சொன்னார். நாவலாசிரியராக இவர் புகழ் மிகவும் சிறப்பாக ஓங்கியிருக்கிறது. அவருடைய **'சிவப்பும், கருப்பும்'** என்கிற நாவல், நாவல் கலையில் நவீனத்துவத்தை ஆரம்பித்து வைத்ததாகவும் அந்நியப்பட்ட கதாநாயகனின் போக்கை விசேஷமாக விவரிப்பதாகவும் கருதுகிறார்கள்.

'குஸ்டவ் ஃப்ளோபேர், என்பவருடன் நவீன நாவல் கலையின் ஒரு புது அம்சம் தொடங்குகிறது. "சரியான

வார்த்தை சரியான இடத்தில்'' என்கிற நினைப்புடன் அவர் நாவலில் உரைநடை அகஸ்மாத்தாகத் திட்டமிடாமல் அமையக் கூடாது என்றும் ஒவ்வொரு வார்த்தையும் அதனதன் இடத்தில் திடமாக அமைய வேண்டும் என்றும் வற்புறுத்தி அப்படிச் செய்து காட்டவும் பாடுபட்டவர். வாழ்க்கை அனுபவங்களைத் தத்ரூபமாக உள்ளது உள்ளபடி காட்ட முயற்சித்தார்; விஷம் அருந்திச் சாகிறவனை விவரிக்கத் தானே விஷம் அருந்திச் சாகக் கிடைக்கும் அனுபவத்தை வரவழைத்துக் கொண்டு பின்னர் எழுதினார் என்று சொல்வார்கள். மேடம் பௌவரி வெளிவந்தபோது அது தத்ரூபமாகச் சில பால் உணர்ச்சிகளை வெளியிட்டதற்காகவும், தங்களைத் தான் விவரித்திருக்கிறார் ஆசிரியர் என்று பலரும் சொல்லிக் கொண்டு முன் வந்ததாலும் அவள்மேல் கேஸ் கூட எழுந்தது. எம்மா பௌவரி என்கிற அந்தப் பாத்திரம் ஃபிரெஞ்சு நடுத்தர மக்களின் பிரதிநிதியாகச் சோரம் போகிற ஒரு ஸ்திரியைச் சித்தரிக்கிறது.

ஃப்ளோபேரின் நேரடி சிஷ்யர் மௌபகான். இவரும் பல நல்ல சிறுகதைகளுடன், சில நல்ல நாவல்களும் எழுதியிருக்கிறார். பின்னர் எமில் ஸோலா யதார்த்தத்தில், புது யதார்த்தத்தை நாச்சுரலிஸம் என்று சித்தரிப்பதாக முன்வந்தார். இவர்கள் எல்லோரும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவர்கள்.

ஐரோப்பிய நாவல்களில் முதல் நாவலை எழுதியவர் என்று மிகேல் செர்வாண்டிஸ் என்கிற இஸ்பானிய நாவலாசிரியரைச் சொல்லுவார்கள். இவர் பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் எழுதிய டான் க்விஹோட், வழக்கிலிருந்த கனவுலக அதித வீரச் செயல் ரொமான்சுகளைக் கேலி செய்து அழித்து விட எழுந்த நாவல். உண்மை, போலி என்பதற்கு இடையே உள்ள மெல்லிய திரையை டான் க்விஹோட்டே போலத் திறமையுடன் விளக்கிக் காட்டுகிற சிறப்பான நாவல் உலகில் வேறு இல்லை. டான் க்விஹோட்டையை உலகத்தின் சிறந்த நாவல்களில் ஒன்றாகக் கருத வேண்டும்.

ஸ்பெயின் மொழியில் பலர் இந்த முன்னூறு, நானூறு ஆண்டுகளில் நாவல் எழுதியிருக்கிறார்கள். அவர்களின் பெயர்கள் பல பரவலாகத் தெரியும், என்றாலும் அவர்களை அநேகமாக உலகத்தரத்துக்கு எட்டியவர்களாகச் சொல்வதற்கில்லை.

அதே போல இத்தாலியிலும் முதல் நாவலைச் சொல்கிற அளவுக்குப் பின்னர் வந்த நாவல்களைச் சொல்வதில்லை.

அலெக்ஸான்டிரோ மன்ஸோனி, என்பவர்எழுதிய 'திருமணப் பெண்' என்கிற நாவல் மிகவும் சிறப்பாக அமைந்துள்ள ஒரு சரித்திர நாவல். கத்தோலிக்கத் திருமணத் தத்துவத்தையும், கஷ்டத்தை மனம் தளராமல் சகித்துக் கொள்கிற மனப்பான்மை பெற்ற காதலர்களையும், நகரங்களில் வியாதி பரவிடச் சேவை செய்பவர்களையும் என்று பல தளங்களில் செயல் பட்டுள்ளார் நாவலாசிரியர்.

ஸ்வீடிஷ் மொழியில் எழுதிய ஸெல்மா லாகர் லெவ்வின் கெஸ்டாபெர்லிங் புராணம், ஸாகா என்கிற புராண மரபில் ஒரு நவீன காலக் கதையை மிகவும் சிறப்பாகச் சொல்லுகிற மிக மேன்மையான நாவல். இதுவும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வெளிவந்தது தான்.

ஒரே கால கட்டத்தில் இத்தனை நல்ல நாவலாசிரியர்கள் வேறு எங்கும் தோன்றியதில்லை என்று சொல்லுகிற அளவில் ருஷ்யாவில், பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடு ஆண்டுகளில் டர்கெனிவ், டால்ஸ்டாய், டாஸ்டாவ்ஸ்கி, கோகால், குப்ரின் என்று பல உலகத் தரத்தை எட்டிய நாவலாசிரியர்கள் தோன்றி னார்கள். ஆன்மீக அளவில் நாவல் கலையை உயர்த்தியவர்கள் என்று இவர்களைச் சொல்லலாம். மற்ற ஐரோப்பிய நாவலாசிரி யர்களைப் படிப்பதில் ஏற்படாத ஓர் ஆழ்ந்த அனுபவம் இவர் களைப் படிப்பதில் ஏற்படுகிறது.

'உலகத்தின் முதல் நாவல் ஐரோப்பாவில் எழுதப்பட வில்லை என்றும், இந்தியாவில், சமஸ்கிருதத்தில் தான் எழுதப் பட்டது; அது காதம்பரி என்கிற நாவல்' என்றும் சொல்பவர்கள் உண்டு. இதை ஏற்றுக் கொள்ளாதவர்கள்கூட ஜப்பானில், பத்தாவது நூற்றாண்டில் எழுதப் பெற்ற லேடி முராஸகியின் ஜெஞ்சிக் கதையை முதல் உலக நாவலாக ஏற்றுக் கொள்ளத் தயங்குவதில்லை. நாவல் கலை மனோகதாரி என்கிற பெயரில் ஜப்பானில் முதல் முதல் கையாளப்பட்டதாகத் தெரிகிறது— பல மனோகதாரிகள் வழக்கிலுண்டு. அவற்றில் ஜெஞ்சி சிறந்தது என்று கருதப்படுகிறது.

சீனத்தில் நாவல்கள் ஆறாவது நூற்றாண்டு முதலே நம்மூரில் கதாகாலஷேபம் போலச் சொல்லப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. இவைகளில் இலக்கியத்தரம் அதிகமில்லை என்று சொல்லுகிறார்கள். 12வது நூற்றாண்டுகளுக்குப் பின் உருவான சில நாவல்கள் மிகவும் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன. சிவப்பு அனுக்களவு, எல்லாரும் சோதரர், தங்கத்தரமணியம் போன்ற நாவல்கள் தெரிய வந்துள்ளன. குரங்கு என்கிற

புராணக் கதை யுவான்ஸாங் இந்தியாவுக்குப் புத்த நூல்கள் க்ஷேத்திரங்கள் தேடி வந்த போது கூட வந்த ஒரு குரங்கின் வீரதிரப் பிரதாபங்களைச் சொல்லுகிற ஒரு நாவல், சிறப்பான உருவ அமைதி பெற்றிருக்கிறது.

நான் சொல்லி வந்ததில் பல பெயர்கள் விட்டுப் போயிருக்கும்தான். ஒரு குறுகிய காலத்தில், நாற்பது நிமிஷங்களில், உலக நாவல்களின் பெயர்கள் எல்லாவற்றையும் சொல்லுவதற்குக் கூடக் காலம் போதாது. நினைவுக்கு உடனே வந்ததைச் சொன்னேன். மேலே, நவீன—நாவல் துறைச் சாதனைகளைப் பற்றி—சுருக்கமாகவே நான்—சொல்லி விடுகிறேன்.

தாமஸ் மான் ஜெர்மனியர். பல நாவல்களை உலகத் தரத்தில் எழுதியிருக்கிறார். ஜெர்மன் மத்திய தர வியாபாரி வாழ்க்கை பற்றி ஒரு நாவல்; ஐரோப்பா இரண்டு உலக யுத்தங்களுக்கு மத்தியில் ஒரு நோயாளி ஸ்தலமாக இருந்தது பற்றி ஒரு நாவல்; ஹிட்லரின் ஆதிக்கத்துக்குட்பட்ட ஒரு விஞ்ஞானியின் அவஸ்தை; மகாபாரதமும், அதன் விமோசனமும்; பைபிளில் சுருக்கமாகக் காணப்படுகிற ஜோஸஃப்பும், அவன் சகோதரர்களும் என்கிற கதை, காவிய அளவில் விரித்து 1500 பக்கங்களில்; என்று பல நாவல்கள் எழுதியிருக்கிறார். ஒவ்வொன்றும் அதனதன் அளவில் சிறப்பான நாவல்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

இன்னொரு ஜெர்மானியர் ஹெர்மன் ஹெஸ்லே. இவர் எழுதிய **சித்தார்த்தா** என்கிற நாவல் ஒரு கால கட்டத்தில் ஹிப்பிக்களின் வேதமாக இருந்தது. இவர் எழுதிய மஜிஸ்டாலூடியில் கணக்கு, சங்கீதம், சமஸ்கிருதம் தெரிந்தவர்கள்தான் உலகை ஆளப் பிறந்தவர்கள் என்று கருதி எழுதியிருக்கிறார். இவர் நாவல்களில் பல படிப்பதற்கு மிகவும் கடினமானவை என்று சொல்லலாம்.

நட் ஹாம்ஸன் என்று ஒரு நார்வேஜியர் எழுதிய நிலவளம் உலகம் பூராவும் நிலத்தை மீண்டும் அடைவாய் என்று ஓர் இயக்கத்தினைத் தோற்றுவித்தது. இவரும் உலகத் தரத்தில் பல நாவல்கள் எழுதியிருக்கிறார்.

பேர் ஸாகர்க் விஸ்ட் என்கிற ஸ்வீடிஷ் நாவலாசிரியர் சிறுசிறு நாவல்களாக மனித மன ஆழத்தைத் தொடுகிற மாதிரிப் பல நாவல்கள் எழுதியுள்ளார். ருஷ்யாவில் போரில் பாஸ்டர்நிக், அலெக்ஸாண்டர் ஷோஸ்ஸ நிட்ஸின், அமெரிக்காவில் வில்லியம் ஃபாக்னர், தார்ண்டன் நீவன் வைல்டர், ஸால் பெல்லோ. ஐசக் பாடேவிஸ் ஸிங்கர்; ஃபிரன்சில் ரோஜர்

மார்டின் டுகார்டு, ரோமென், ரோலாந், அருடோல் ஃபிரான்ஸ், ஆண்ட்ரேஜீட், ஃபிரான்ஸ்வா மொரியாக், கோலெட், ஆல்பெர் காமு, ஆஸ்திரேலியாவில் பாட்ரிக்வைட்; தென் அமெரிக்காவில் மிகேல் நுஸ்டுரியாஸ், மார்க்வெஸ், ஜெர்மனியில் குண்டர் க்ராஸ், ஹென்ரிக் போல், ஜப்பானின் ட்னிலாக், ஸுஸாகோ எண்டோ, காவாபாடா, புகியோமிஷி மா இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. வெறும் பெயர்களை அடுக்க நான் விரும்பவில்லை.

## நாவல் பற்றிய விமர்சனத்தின் தோற்றம்

பெரும் பொழுது போக்காகப் படிப்பு அதிகமாக இல்லாத பெண்களுக்குத் தான் நாவல் கலை ஏற்பட்டது என்கிற எண்ணத்தை ஓரளவுக்கு மாற்ற உதவியவர்கள் என்று ஃப்ளோபேர், ஜியார்ஜ் எலியட் என்பவரையும் சொல்ல வேண்டும். கவிதைக்கு விமர்சனம் போலப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி இருபதுகள் வரையில் நாவலுக்கு விமர்சனம் தோன்றவில்லை. இந்தக் குறையை நிவர்த்தித்தவர் ஹென்றி ஜேம்ஸ், அமெரிக்கர், இங்கிலாந்தில் தங்கியவர். இவரே நாவல்கள் பலவும் எழுதியிருக்கிறார். படிப்பதற்குக் கடினமான நாவல்கள்.

அமெரிக்காவில் நாவல்கள் நதானியல் ஹாதார்ன் என்பவரில் தொடங்கி மார்க் ட்வெயின், ஹெர்மன் மெல்வில், ஜாக் லண்டன் என்று வளம் பெற்றது. இவர்களில் ஹெர்மென் மெல்வில் உலக இலக்கியத் தரத்தை எட்டுவதாக 'மோபி டிக்' என்று மிகப் பிரமாதமான நாவல் ஒன்றை எழுதியிருக்கிறார்.

இருபதாம் நூற்றாண்டில் நாவல்களைப் பற்றிய வரையில் பல சோதனை முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றில் சிலவற்றைப் பற்றி மட்டும் இங்குச் சொல்கிறேன்.

## நாவல் இலக்கியத்தில் சோதனை முயற்சிகள்

முதலில் சொல்ல வேண்டியவர், ஜேம்ஸ் ஜாய்ஸ் என்கிற ஐரிஷ்காரர். இவருடைய யுலிஸிஸ், 'ஃபின்னிகன்ஸ் வேக்' என்கிற இரண்டு நாவல்களும் பெரும் அளவில் சோதனை முயற்சிகளாகவும், நடை, வார்த்தைகள், உத்திகள், கருத்து, நோக்கு என்று பல சாதனைகளைக் காட்டியவை.

மார்ஷல்ஃப்ரூஸ்ட் என்பவர் பிரெஞ்சுக்காரர். ஒரே நாவலை சென்ற கால நினைவுகள் என்பதைப் பத்துப் பாகங்களாக எழுதியவர். உணர்ச்சி பூர்வமாக மிகவும் திருப்தி தருகிற நாவல்

என்று இதைச் சொல்ல வேண்டும். அவர் காலத்துக்குத் தைரியமாக ஆண், பெண் காதலைக் கையாண்டுள்ளார். நினைவிலிருக்கிற சம்பவங்களை உணர்ச்சி குன்றாமல் இலக்கியமாக்கிக் காட்டியவர்.

ஃபிரான்ஸ், காஃப்கா என்கிற செக் தேசத்துக்காரர் ஜெர்மன் மொழியில் எழுதினார். இவர் எழுத்துகள் இந்தியாவை 1940 வாக்கில்தான் எட்டின. இரண்டே இரண்டு முடிவுறாத நாவல்கள் எழுதிய இவர் தற்கால நாவல் கதை ஆசிரியர்களுக்கு வழிகாட்டியாகக் கருதப்படுபவர். 'விசாரணை', 'கோட்டை' இரண்டிலும் என்ன, ஏன் என்று தெரியாமல் இன்றைய மனித ஆன்மா கஷ்டப்படுவதையும் கவலைப்படுவதையும், சிக்கலில் அகப்பட்டுக் கொண்டு விடுவித்துக் கொள்ள வழி தெரியாமல் அவஸ்தைப் படுவதையும் விவரிக்கிறார்.

'ராபர்ட் மியூஸில்' என்கிற ஜெர்மானியர் எழுதிய நிர்க்குண மனிதன் என்கிற நாவலும் முடிவுறாத நாவல். இதை முடிவற்ற நாவல் என்றும் சொல்லலாம். குணங்களற்றவனாக இருப்பது கடவுளின் போக்காக இருக்கலாம். ஆனால், நிர்க்குணமாக இருப்பது மனிதனுக்குச் சாத்தியமல்ல என்கிற கருத்து இதில் தொக்கி நிற்கிறது.

ஜேம்ஸ் ஜாய்ஸின் காரியதரிசியாகச் சில காலம் செயலாற்றிய ஸாமுவெல் பெக்கட் என்பவர் மலோன் இறக்கிறான் என்றும், வேறு பல நாவல்களும் எழுதியிருக்கிறார். இவரும் சிறப்பான ஒரு சோதனையாளராகக் கருதப்படுபவர்.

இந்தச் சோதனையாளர்களின் நாவல் முயற்சிகளால் நாவல் கலையின் ஆழம் அதிகரித்திருக்கிறது, பரிமாணங்கள் பெரிதாகி யிருக்கின்றன.

ஃபிரெஞ்சுத் தேசத்தில் புது நாவலாசிரியர்கள் என்று சொல்லிக் கொண்டு சில ஆசிரியர்கள் கோஷ்டியாகவும், தனியாகவும் முயற்சிகள் செய்து பார்த்திருக்கிறார்கள். யதார்த்தத்துக்கும் அப்பாலுள்ள யதார்த்தத்தைக் கண்டு சொல்ல இவர்கள் முயன்றிருக்கிறார்கள். நாதாலிஸாரோ, அலென் ஹோயேகிரியே, க்ஸாட் ஸைமன் என்கிறவர்கள் இந்தக் கோஷ்டியில் முக்கியமானவர்கள்.

அமெரிக்காவிலும் இதே போல நவீனத்துக்கு என்று ஒரு குழு நாவலில் செயல்படுகிறது. கர்ட்வனேகம், ஜான்பர்த், தாமஸ்பின்றயின்-இவர்களுடைய எழுத்துகளும்-இந்தக் குழுவில் பிரபலமானவர்கள்.

**இந்திய நாவல்**

இந்தியாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கடைசி முப்பது ஆண்டுகளுக்கு முன் தொடங்கி இன்று வரை நூற்றுக் கணக்கான நாவல்கள் எழுதப்பட்டு வந்துள்ளன. ஆனால், சமீப காலத்தில் எழுதப்பட்ட சில நாவல்களே - இருபது என்கிற எண்ணிக்கைக்குள் தான் இருக்கும் - உலகத் தரத்தை எட்டியவையாகச் சொல்லக் கூடியவை.

பக்கிம்சந்திரர், ஸர் வால்டர்ஸ்காட் என்கிறவரின் ரொமாண்டிக் சரித்திர மெலோட்ராமர்டிக் நாவல்களைப் பின் பற்றி நாவல்களை எழுதினார். இவரைப் பின்பற்றியே பல நாவலாசிரியர்களும் எழுதுவதால் இந்திய நாவல்களை இன்னமும், அதிக உணர்ச்சிகளை அதிக வார்த்தைகளில் போட்டுக் குழப்பி வைக்கும் அளவில் தான் இருக்கிறது என்று சொல்ல வேண்டும்.

தமிழில் நாவல் முதல்வராகிய வேதநாயகம் பிள்ளையும், மலையாள முதல் நாவலாசிரியராகிய, சந்து மேனனும் இந்த அதீத ரொமாண்டிக் மரபுக்குப் பலியாகாமல் தங்கள் நாவல்களை எழுதினார்கள். இருவரும் ஆங்கில காமிக் மரபைப் பின்பற்றினார்கள். சிறப்பாக, வேதநாயகம் பிள்ளையில் டாக்க்விஹோட்டேயின் பாதிப்பும் தெரிகிறது. இவர்களைப் பற்றித் தெரிந்து கொண்டால் பொதுவாக இந்திய நாவல் இலக்கியத்துக்கு இலாபம் இருக்கக் கூடும்.

பதேர் பாஞ்சாலி என்கிற நாவலை எழுதிய பிழதிபூஷன் பந்த்யோபாத்யாயா, பொம்மலாட்டம் என்கிற நாவலை எழுதிய மணிக் பந்த்யோபாத்தியாய என்பவரும் வங்கத்தவர்கள். ஒரியாவில் எழுதிய காளித்திஸரன் பாணிக்ரஹி (மண்வீடு), ஹிந்தியில் ஜெனேந்திர குமார் (தியாகப்த்ரா), பிரேம்சந்த (கோதரண்யம்) ஆசிரியர் பெயர் நினைவில்லை (தர்பாரி ராகம்), மலையாளத்தில் முகமதுபஷீர் (என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது), தமிழில் ஆர். ஷண்முக சுந்தரம் (நாகம்மாள்), ந. சிதம்பர சுப்ரமணியம் (இதய நாதம்), தி. ஜானகிராமன் (மோகமுள்), அசோகமித்திரன் (தண்ணீர்) சா. கந்தசாமி (அவன் ஆனது) சுந்தர ராமசாமி (ஒரு புளிய மரத்தின் கதை), நகுலன் (நினைவுப் பாதை), மராட்டியில் எஸ். என். பெண்ட்ஸே (கராம்பியின் பாபு), கன்னடத்தில் ராவ் பகதூர் (கிராமயணம்) காரந்த (பாட்டியின் கனவுகள்), அஸ்ஸாமியில் பீரேந்திர குமார் பட்டாச்சார்யா (மிருத்யுஞ்சய), குஜராத்தியில் (ஆறு அமைதியாக ஓடுகிறது)முதலியன உலகத்தரத்தை எட்டிய

இந்திய நாவல்களாகச் சொல்லலாம். தமிழ் ஆசிரியர்கள் நம் கண்ணில் படுகிறார்கள். பிறமொழி நாவலாசிரியர்களைப் பற்றி அதிகமாக, விமரிசனப் பூர்வமாக நமக்குத் தெரிய வர வில்லை. நாவல் இலக்கியத்தில் நாம் செய்திருக்கிற சாதனை குறித்து நாம் பெருமைப்படலாம் என்று தான் எனக்குத் தோன்றுகிறது.

ருஷ்ய நாவல்களில் ஒரு ருஷ்ய உருவம் காண முடிகிறது. ஃபிரெஞ்சு நாவல்களில் ஒரு ஃபிரெஞ்சு உருவம் காணமுடிகிறது; ஆங்கில நாவல்களில் ஆங்கில உருவம் காண முடிகிறது. அதே போல, இந்திய நாவல்களில் ஓர் இந்திய உருவம் காணக் கிடைக் கிறதா, அது என்ன அம்சங்கள் அடங்கியிருக்கின்றன என்பது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளத்தக்க விஷயமாக எனக்குத் தோன்றுகிறது.

இந்தியாவில் எல்லா மொழிகளிலுமே இடைக்காலத்திலும் இன்றும் அதிகமாக நாலாந்தர, ஐந்தாந்தர ஐரோப்பிய ஆங்கில அமெரிக்க நாவல்களின் தழுவலாக அமைந்துள்ளது நமது துர்ப் பாக்கியம். சொல்லியும், சொல்லாமலும் தழுவல்களை நம்பியே எழுத்துலகில் புகழ் பெற்று விட்டவர்கள் என்று பலரைச் சொல்லலாம்—கல்கி உள்பட. ஹிந்தியில் பகவதிசரண் உட்பட. இதை மீறிச் சொந்த கற்பனை முயற்சிகள் இருப்பது பற்றிப் பெருமையும் படலாம்.

தொடர்கதைகள் நாவலாக அபூர்வமாகவே அமைகின்றன. இந்தத் தொடர்கதைகள் எழுதுபவர்கள் எல்லா மொழி களிலுமே அதிகமாக இருக்கிறார்கள். அவர்களில் சிலர் இலக் கியத்தரமாகவும் எழுதலாம். ஆனால், இலக்கியத்தரமாக எழுதப்பட்ட பல நாவல்கள் தொடர்கதைகளாக வெளிவரா தவை தான் என்பது உலக நாவல் சரித்திரத்தில் நிதரிசன மாகவே தெரிகிறது.

நாவல்-இலக்கியமா?

நாவல்களையும் இலக்கியத்துறைகளில் ஒன்றாக ஏற்றுக் கொண்டு கவனிக்கும் பழக்கம் இங்கிலாந்து அமெரிக்காவிலே பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிற்பகுதியில் தான் ஏற்பட்டது. இந்தியாவில் நாவல் கலை சமீப காலம் வரை கலையாகவே மதிப்பதில்லை. இன்னமும் நாவல் எழுதுவதை ஒரு கலை யாகவே நினைப்பதில்லை. தமிழில் 1955-க்குப் பிறகு தான் பொதுவாக நாவல்கள் பற்றிக் கவனம் செலுத்துவது வளரத் தொடங்கியிருக்கிறது.

நாவல் விமர்சனத்தில் நம்முடைய நாவல்களைக் கொண்டு அதாவது அடிப்படையாகக் கொண்டு எழுந்த விமர்சனக்குறியீடு வார்த்தைகள் கண்டுபிடிக்கப்பட வேண்டியது மிக மிக அவசியம்.

வெறும் கதைகளாக ஜோடிக்கப்பட்டுத் திறம்படக் கூட எழுதப்படாதவற்றைச் சிவசங்கரி, கோவி. மணிசேகரன், சாண்டில்யன், பி. வி. ஆர், சுஜாதா, லக்ஷ்மி என்று இந்தப் பட்டியல் நீளும். இலக்கியமாக, நாவல் எழுதியவர்களாகக் கருதுவது நம்மில் பழக்கமாகி விட்டிருக்கிறது. அதுமாறி, இலக்கியம் என்பது என்ன என்பது வற்புறுத்தப்பட வேண்டும். இது தமிழில் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய முக்கிய முதல் காரியமாகத் தோன்றுகிறது.

சில தமிழ் நாவல்களையாவது ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலக நாவல் சந்தையில் உலாவ விட வேண்டியது அவசியம்.

## ஊ. விமர்சனம்

### விமர்சனம் ஓர் அறிமுகம்

எனக்கு விமர்சன புஸ்தகங்கள் படிப்பதில் அவ்வளவாக ஆர்வம் கிடையாது. என் கையில் ஒருநாவல், ஒரு கவிதை, ஒரு நாடகம், ஒரு சிறுகதை, ஒரு விமர்சன நூல் என்று கொடுத்தால் விமர்சனப் புஸ்தகத்தைக் கடைசி இடத்துக்கு ஒதுக்கி விட்டு நாவல், கவிதை என்கிற வரிசையில் படிப்பேன். சிலசமயம் அதற்குள் அடுத்த ஸெட் புத்தகங்கள் வந்து விடும். விமர்சன நூல் படிக்காமலே போய் விடுவதும் உண்டு.

நான் விமர்சனம் செய்ய வேண்டி வந்தது என்பது ஒரு கட்டாயத்தினால்—அதாவது காலத்தின் கட்டாயத்தினால். மோலியரின் டாக்டர் என்கிற மாதிரி நான் விமர்சகன். என்னோடு எனக்கு முன் மாதிரியாகவும் அமைந்த பல நல்ல இலக்கிய ஆசிரியர்களை, சமீப காலத்திய இலக்கிய சிருஷ்டியாளர்களான புதுமைப்பித்தன், மௌனி, குபரா என்பவர்களை ஒருவரும் தரம் தெரிந்து கொள்ள மாட்டேன் என்கிறார்களே என்கிற குறையுடன் அக்குறையை நிவர்த்தி செய்வதற்காக நான் 52, 53 வாக்கில் விமர்சனத் துறைக்கு வந்தேன். பிடிவாதமாக அத்துறையில் ஈடுபட்டு இன்று எழுதப்படுவதில் நல்ல

விஷயங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களை இலக்கிய வாசகர்களாகப் பண்ண வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன்தான் நான் இலக்கிய விமர்சனத்தில் செயல் படுகிறேன்.

இன்னொரு விஷயமும் சொல்ல வேண்டும். பல துறை களில் தமிழ்நாட்டில் அறிவுப் பயிற்சி ஏற்படவில்லை. அரசியல் விஷயங்கள் எல்லாம் பூரணமாக ஆராய்ச்சி செய்து நமக்குத் தரப்படவில்லை. இந்தத் துறைகளை யெல்லாம் இலக்கிய விமர்சனம் பூரணமாவதற்குப் பயன்படுத்தக் கூடும். இவை தவிர, மனோதத்துவ ஆராய்ச்சி என்பதெல்லாம் இந்தியர் களாகிய நமக்குச் சரியாக வராத அளவில், கிறித்தவ சமுதாயத்தில் நல்லது கெட்டது அடிப்படையில் எழுந்த மனோதத்துவ விசாரத்தை நாம் பின்பற்றுகிறோம். அது சரியல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. உதாரணமாக, பால் உணர்ச்சி குற்ற உணர்ச்சியாகத்தான் கிறித்தவ சமுதாயத் தில் செயல்படும்; இந்தியர்களாகிய நமக்கு அப்படியில்லை. பால் உணர்ச்சி சாதாரணமாக வாழ்க்கையில் மற்ற பல விஷயங்களையும் போலப் பங்கேற்பது என்ற மனித சுபாவ மாக, இயற்கையாக நாம் ஏற்றுக் கொள்பவர்கள். இதை அழுத்தமாகச் சொல்லுகிற மனோதத்துவத் தரிசனம் இந்தியா வில் இன்னும் ஏற்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

நாம் இன்னமும் விமர்சன வார்த்தைகளை மேலை நாடுகளி லிருந்து கடன் வாங்கி உபயோகிக்கிறோம். இன்று பலப்பல வார்த்தைகளைக் கடன் வாங்கி விமர்சனம் செய்கிறோம், இது தவிர, பல தரப்பட்ட இலக்கியச் சித்தாந்தங்களையும் கடன் வாங்கிச் செயல்படுகிறோம் என்று இவைகளை அப்படியே இந்திய இலக்கியத்துக்கும், இலக்கியாசிரியர்களுக்கும் மேல் ஏற்றி வைத்துச் சொல்ல முடியாது.

### தமிழில் விமர்சனத்தை அணுகும் முறை

நம்முடைய நூல்களிலிருந்து நாம் இலக்கிய விமர்சன வார்த்தைகளை, கொள்கைகளைச் சிருஷ்டித்துக் கொண்டு செயல்பட வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். இந்திய மண்ணில் பிறந்த பல தத்துவச் சித்தாந்தங்களை, தமிழ்த் தொல்காப்பியத்திலுள்ள பல வார்த்தைகளை விமர்சன உபயோகத்துக்கென்று தேர்ந்தெடுத்துப் புதுசாக விவரம் கொடுத்துக் குறிப்பிட்ட இன்ன அர்த்தங்களில் உபயோகிக் கிறேன் என்று சொல்லி உபயோகப்படுத்திப் பார்க்கலாம் என்று, எனக்குத் தோன்றுகிறது. இப்படிப் பார்க்கும் போது அகம்

புறம், இறைச்சி, த்வனி, ரீதி, பாவம், ரஸம் என்கிற பல வார்த்தைகளை உபயோகத்துக்குக் கொண்டு வரலாம்.

இலக்கிய விமர்சனம் என்பது இலக்கியத்துக்காகவே செய்யப்பட வேண்டும். இலக்கியத்துக்கு அப்பாற்பட்ட விஷயங்களிலிருந்து சமுதாயச் சித்தாந்தங்கள், கடவுள் சிந்தனைகள், அரசியல் கட்சிச் சிந்தனைகள் என்று போய் விடக் கூடாது. திராவிடமாக இருக்கிற எழுத்துத் திராவிடக் கட்சிக் காரர்களுக்கு அவசியமானால் கூட இலக்கிய ரீதியில் முக்கியமல்லாததாக இருக்கலாம். கம்யூனிஸ சித்தாந்தங்களை நிச்சயமாக 'முருகன் அருள்' போட்டால், இலக்கியமும் சித்தாந்த அளவில் ஏற்பட்டது என்று சொன்னால் ஏற்க மாட்டார்கள்.

இலக்கிய விமர்சனம் என்பது இலக்கியத்துக்குப் பயன்படுவதாக அனுசரணையாக இருக்க வேண்டும். தனித்துறையாக இலக்கிய விமர்சனம் செயல்பட்டு வேறு சில சமயம் பல காரணங்களினால் இலக்கியம் பின்னுக்குத் தள்ளப்பட்டு, 'என் அறிவைப் பார்'' 'என் சித்தாந்த நேர்மையைப் பார்' என்று சொல்லுகிற அளவில் வளர்ந்து விடுகிறது. சிருஷ்டித்தரமான இலக்கிய விமரிசனம் என்று நான் சுட்டிக் காட்டிப் படிக்கிற ஆவலை, இலக்கியத்தைப் பற்றி ஓர் ஆர்வத்தைத் தூண்டுகிற விமாசனத்தை மட்டுமே சொல்லுவேன். அமெரிக்காவில் இன்னும் பல சமுதாயங்களில் இலக்கிய விமர்சனம் உரிய எல்லைகளைத் தாண்டிப் போகத் தொடங்கி விட்டது என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்த மாதிரி இலக்கிய விமரிசன வளர்ச்சி தமிழிலும் ஏற்படவேண்டும் என்று நான் இறைவனை வேண்டிக் கொள்கிறேன்.

### படைப்புத் தரமான விமர்சனங்கள்

இலக்கிய அறிவு என்பது, இலக்கிய சிருஷ்டி என்பது தனி ஒரு மனிதனின் பூரணமான செயல். சமுதாயத்தில் தான் இதைச் சிருஷ்டிக்கிற மனிதன் இருக்கிறான் என்றாலும், சமுதாயத்தினால் தனிமனித வளர்ச்சியும், பர்ஸனாலிட்டியும் இல்லாமல் இலக்கிய சிருஷ்டி செய்து விட முடியாது, இலக்கியத்தைச் செய்ய முடியாது. அதேபோல, இலக்கிய விமர்சனத்தையும் செய்ய முடிந்தால் கூடச் செய்யக் கூடாது என்பது என் நினைப்பு. சித்தாந்த அடிப்படையில் செயல்படுகிற விமர்சனங்கள் இலக்கிய சிருஷ்டியை விளக்குவதோடு இலக்கிய விமர்சனத்தையும் செய்ய முயலுகின்றன. பெரும்பாலான அகாடெமிக் விமர்சனம் இப்படித்தான் கூறுகிறது. அதனால் இலக்கியத்

துக்கு உபயோகமில்லை. இலக்கிய சிருஷ்டி உபயோகப்படுகிற இலக்கிய விமர்சனம்தான் சிருஷ்டித் தரமான இலக்கிய விமர்சனம் என்று ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

1963ல் இலக்கிய வட்டம் பத்திரிகையின் முதல் இதழாக பாரதியைப் பற்றி ஒரு தொகுப்புப் பலரைக் கொண்டு எழுது வித்து வெளியிட்டேன். அப்போது ஜெயராம சாமராஜ உடையார் தலைமையில் விமர்சனத்தின் அவசியம் பற்றிக் கூறி விட்டு உட்கார்ந்தவுடன் மைசூர் மகாராஜா, "மேலை நாடு களில் சமீப காலங்களில் இலக்கிய விமர்சனம் போகிற போக் கைப் பார்த்தால் இலக்கியத்திலிருந்து விமர்சனம் வெகு தூரம் போய் விட்டதைப் பார்த்தால், இந்த மாதிரி யெல்லாம் விமர்சனம் நமக்குத் தேவையில்லை என்று தோன்றுகிறது. ஆனால் ஒரு வகையில் இலக்கிய விமர்சனம் இலக்கிய வளர்ச்சிக்குத் தேவைப்படுகிறது; இலக்கிய விமர்சனம் இலக்கிய எல்லை மீறிப் போகாமல் பார்த்துக் கொள்வது மிக மிக அவசியம் என்றார்.

விமர்சனம் படைப்பை விளக்குவதாக அமைய வேண்டும்

மார்க்ஸிஸ்டுகள் என்பவர்கள் அரசியலில் போல, கருத்து உலகத்தில் போல இலக்கியத்திலும் எப்போதும் ஒரு கண் வைத்திருப்பவர்கள். எழுத்து, எழுத்தாளர்களின் சக்திகளைப் பூரணமாக உணர்ந்தவர்கள் போலத் தமிழ் மொழி இலக்கியங் களிலும் பல விஷயங்களைக் கவனத்துக்கு முதன் முதல் கொண்டு வந்திருக்கிறார்கள். அந்த அளவில் நான் அவர்களுக்கு நன்றி சொல்லக் கடன்பட்டவன். ஆனால், மார்க்ஸிஸம் என்பது வேதாந்தம் போல, சைவம் போல, ஓர் இலக்கியமும் ஒப்பு இலக்கிய விமரிசனமும் வளருகிற மாதிரி அமைய வேண்டும். தளையசிங்கம், சுந்தர ராமசாமி, மற்றும் எஸ்.பி. ராஜதுரை போன்றவர்கள் செய்கிற சித்தாந்த விமரிசனங்களும் எனக்குச் சரியானவையாகத் தோன்றுவதில்லை. இலக்கிய விமர்சகனாக நான் என் சித்தாந்தங்களைக் கட்டிவைத்து விட்டு இலக் கியத்தை இலக்கியமாக, என் படிப்பினால் ஏற்பட்ட சூட்சம மான அளவுகோல்களினால், தராசுகளினால் எடை போட்டுப் பார்க்க வேண்டும் என்று எண்ணுகிறேன்.

### உலக அளவில் விமர்சனங்களின் போக்கு

இனி இந்திய, உலக இலக்கியத்தில் இலக்கிய விமர்சனம் என்கிற இன்றைய பிரசங்க விஷயத்துக்கு வருவோம். காவியங்களையும் நாடகங்களையும் போலவே உலக இலக்கியத்தில், மனோதத்துவமான இலக்கிய விமர்சன நூல்களும் மிகவும் குறைவு.

கிரேக்க இலக்கியத்தில் ஹோமர், நாடகாசிரியர்கள் இவர்களைப் பின்பற்றி அரிஸ்டாட்டில் என்பவர் நூலை இலக்கிய விமர்சனமாகவும், ஓரளவு இலக்கணமாகவும் எழுதியிருக்கிறார். தேசத்தில் ஒரு சிக்கல் போதுமான அளவில் ஏற்படுகிறபோது மக்கள் சோக நாடகங்களைப் பெரிதும் விரும்புகிறார்கள் என்றும் பாவ வியர்ஜனம் என்று ஒன்று இந்த நாடகங்களில் ஏற்படுகிறது என்பதும் இவர் கட்சி. நாடகம் முதலியவற்றில் வேறு விதமான ஒருமை இருக்க வேண்டும் என்று இவர் கண்டு சொன்னது வெகுகாலம் ஐரோப்பிய இலக்கியத்தில் ஆட்சி செலுத்தியது. பிளேட்டோவும் கவிதை முதலியன பற்றிப் பல விஷயங்கள் சொல்லியிருக்கிறார். அவருடைய லக்ஷிய சாம்ராஜ்யத்தில் கவிகளுக்கு இடமில்லை; அவர்களால் குழப்பம் விளையும் என்பது இவர் கட்சி.

வேறு பல இலக்கியங்களில் அங்கங்கே இலக்கிய விமர்சனக் கருத்துகள் காணப்பட்டாலும்கூட முழு விமரிசன நூலாக வேறு எதுவும் கிரேக்க இலக்கியத்தில் கிடையாது என்று தெரிகிறது. லத்தீன் மொழி வழக்கில் வந்த காலத்தில் கிரேக்க மொழியில் ஒரு நூலை லாங்கினால் என்பவர் எழுதினார். வார்த்தைகளில் கவிதையில் எப்படி மேன்மை ஏற்படுகிறது, அழகுணர்ச்சி ஏற்படுகிறது என்பதை நூல் விளக்குகிறது.

### சம்ஸ்கிருதத்தில் விமர்சனக் கலை வளர்ச்சி

இந்தியாவில் அலங்கார ஸாஸ்திரம் என்கிற பெயரில் கி. பி. முதல் பத்து நூற்றாண்டுகளில் இலக்கிய விமர்சன சித்தாந்தங்கள் பரவலாகப் பலரால் எழுதப்பட்டன. பரதமுனிவர் தொடங்கி வைத்துக் குண்டகர் எழுதிய வக்ரோக்தி ஜீவிதம் என்பதிலும் போஜரின் சிருங்காரப் ப்ரகாசம் என்பதிலும் (பதினோறாவது நூற்றாண்டு முடிகிறது) இந்தப் போக்கு உள்ளது. பின்னர், சமஸ்கிருதத்தில் பல அலங்கார சாஸ்திர நூல்களைப் பலர் எழுதினாலும் அவை புதுசாக எதையும் சொல்லவில்லை. இந்திய அலங்காரச் சாஸ்திரம் கவிதை எப்படி உருவாகிறது என்பதைக் கவனித்துச் சொல்ல இயலாது; சாத்தியமல்ல என்று அதை விட்டு விட்டு அது எப்படி வாசகர், ரஸிகர் மனத்தில் ஏற்கப்படுகிறது என்பதை விவரிக்கிறது. 'ஸஹ்ருதயர்கள்'

ஒன்று கவிதையை ரஸிப்பவர்கள் கவிகளுக்குச் சமமாக ஏற்றி வைத்துச் சொல்லப்படுகிறார்கள். அப்படிப் பார்க்கும் போது இன்று குமுதத்துக்கும், ராணிக்கும் ஸஹ்ருதயர்கள் அதிகம். புதுமைப்பித்தனுக்கும், மௌனிக்கும், கு. ப. ராஜகோபால னுக்கும் குறைவு.

ஸஹ்ருதயர்கள் என்கிற சித்தாந்தத்தை விட அதிக உபயோகமாகிற வேறு சித்தாந்தங்களையும் இந்த அலங்கார சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். ரஸம், ரஸானுபவம், ரஸபேதபாவம், ஸ்தாயிபாவம், ரீதி, ஔசித்தியம் என்று பல வார்த்தைகளை இலக்கிய விமர்சனத்தில், புதுச்சந்தர்ப்பத்தில் விவரித்துச் சொல்லிவிட்டு இன்று இவற்றை உபயோகப்படுத்திப் பார்க்கலாம். இந்த ரஸானுபாவ த்வனி சித்தாந்தங்கள் இந்திய அழகுணர்ச்சிச் சிந்தனையின் வெளிப்பாடாக உலகத்தின் கவனத்தை மிகவும் சிறப்பாகச் சமீப காலத்தில் கவர்ந்திருக் கின்றன. உதாரணமாக என்கிற தன் நூலில்* த்வனிக் கொள்கையை ஒட்டியும் வெட்டியும் சொல்கிறார் ஆனால் த்வனி என்பது (சந்தேகாஸ்யதமானது இரண்டு மூன்று விதமாக அர்த்தப்படக்கூடியது) என்பதை விடச் சிறப்பான அர்த்த முள்ளதாக எனக்குத் தோன்றுகிறது. த்வனி என்றால் என்ன என்று பண்டைக் காலத்திலேயே வெகுவாக விவாதம் செய்திருக் கிறார்கள். நிச்சயமான விமர்சன வார்த்தையாக, திடப்பட்ட புது அர்த்தத்துடன் த்வனி என்பதை இன்றைய இலக்கிய விமர்சனத்தில் உபயோகிக்கலாம் என்று எனக்குத் தோன்று கிறது.

த்வனிகாரர் என்று சொல்லப்படுகிற ஆனந்தவர்த்தனரும், அப்ருவருதருமாக, ஒவ்வொரு நாடகத்துக்கும், காவியத்துக்கும், நூலுக்குமே ஆதாத்வனி என்று ஒன்று சொல்லி ராமாய ணத்தின் அடிநாதம், அஸ்திவாரத்வனி காருண்யம் என்று விவாதிப்பதை நடைமுறை இலக்கிய விமரிசனத்தில் பண்டைக் காலத்தில் எழுந்தது என்றாலும் புதுமை பயந்த உச்சக்கட்ட மாகச் சொல்லலாம். இதே மாதிரி பாயஹா தண்டி என்று பலரிடமும் புதுசுபுதுசாக ஏதோ காணக் கிடக்கிறது.

குண்டகர் என்பவர் எழுதிய வக்ரோக்தி ஜீவிகம் என்கிற நூலில் மூன்று அடிப்படைக் கொள்கைகளை அவர் வலியுறுத்திச் சொல்கிறார். (1) யதார்த்தமென்பது இல்லாத இலக்கியமே

* க. நா. சு இவ்விடத்தில் யாரைக் கருதுகிறார் என்பது தெரியவில்லை.

கிடையாது. ஏனென்றால் மனிதனாகிய கவி உலகில் காலூன்றி நிற்பவன். அவன் வானத்தில் சஞ்சரித்தாலும் கால் பூமியில் தான் என்று கூறுகிறார். (2) கவிகளில் மட்டமான கவிதை, இரண்டாந்தர, மூன்றாந்தர கவிதை கிடையாது. கவியுண்டு, கவியில்லாதது உண்டு. இடையில் எதுவும் இல்லை. (3) எல்லா இலக்கியத்துக்கும் பொதுவாக வக்ரதம் என்கிற ஒரு குணம் உண்டு. வக்ரமானவன் செய்வதே இலக்கியம். வக்ரம் என்பதைப் புதுமையும், பித்தமும் என்றும் புரிந்து கொண்டால் இந்த வக்ரத்துக்கு அர்த்தம் கூடுகிறது என்றே சொல்ல வேண்டும் என்கிற சிந்தனையில் குண்டகர் நவீனத்வத்தை மிகவும் சமீபித்து விட்டார்.

குண்டகரின் தத்துவங்கள் அந்தக் காலத்திய ஸஹ்ருதயர் களுக்கு - இந்தக் காலத்து ராணி வாசகர்களுக்கு, ராணிக்கு அப்பாற்பட்ட எழுத்துத் தெரியாதது மாதிரி, பிடிக்காத மாதிரி - பிடிக்காமல் இருந்து விட்டது. அவர்கள் குண்டகர் பெயரையே அலங்கார சாஸ்திரத்திலிருந்து இருட்டடிப்புச் செய்து விட்டார்கள். அவர் சமகாலத்தில் குண்டகர் பெயர் எடுபடுகிறது. பின்னர் யாருமே சொல்வதில்லை. 1927-இல் எஸ். கே. டே என்பவரால் குண்டகரின் இரண்டு அத்தியாயங் கள் பிரசுரிக்கப்பட்டன. மற்ற இரண்டு அத்தியாயங்களையும் கண்டு பிடித்துச் சேர்த்துக் கே. கிருஷ்ணமூர்த்தி என்று ஒருவர் தார்வாரிலிருந்து வெளியிட்டிருக்கிறார். 1950-களில் இதை ஓர் அற்புதமான இலக்கிய விமரிசன நூலாகக் கருதி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

போஜரின் சிருங்காரப் பிரகாசத்தை டாக்டர் ராகவன் பதிப்பித்திருக்கிறார். இதில் புதுசாக எதுவும் இல்லாவிட்டா லும், பழைய விஷயங்களை யெல்லாம் தெளிவாக எடுத்துச் சொல்லுகிற மாதிரி டாக்டர் ராகவன் பதிப்பு அமைந்துள்ளது.

இந்த மாதிரி தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தை யாராவது பதிப்பித்துத் தந்தால் நமக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். நான் படித்துப் பார்த்து எனக்குப் புரியவில்லை என்று விட்டு விட்டேன். இறைச்சி என்கிற சொல் த்வனி என்ப தற்கு ஈடாகும். தொல்காப்பியர் முதலில் சொன்னாரா, வேறு யாராவது சொன்னார்களா என்பதை மறந்து விட்டுச் சில பிர யோகங்களை நமக்குத் தமிழில் புதுப்பித்துக் கொள்ள வழி செய்து தருவார்களானால் நன்றாக இருக்கும். கலம், புறம் என்கிற வார்த்தைகளையும் இலக்கிய விமர்சன வார்த்தைக ளாக மீண்டும் உபயோகத்துக்குக் கொண்டு வரலாம் என்று தான் தோன்றுகிறது.

**மேலை நாடுகளில் விமர்சன வளர்ச்சி**

பண்டைய சீனாவில் பாரசீகத்தில், ஜப்பானில், இந்தியாவைப்போல இலக்கியம் இருந்திருப்பதனால் ஓரளவுக்கு இலக்கிய விமர்சனமும் இருந்திருக்கலாம் என்று யூகிக்க முடிகிறதே தவிரத் திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஜப்பானில் என்றும் 'நான் ஒரு கதை என்று நான், நீ என்று வருவதை வைத்துக் கதைகளைப் பிரிக்கும் வழக்கம் இருக்கிறது. தானாகப் படித்து ஆனந்திக்கும் சில நூல்கள் என்றும் சொல்கிறார்கள். இதற்கெல்லாம் விரிவான அளவில் பிரயோக உபயோகத்தனங்கள் தேவை.

இங்கிலாந்தில் இலக்கிய விமர்சனம் ஓரளவுக்கு முந்தியே இருந்தது என்றாலும், டாக்டர் ஜான்ஸனுடன் தான் மக்களுக்கு இலக்கிய விமர்சனம் தொடங்குகிறது. ஆனால் சில நாளிலேயே விமரிசனம் பற்றிக் கேலியாகப் பேசும் வழக்கம் ஏற்பட்டு விட்டது என்பதும் தெரிகிறது. ஜான்ஸனுக்குச் சமகாலத்தவரான லாரன்ஸ்ஸ்டெர்ண் என்பவர் சொல்லுகிறார்:விமர்சனம் இலக்கிய ஆசிரியரைத் துன்புறுத்தியது என்பதைச் சமஸ்கிருதத்திலும் இருந்தது என்பதைப் பவழதி,பிர்ந்தஹரி என்று பலரும் சொல்வதிலிருந்தும் தெரிகிறது. ''பழசு என்பதனால் எதுவும் பாராட்டப்பட வேண்டியதில்லை; புதுசு என்று ஒதுக்கப்பட்ட எதுவும் பாராட்டப்பட வேண்டியதுமில்லை என்று காளிதாஸன் சொல்வது இலக்கிய விமர்சன அடிப்படையில் தான் என்று சொல்லலாம்.

வில்லியம் வேர்ட்ஸ்வர்த் என்கிற கவி தன் கவிதைகளுக்கு எழுதிய முன்னுரையைக் கவிதை பற்றிய உயர்ந்தவிமர்சனமாக ஆங்கிலேயர்கள் கருதுகிறார்கள். பின்னர் ஷெல்லி எழுதிய கோலரிட்ஜின் மற்றும் பல கட்டுரைகள் எல்லாம் இலக்கிய விமரிசனத்தை ஆங்கில உலகில் திறம்படச் செய்தன. கோலரிட்ஜும், கார் லைலும் ஜெர்மன் இலக்கியவிமர்சனத்தின் ஆன்மீகப் பாணியைப் பின்பற்றினார்கள் என்று குற்றம் சாட்டப்பட்டவர்கள்.

அடுத்தபடியாகச் சொல்ல வேண்டிய பெயர் மாத்யூ ஆர்னால்ட். இவர் இலக்கிய விமர்சனத்தைப் பண்பாட்டுடன் இணைத்துக் கண்டவர். இவருடைய இலக்கிய விமர்சனம் ஒரு புதுப்பரிமாணத்தை இந்தத்துறைக்கு ஏற்படுத்திக் கொடுத்தது.

**சிறந்த விமர்சனம் எது**

சமீபகாலத்தில் பலதரப்பட்ட சித்தாந்த அடிப்படைகளில் விமர்சனம் இங்கிலாந்திலும், மற்ற மேலைநாட்டு மொழி

களிலும், அமெரிக்காவிலும் கிளை விட்டிருக்கிறது. வேறு பல அறிவு சார்ந்த வகைகளில் அலசல் விமர்சனம் செய்பவர்கள் இலக்கியத்திலிருந்து விசாகர் கவனத்தைத் தங்கள் அறிவு, பயிற்சி மற்றும் கெட்டிக்காரத்தனம் இவற்றில் திருப்பிக் காட்டுகிறார்கள் என்பதனால் இந்த வளர்ச்சி விமர்சன வளர்ச்சியாகப் போற்றப்பட்டாலும் இலக்கிய வளர்ச்சிக்கு உதவாதது என்பதனால் இந்த மாதிரியான விமர்சனம் நமக்குத் தேவையில்லை என்றே நான் எண்ணுகிறேன். விமர்சனம் இலக்கியத்தை ஒட்டியும் இலக்கியவளம் ஏற்பட உதவி செய்வதாகவும் இருக்க வேண்டும்.

இப்படி இலக்கிய விமர்சனம் செய்தவர்கள் என்று இரண்டு பேரை ஆங்கிலத்தில் சொல்லலாம். டா.எஸ். எலியட் என்பவரையும், எஸ்ராபவுண்டு என்பவரையும்; முக்கியமாக எஸ்ரா பவுண்டு பல பழைய இலக்கியங்களைப் புதுமாதிரியாகப் படித்துப் புரிந்து கொள்வதற்கு வழிவகைகள் செய்து தந்திருக்கிறார். புரொாவன்சல் இலக்கியம் பற்றியும், சீன, ஜப்பானிய முறைகள், பாணிகள் பற்றியும், மற்றும் பல லத்தீன் கவிகளைப் படிப்பது பற்றியும் விமர்சனம் எழுதியிருக்கிறார். பவுண்டும், எலியட்டும் இலக்கியச்சிருஷ்டி கர்த்தாக்களுமாவர். இந்த மாதிரி சிருஷ்டி கர்த்தாக்கள் செய்கிற விமர்சனம்-ஒரு சித்தாந்த அடிப்படையில் ஏற்படாமல் ஒருவரைப்ஜபின்பற்றாவிட்டாலும் மிகவும் முக்கியமானது என்பது என் அபிப்ராயம். இலக்கியத்துக்கும், அதன் வளத்துக்கும் அனுஸரணையாகச் செயல்படுவதே நல்ல சிருஷ்டித்தரமான இலக்கிய விமர்சனம் என்று கருதி நான் அதைப் பின்பற்றுகிறேன். விமர்சனம் தவறு என்றும், அது விமர்சனம் வளர வழி செய்யாது என்றும் சொல்பவர்கள் சொல்லட்டும். இலக்கிய விமர்சனம் வளராது என்றாலும் வேண்டும் இலக்கியத்தைப் போலவே இலக்கிய விமர்சனமும் ஆக, ஆகத் தான் இருக்க வேண்டும் என்றும் எண்ணுகிறேன். இதில் மாறுபட்ட கருத்துடையவர்கள் இருக்கலாம்-ஆனால், அவர்களோடு நான் ஒத்துப் போக இயலாது.

**விமர்சனத்தில் தனிக்கோட்பாடு கூடாது**

இதேபோலச் சித்தாந்த ரீதியில் விமர்சனம் செய்வதும் எனக்கு உடன்பாடில்லை. மார்க்ஸியம், எதிர் மார்க்ஸியம், எந்த அரசியல் கட்சியையும் விமசர்னம் செய்ய முன்வருபவர்கள் சைவசித்தாந்தம், முருகன் அருள் போட்டல் இவற்றையெல்லாரும் ஏற்றுக்கொள்ள வேண்டிவரும். அதற்கு அவசியமில்லை என்பது என் நினைப்பு.

சில நூல்கள் இலக்கிய விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவை. வேதங்கள், உபநிஷத்துக்கள், பகவத்கீதை, ஸீக்கியகிரந்தங்கள் இவை இந்திய உதாரணங்கள். இந்தியாவுக்கு அப்பாற்பட்ட உதாரணங்கள் என்று கொரான், பைபிள் முதலியவற்றையும் சொல்லலாம்.

ஃபிரான்ஸில் ஸாந்த்யோவ் என்பவர் டாக்டர் ஜான்ஸன் ஆங்கிலத்தில் செய்த காரியத்தைச் செய்தார். அருடில் ஃபிரான்ஸ் போன்றவர்களும், ஆண்ட்தேழீடும் நூல்களை வாசகர்களுக்குத் திறம்பட அறிமுகப்படுத்தி வைத்தனர். பால் வலேரி போன்றவர் சிருஷ்டிகாரியம் எப்படி நடைபெறுகிறது என்று பல விவரமான நூல்கள், கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

இதே அளவில் ஜெர்மனியில் மற்றும் பல பிரதேச மொழிகளிலும் இலக்கிய விமர்சனம் இருக்கத்தான் வேண்டும். அமெரிக்காவின் முதல் விமர்சகராக, எட்கார் ஆலன் போ சில கருத்துகளை முன்வைத்தார். அவற்றைப் பின்பற்றிச் சில ஃபிரெஞ்சுக் கவிகள் புதுவிதமான சிறப்பான கவிதைகள் செய்தார்கள்.

ருஷ்யாவின் பல விமர்சகர்கள் மிகச் சிறந்த சிருஷ்டிகர்த்தாக்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களையெல்லாம் பற்றி ஓரளவுக்கு மேல் பரவலாக உலகில் தெரியவில்லை. லீயோ டால்ஸ்டாய் என்கிற புத்தகத்தில் கலைப் பிரச்சாரத்துக்காகத்தான் என்று தன் கொள்கையைத் திட்டவட்டமாகச் சொல்கிறார். ஆனால், சிருஷ்டி சமயத்தில் அவரால் தன் கொள்கைகளைப் பின்பற்ற முடியவில்லை.

‘பெடைட்டே க்ரோ சே’ என்பவர் இத்தாலிய மொழியில் மிகவும் சிறப்பாக இலக்கியக் கலை அழகியல் தத்துவத்தை ஆய்ந்து மிகவும் விவரமாகச் சொல்லியிருக்கிறார். அதே போல, ஹென்றிபெர்க்ஸன் என்கிற பிரெஞ்சுத் தத்துவ மேதை மனிதர்களுக்குச் சிரிப்பு மூட்டுவது எது என்பதை மிகவும் சிறப்பாக ஆராய்ந்திருக்கிறார்.

4

# உலக இலக்கியம் - மூன்று பார்வைகள்

### எது உலக இலக்கியம்

உலக இலக்கியப் பரப்பை மூன்று விதமாகப் பார்க்கலாம்.

(1) உலக மொழிகள் எல்லாவற்றிலும் இலக்கியச் சரித்திரம் இருக்கிறது, தெரிகிறது. ஆங்கில இலக்கியத்துக்கு ஒரு சரித்திரம் இருக்கிறது. ஜெர்மன் இலக்கியத்துக்கு ஒரு சரித்திரம் இருக்கிறது. தமிழ் இலக்கியத்துக்கு ஒரு சரித்திரம் இருக்கிறது. சீன இலக்கியத்துக்கும் ஒரு சரித்திரம் இருக்கிறது. இப்படியே எல்லா மொழிகளின் இலக்கியங்களுக்கும் ஒரு சரித்திரம் இருக்கிறது. இந்தச் சரித்திரங்களி லெல்லாம் சேர்ந்து ஓர் இலக்கியப் பார்வையை ஏற்படுத்தி, உலக இலக்கியத்தின் போக்கை நமக்குக் காட்டுகிறது. ஆகவே உலக இலக்கியங்களும் அவற்றின் சரித்திரங்களும் உலக இலக்கியமாக அமையலாம். இது ஒரு பார்வை.

(2) இரண்டாவது பார்வையாக இலக்கிய மொழிகளில் எல்லா வற்றிலும், சில, பல, நூல்களை அவற்றின் சிகரங்களாகக் கருதலாம். சில இலக்கியங்களில் இந்த மாதிரி சிகரங்கள் நிறையவே இருக்கலாம். பலவற்றிலும் சில இருக்கலாம். எல்லா மொழிகளிலும் உள்ள இலக்கியச் சிகரங்களைச் சேர்த்து, ஒட்டு மொத்தமாகப் பார்ப்பதும் உலக இலக்கியத்தில் ஒரு பார்வையாகும். இப்படி நமது அவசியத்துக்கேற்ப 500க்குக் குறையாமல் ஆயிரத்துக்கு மேற்படாமல் நூல்களின் பட்டியல் தயாரித்து, இதுதான் உலக இலக்கியம் என்று சொல்லலாம். இந்த நூல்களின் பட்டியலில் ஷேக்ஸ்பியர், ஏஷ்கிலஸ், ஹோமர்,

வால்மீகி, வியாசர், கன்பூஸ்யஸ், லேடி முராஸிக்கி, செர்வான்டீஸ், திருவள்ளுவர், இளங்கோ என்றெல்லாம் பட்டியலை நீளவும் குறுக்கவும் முடியும்.

கல்வித் துறையில் செயல்பட வேண்டுமானால் இந்த இரண்டு உலக இலக்கியப் பார்வைகளும் மிகவும் பெரியவை, பரவலானவை, சிரமமானாவை என்று கருதக் கூடும். சரித்திரங் களும் விசாலமானவை சிலஇலக்கியங்களுக்கு 1000, 2000 வருஷங் களுக்குக்கூடச் சரித்திரங்கள் இருக்கின்றன. சிகரங்கள் என்று சொன்னால் கூடக் குறைந்த பட்சமாக 300 தேறும். 500, 1000 என்றும் சேர்க்கலாம். ஆகையால் வேறு ஒரு சுலபமான பார்வை ஏற்படுத்தப் வேண்டுமென்பதற்காக ஒப்பியல் இலக்கியத் துறை என்று 1950க்குப் பிறகு பிரான்சில் தொடங்கி,ஜெர்மனிமூலமாக ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பரவிப் பின்னர் 1960க்குப் பிறகு இந்தியாவுக்கும் வந்து இருக்கிறது. பல பல்கலைக் கழகங் களில் உலக இலக்கியத்தை ஒப்பியல் இலக்கியமாகப் பார்ப்பது வழக்கத்துக்கு வந்து இருக்கிறது.

(3) உலகத்தில் ஒருமொழியில் படைக்கப்பட்ட ஒரு நூலை அந்தக்கால கட்டத்துக்கும் அந்த மொழிக்கும் அப்பாற்பட்ட நூலுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். காவியங்கள், கவிதைகள், நாடகங்கள் என்று பல துறைகளிலும், உருவம் உள்ளடக்கம் என்கிற இரண்டு விஷயங்கள் பற்றியும், ஒப்பிடுதல் சாத்தியமா கிறது. அதே போல, ஒரு காலத்தில் ஓர் இடத்தில் ஏற்பட்ட ஓர் இலக்கிய இயக்கம், வேறு இடத்தில் வேறு காலத்தில் சாத்தியமாகலாம். ஒன்றன் பாதிப்பினால் ஏற்படலாம், அல்லது வேறு சமுதாயத்தில் சுயமாகவே ஏற்படலாம். இந்த மாதிரி இயக்கங்களை ஒப்பிட்டுப் பார்க்கலாம். இரண்டு நூல்களுக்கு அப்பாலும் மூன்று, நான்கு, ஐந்து என்று நூல்களை ஒப்பிட்டுப் பார்க்கலாம். இரண்டு இயக்கங்களுக்குப் பதிலாக மூன்று, நான்கு ஐந்து இயக்கங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இதற்கும் ஓர் உலக இலக்கியப் பார்வை தேவைப் படுகிறது. இது சுலபமாகச் செய்யக் கூடியது என்பதனால், அதிகமாகப் பல்கலைக் கழகங் களில் செயல்படுகிறது என்று சொல்லலாம்.

### தேசியப் பார்வைகளும் உலக இலக்கியமும்

உலக இலக்கியப் பார்வை என்று ஒன்று தோன்றி விட்ட தனால், அதன் விளைவாகத் தேசியப் பார்வைகள் அற்று விடும் என்று ஏற்படாது. இலக்கியம் என்பது ஒரு மொழியினால் ஒருசமுதாயத்தின், பண்பாடு, பழக்க வழக்கங்கள், இவற்றினால்

விளைகிறது. ஒரு குறுகலான அளவில், சமுதாயத்தின் பார்வைகள் நூல்களைப் படைக்க அவசியமாகிறது. மரம் எத்தனை நிழல் தர விரிந்தாலும், வேர்கள் ஓரிடத்தில் நின்று தான் ஆக வேண்டும் அதுபோல உலக இலக்கியத்தில் ஒரு சிகரமாக ஒரு நூல் அமைய வேண்டுமானால் அதன் வேர்கள் ஒரு சமுதாயத்தில் ஆழமாக ஓடி இருக்க வேண்டும். முதலில் தமிழில் எழுதப்படுகிற நூல் தமிழில் சிறந்ததாகக் கருதப்பட்டால் பின்னர் தான் உலகஇலக்கியத்தில் இடம் பெற முடியும். ஆகவே இலக்கியத்தில் எந்த நூலுக்கும் பிராந்திய தேசிய மொழி அடிப்படைகள் மிகவும் அவசியமானவை. அவை இல்லாமல், உலக இலக்கிய மென்பதும் அமையாது.

சிறு மொழிகளைப் பயிலுபவர்கள் கிணற்றுத் தவளையாக இருக்கிறார்கள். பிற பண்பாடுகள், பிற பழக்க வழக்கங்கள், அவர்களுக்கு ஏற்புடையதாக இருப்பதில்லை. உலக இலக்கியப் பார்வைகளினால் நமக்கப்பாலும் மனிதர்கள் இருக்கிறார்கள், வேறு பார்வைகள் உள்ளவர்கள் வேறு பழக்க வழக்கங்கள் உள்ளவர்கள் உண்டு என்பது ஏற்பட வேண்டும். இதனால் சாதாரணமாக நூல் ஆசிரியர்களையும், நூல் வாசகர்களையும் ஓரளவுக்குப் பரந்த மனம் உள்ளவர்களாகச் செய்ய முடியும். அதனால் தேசியப் பார்வைகளுக்கு ஆழமும் அழுத்தமும் கூடுகின்றன என்று சொன்னால் அது மிகையாகாது. குறுகிய மனப்பான்மைப் போக்கு உலக இலக்கியப் பார்வையை அவசியமாக்குகிறது. தேசியப் பார்வை இதனால் கெட்டு விடாது, பழக்க வழக்கங்கள் எல்லாம் மேலெழுந்தவாரியானவை மனித குலத்தின், போக்கு அடிப்படையில் ஒன்றுதான்.

இலக்கியத்தில் எந்த நூலும் ஓர் இடத்தையும் ஒருசமுதாயத்தையும் ஒரு பண்பாட்டையும் சேர்ந்ததுதான். ஆனால் அதைத் தன் படைப்புச் சக்தியினால் உள்வாங்கிப் படைப்பவன் ஏதோ ஓர் இனத்தைச் சேர்ந்தவனானாலும் ஒரு மொழியை உபயோகிப்பவனானாலும், அவனும் ஒரு மனிதன்தான், மனித குலத்தைச் சேர்ந்தவன்தான். அதேபோல அவன் வாசகர்களும் மனிதர்கள்தான், மனித குலத்துக்குப் பொதுவாக ஓர் அடிப்படையான ஒரு சரடு ஓடுகிறது. ஒருவன் காப்பி சாப்பிடலாம்; மற்றவன் ஒட்கா சாப்பிடலாம்; மூன்றாமவன் பீர் சாப்பிடலாம்; வேறு வேறு காரியங்களைச் செய்தாலும் மூவரும் மனிதர்கள் தான்,

தேசிய இன அடிப்படைகள் இருந்தாலும், குறுகிய மனப் பான்மை கூடாது என்பதை உலக இலக்கியப் பார்வை வற்பு றுத்த வேண்டும். ஆனால் இந்த உலக இலக்கியப் பார்வை தேசிய இன மொழி அடிப்படைகளை அழித்து விடாது; ஆற்றி விடாது.

உலக இலக்கியமென்பது பல மொழி இலக்கியங்களால் ஆனது. பல இனங்களையும் பண்பாடுகளையும் அரவணைத்துக் கொண்டு ஏற்படுவது. உலக இலக்கிய அளவில் இலக்கியத் தரம்தான் முக்கியம். இந்த மொழி பல கோடி மக்களால் பேசப்படுவது என்பது முக்கியமல்ல. இந்த இனம் பலரைக் கட்டி ஆளுகின்றது என்பது முக்கியமல்ல; இலக்கிய நூல்களின் தரத்துக்கேற்ப, அந்த நூல்கள் உலக இலக்கியத் தரத்தை எட்டியதாகக் கருதப்படுகின்றன.

**சில காலங்களில்**

சில காலங்களில், சில சிறப்பான மொழிகளுக்கு, சாம் ராஜியப் போக்கினாலோ, பொருளாதார மேன்மையினாலோ, அல்லது தனிப்பட்ட அதன் இலக்கிய மேதைகளினாலோ, முக்கியத்துவம் ஏற்படுகிறது.

கிரேக்க இலக்கியம் சொல்ப காலம்—500 ஆண்டுகளுக்குக் குறைவாகவே-செயல்பட்டது. கிரேக்கர்களுக்கு ஒரு சாம்ராஜிய மும் ஏற்படவில்லை; அவர்கள் யார் மேலும் ஆதிக்கமும் செலுத்தவில்லை. ஒருவருக்கொருவர் ஒற்றுமை இல்லாமலும் இருந்தனர். அதனால் எல்லாம் பாதிக்கப்படாமல், ஹோமர், ஊஸ்கிலஸ், சோபாக்ளிஸ், யூரிபிடீஸ், அரிஸ்ட் பேன்ஸ், பிளேடோ, சாக்ரடீஸ், ஏரடோடஸ், துஸிடைடீஸ், அனாக்கிரியான், பொஃபோ, பிளேடோ, அரிஸ்டாடில் என்று பல மேதைகள் தோன்றி அந்த மொழியில் இலக்கியம் படைத் தார்கள். அந்த இலக்கியத்துக்கு ஒரு முக்கியத்துவம் உலக அளவில் உடனே ஏற்பட்டு விட்டதைக் காணமுடிகிறது. அதே போல சமஸ்கிருதம், ஹீப்ரு, சீன மொழிகளும் அதனதன் அளவில் உலக இலக்கியத்தில் பாதிப்பை ஏற்படுத்தியிருக் கின்றன.

லத்தின் மொழி ரோமாபுரி சாம்ராஜ்யத்தின் மொழியாக, பரவலாக அதன் காலத்தில் பலரிடையே பாதிப்பை ஏற்படுத் தியது. கிரேக்கத்தில் சொன்னது போல, தனிப்பட்ட பெரும் இலக்கிய மேதைகள் லத்தீன் மொழியில் இல்லை, இருந்தும் லத்தீன் மொழிப் பாதிப்பு ஐரோப்பிய மொழிகள் பலவற்றில்

ஏற்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. தங்கள் சாம்ராஜ்யத்தினால் ஆங்கிலம், ஃபிரஞ்சு, ஜெர்மன், ஸ்பேனிஷ் மொழிகள் பல இலக்கியங்களைப் பாதித்திருக்கின்றன. சில மொழிகள் ஹீப்ரு, சமஸ்கிருதம், அரபி போல மதவிஷயமாகவும் பாதிப்பை ஏற்படுத்தி இருக்கின்றன.

இடைக்காலத்தில், தமிழுக்கும் ஒரு சாம்ராஜ்யம் இருந்திருக்கிறது. ஆண்டாள் பாசுரங்கள், மாணிக்கவாசகர் திருவாசகம் போன்றவை தென்மேற்கு ஆசியப் பிரதேசங்களை எட்டிக் குறுகிய அளவில் ஒரு பாதிப்பை ஏற்படுத்தி இருக்கிறது என்று தெரிகிறது. மலேசிய, சிலோன், மோரிஸியஸ் போன்ற இடங்களிலும், தமிழ் மொழி பரவி இருப்பது தெரிகிறது.

மொத்தத்தில் வைல்டர் என்கிற அமெரிக்க இலக்கிய ஆசிரியர் சொல்லுவது போல ஹீப்ரு கிரேக்கம் சம்ஸ்கிருதம் போன்ற மொழிகளில் ஓர் உலக இலக்கிய மனப்பான்மை பொதுவாகத் தெரிய வருகிறது என்று சொல்லலாம். இங்கிலாந்து, ஜப்பான், போன்ற தீவுகளில் படைக்கப்படுகிற இலக்கியங்களுக்கும் நூல்களுக்கும் ஓர் இலக்கிய மனப்பான்மை ஏற்படுவது அருமை என்று வைல்டர் கூறுகிறார்.

மிழை உலக இலக்கிய அரங்குக்குக் கொண்டு வர

உலக இலக்கிய அரங்கில், தமிழ் தனக்குரிய ஸ்தானத்தைப் பெற என்ன செய்ய வேண்டும் என்பது கேள்வி. அதற்குப் பதில் பின்வருமாறு அமையலாம்

(1) முதலில் நமக்குள்ளேயே நமது நூல்களின் தர நிர்ணயச் சக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும். தமிழில் விமர்சனம் சித்தாந்த ரீதியில் அல்லது விமர்சனத்துக்கு விமர்சனமாக, தமிழியல் துறைகள் அளவில், வளர்ந்தால் போதாது, படிப்பு அளவில் நூல்களின் தரத்தை நிர்ணயிக்கத் தக்க மாதிரியாக இலக்கிய விமர்சனம் வளர வேண்டும்.

(2) நம்முடைய இலக்கியச் சரித்திரம் பற்றி நமக்கு ஒரு தீர்மானமான நிலை ஏற்படவேண்டும். காலங்கள் தெளிவாக வேண்டும்.

(3) இலக்கியம் வெறும் கல்லூரிப் பாடமாக இல்லாமல் மக்கள் இல்லங்களிலும் வியாபித்து, அவர்களின் தினசரி வாழ்க்கையில் இடம் பெற வேண்டும்.

(4) பழசு புதுசு, அதாவது சங்க இலக்கியத்திலிருந்து இன்றைய சிறுகதை, புதுக்கவிதை வரையில் எல்லாவற்றிலும் பலதரப்பட்ட தொகுப்பு நூல்கள் வெளிவர வேண்டும்.

(5) தமிழர்களிடையே தரம் தெரிந்து, நல்லது கெட்டது எது என்று தெளிந்து நல்லது அல்லாததைப் பற்றி அதிகம் பேசும் பழக்கம் போக வேண்டும். இன்று பேராசிரியர்கள், பண்டிதர்கள் இலக்கியம் அல்லாததையே பெரும்பாலும் போற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

(6) நல்ல இலக்கியத் தரமான மொழி பெயர்ப்புகள் தமிழிலிருந்து ஆங்கில மொழி போன்ற உலகம் பூராவும் தெரிந்த ஒரு மொழியில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்.

(7) உலக இலக்கியத் தரம் தமிழர்களுக்குத் தெரிவதற்காக ஒரு திட்டமிட்ட அளவில் உலக இலக்கியச் சிகரங்கள் என்று சொல்லக்கூடிய நூல்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்.

**உலக இலக்கியத் தரம் தமிழர்களுக்குத் தெரிய வர**

(1) பல வெளிநாட்டு நூல்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட வேண்டும். தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு இவை தேவை என்று திட்டமிட்டுப் பல நூல்கள் கிடைக்கச் செய்ய வேண்டும்.

(2) உலக இலக்கிய நூல்கள் பற்றிய விமர்சனமும் சரித்திரமும் தமிழர்களுக்கு எடுத்துச் சொல்லப்பட வேண்டும்.

(3) உலக இலக்கியத் தளத்தில் சிறந்தவை எவை எவை என்பதைப் பற்றி ஒரு பரவலான அறிவு தமிழர்களிடையே ஏற்படவேண்டும்.

பொதுவாக மொழி பெயர்ப்புகள் அவசியம் இல்லை என்று ஒரு நினைப்புத் தமிழர்களிடையே, இப்போது பரவி இருக்கிறது. அதை மாற்ற வேண்டும். இலக்கிய வளர்ச்சிக்கும் உலக இலக்கிய அறிவு பரவுவதற்கும், மொழி பெயர்ப்புகள் மிகமிக அவசியம். மொழி பெயர்ப்புத் துறையில் செய்ய வேண்டியது நிறையவே இருக்கிறது.

# 5

## உலக இலக்கியச் சிகரங்கள்

(இதை ஒரு முழுமையான பட்டியல் என்று கொள்ளக் கூடாது)

நாம் தமிழர்கள் என்பதனால் தமிழில் பல நூல்களையும் இந்தியர்கள் என்பதனால் இந்தியாவின் பல நூல்களையும், ஆசியாவைச் சேர்ந்தவர் களென்பதினால் ஆசியாவின் நூல்கள் பலவற்றையும், ஐரோப்பிய அமெரிக்க இலக்கியம் இந்தக் கால கட்டத்தில் முக்கியமென்பதினால் ஐரோப்பிய அமெரிக்க நூல்கள் பலவற்றையும் இந்தப் பட்டியலில் சேர்த்திருக்கிறேன். வேறு விதமாகவும் பட்டியல் போட முடியும், என்னுடைய பட்டியல்தான் முடிவானது என்பதில்லை!

### தமிழ் நூல்கள்

திருவள்ளுவர், திருக்குறள்
சங்க இலக்கியக் கவிதைகள், 5000, 6000 வரிகள்
மாணிக்கவாசகர், திருவாசகம்
திருமந்திரத்தில் சில பகுதிகள்
காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதி
ஆழ்வாராதிகளில் ஒரு தொகுப்பு
சைவத் திருமுறைகளில் ஒரு தொகுப்பு
ஆண்டாள் பாசுரங்கள்
முத்தொள்ளாயிரம்
இளங்கோ - சிலப்பதிகாரம்
கம்ப ராமாயணம் (பகுதி)

சித்தர் பாடல்கள்—ஒரு தொகுப்பு
தனிப் பாடல்கள்—ஒரு தொகுப்பு
தாயுமானவர்—சில பாடல்கள்
ஜோதி ராமலிங்கம்—சில பாடல்கள்
வேதநாயகம் பிள்ளை—பிரதாப முதலியார்
ராஜம் ஐயர்—கமலாம்பாள்
சுப்ரமணிய பாரதி வசனமும் கவிதையும் ஒரு தொகுப்பு
புதுமைப்பித்தன்—15 கதைகள்
தமிழ்ச் சிறுகதைகள்—ஒரு தொகுப்பு
ஒரு வசன நூல் திரட்டு
ஆர். ஷண்முக சுந்தரம்—நாகம்மாள்
க. நா. சுப்பிரமணியம்—பொய்த்தேவு
தி. ஜானகிராமன் மோக முள்
நா. சிதம்பர சுப்ரமணியன் இதய நாதம்
அசோக மித்திரன் 18வது அட்சக்கோடு
சா. கந்தசாமி அவனானது
நகுலன் நினைவுப்பாதை
நாஞ்சில் நாடன் மிதவை
புதுக்கவிதை ஒரு தொகுப்பு
திறனாய்வுக் கட்டுரைகள் ஒரு தொகுப்பு
உ. வே. சுவாமிநாத ஐயர், ஒரு கட்டுரைத் தொகுப்பு
திரு. வி. க.
நாமக்கல் இராமலிங்கர், என்கதை
மரபுக் கவிதைகள் ஒரு தொகுப்பு
இ. எஸ். எஸ். ராஜன், நினைவு அலைகள்

## இந்திய நூல்கள்

உபனிஷத்துக்கள்—ஒரு தொகுப்பு
தம்ம பதம், அக்கினிப்பிரசங்கம்
அசுவகோஸர் புத்த சரிதம்
வால்மீகி இராமாயணம்
மகாபாரதம் ஒரு சுருக்கம்
காளிதாசன் சாகுந்தலம்
காளிதாசன் குமார சம்பவம்
சூத்ரக; மிருஸ்சகடிகம்
சம்ஸ்கிருதச் சிறு கவிதைகளில் ஒரு தொகுப்பு
பிராக்ருதக் கவிதைகளில் ஒரு தொகுப்பு
கதாசரித்ர சாதகம்

விக்கிரமாதித்தன் சரித்திரம்
அலங்கார சாஸ்திரம் துவண்யாலோக வக்ரோத்தி ஒரு தொகுப்பு
பிரேம்சந்த் கோதான்
பிரேம்சந்த் சிறுகதைகள் ஒரு தொகுப்பு
அக்ஞேய; சிறுகதைகள் ஒரு தொகுப்பு
ரவீந்திரநாதத் தாகூர் சிறுகதைகள் ஒரு தொகுப்பு
ரவீந்திரநாதத் நாடகங்கள் ஒரு தொகுப்பு
பங்க்கிம்; கபால குண்டகா
விபூதி பூஷன் பபேர் பாஞ்சாலி
மாணிக் பந்தோப் பார்த்தேயா; பொம்மலாட்டம்
வங்கச் சிறுகதைகள் ஒரு தொகுப்பு
S. N. பென்சே; முரடன் பாபு
ஃபசிர்மோகன் ஸேனாபதி: புள்ளி எட்டு
வீரேந்திர குமார் பட்டாச்சாரியா மிருத்தியஞ்ஜெய
பக்ஷிர் மூன்று சிறு நாவல்கள்
மாஸ்தி சிறுகதைகள்
காரந்த் மண்மனம்
பல இந்திய மொழிகளிலிருந்து ஒரு சிறுகதைத் தொகுப்பு
இந்தியப் புதுக் கவிதைகள் ஒரு தொகுப்பு
இந்தியக் கவிதைகள் ஒரு தொகுப்பு
இந்தியக் கட்டுரைகள் ஒரு தொகுப்பு

## ஆசிய நூல்கள்

பிர்தவுஸி ஷாநாமா
ஹாபிஸ் சிந்தனைகள்
சாதி குலிஸ்தாஸ்
சூபிக் கதைகள்
அரபிக் கதைகள்
கன்ஃபூஸியஸ்—தொகுப்பு
லாவ்ஸே—டாவ்
ஜென் கதைகள்
லேடி முராஸக்கி ஜெஞ்சிக் கதைகள்
நவீன ஜப்பானியர் சிறுகதைகள் ஒரு தொகுப்பு
சுஸாகோ என்டோ! அதிசய முட்டா
நவீன சீனக் கதைகள்
லீபோ கவிதைகள்
டூபு கவிதைகள்

ஒரு ஜப்பானியக் கவிதைத் தொகுப்பு
ஒரு சீனக் கவிதைத் தொகுப்பு
குரங்கு சீன நாவல்
ஆசியச் சிறுகதைகள்—ஒரு தொகுப்பு
ஆசியக் கவிதைகள்—ஒரு தொகுப்பு

ஐரோப்பிய அமெரிக்க நூல்கள்

ஹோமர் இரண்டு காவியங்கள்—இலியாது, ஒடிஸி,
ஏஷ்கிலஸ்—சோக நாடகங்கள்
சோபாகிலிஸ் சோக நாடகங்கள்
யூரிபிடீஸ் நாடகங்கள்
அரிஸ்டபேன்ஸ் நாடகங்கள்
பிளேடோ ஒரு ரிப்பப்லிக் சில தொகுப்புகள்
சாக்ரடீஸ் சில சம்பாஷணைகள்
கிரேக்கக் கவிதைகள் ஒரு தொகுப்பு
புளூடார்க் ஜீவிய சரித்திரங்கள் சில
அரிஸ்டாட்டில் பெயட்டிக்ஸ், ஈதிக்ஸ்
மார்க்கஸ் அரேலியஸ் ஆத்ம சிந்தனை
வர்ஜில் ஏனியர்
லத்தீன் புதுக்கவிதைகள், ஒரு தொகுப்பு
டால்டே தேவ ஜீவனம்
பொக்கேச்ஸியோ டெக்கேமரான்
ஸர்வேன்டீஸ் டான் க்விகோட்டே
ஷேக்ஷ்பியர் நாடகங்கள் (20 வரையில்)
மோலியர் நாடகங்கள்—சில
மான்டேன் கட்டுரைகள் சில
டாஸ்டாவ்வஸ்கி கரமஸாக் (சகோதரர்கள்)
டால்ஸ்டாய் அன்னாக் கரினா
பால்ஸாக் தகப்பன் கோரியோ
ஸ்டென்தால் சிவப்பும் கருப்பும்
லேகர் லெவ் கெஸ்டா பெர்லிங்
லேகர் க்விஸ்ட் பாரபாஸ்
நட் ஹேம்ஸன் நிலவளம்
லாரன்ஸ் ஸ்டேர்ன் டிரிஸ்ரம் ஷாண்டி
ஸ்விப்ட் கல்லிவர் டிராவெல்ஸ்
ஜார்ஜ் எலியட் மிடில் மார்ச்
ஜேன் ஆஸ்டன் எம்மா
கர்ணல்டி டிக்கன்ஸ் டேவிடு காப்பர் பீல்டு

மார்ஸல் புரூஸ்ட் நினைவுகள்
ஜேம்ஸ் ஜாய்ஸ் யுலீஸியஸ்
காப்கா கதைகள் ஒரு தொகுப்பு
தாமஸ்மன் ஜோசப்பும் அவன் சகோதரர்களும்
ஐரோப்பிய மொழிகளில் ஒரு சிறுகதைத் தொகுப்பு
ஐரோப்பிய மொழிகளில் நவீன கவிதைத் தொகுப்புகள்
வால்ட் விட்மென் புள்ளின் இதழ்கள்
எமர்ஸன் கட்டுரைகள்
மெல்வில் மோபிடிக்
வையில்டர்ஸேண்லான்லீயீஸ்ரே பாளம்
மார்க்குவஸ் ஒரு நூறாண்டுத் தன்மை
போர்ஹஸ் சிறுகதைகள்
மோபாஸான் சிறுகதைகள்
பிளோபேர் மேடம் பௌரி
செக்கோவ் சிறுகதைகள்
செக்கோவ் நாடகங்கள்
ஹென்றிக் இப்ஸன் சில நாடகங்கள்
ஸ்டிரிண்ட் பேர்க் சில நாடகங்கள்
மேக்ஸிம் கார்க்கி சிறுகதைகள் தொகுப்பு
ரீல்கே (கவிதைகள்)
லோர்கா (கவிதைகள்)
எலியட் (கவிதையும் விமர்சனமும்)
டபுள்யூபீ லேட்ஸ்-கவிதைகள்
போல்வெலரி (கவிதைகள்)
ரெனேச்சார் (கவிதைகள்)

ஐரோப்பிய, ஆங்கில, விமர்சனக் கட்டுரைகள் ஒரு தொகுப்பு கார்ளல் லேம்ப் கட்டுரைகள் ஒரு தொகுப்பு, ஆர். எஸ். எஸ் கட்டுரைகள் ஒரு தொகுப்பு

சிறியதும் பெரியதுமாகச் சுமார் 150 நூல்கள் இந்தப் பட்டியலில் இருக்கின்றன. இதை நூறு என்று குறைத்துக் கொள்ளலாம். அதற்கு மேல் குறைக்கக் கூடாது. முந்நூறு அளவிற்குப் புதுசு புதுசாகச் சேர்த்துக் கொண்டும் போகலாம். உலகத்தின் புராணக் கதைகள் எல்லாம் தெரிந்திருந்தால் நல்லது. அதே போல மதச்சார்பான பல நூல்கள் உண்டு. 300 புஸ்தகங்கள் வரையில் 60 வயது வரையில் உயிருடனிருந்தால் நிச்சயமாகப் படிக்கலாம். 20 வயது முதல் 60 வயது வரை படிக்கும் நூல்கள் சில நூறு நூல்கள் என்று கொண்டால் ஆண்டில் ஆறு ஏழு நூல்களாவது படிக்க வேண்டும். பல நூல்களை இரண்டாவது முறை படிக்கவும் ஏற்பாடு செய்து கொள்ளலாம். படிக்கின்ற நூல்களைப் பல தடவைகள் படிப்பது நல்லது.

6

# GOETHE AND WORLD LITERATURE

We come upon certain recurrent ideas distributed throughout Goethe's works and conversations to which he was continually adding new shades of meaning until they appear to us as being each a galaxy of associated meaning rather than a single definable dootrine. They never come to a rest, neither in this mind nor in their power to bewilder us, to escape us, to stimulate us, and to provoke us into a breathless effort to join in the hunt that will capture them. The greatest among these are, of course, those that deal with the nature of nature, with the role of the demonic, and with the "Shaping Force" in the universe, And among these is that of "World Literature".

When Goethe spoke of a world literature he did not mean, as we are likely to, the treasury to masterpieces of all tongues and all ages. He seems-on a number of occasions, at least-to have meant literature of all times and languages, the merely good as well as the great, in so far as it can be felt to illustrate the concept so dear to him of the unity of all mankind.

Here, in the Conversations, is a locus classicus. It is Wednesday, the 31st of January 1827. Goethe is talking to eckermann, that excellent young man. Of him Goethe wrote to Marianne Willemer-she who is in eternity Suleika.

To understand him one has merely to realize that he is a man of simple soul we at all times to stand in a pure relation to ward the world about him.

It was that purity-that absence of vanity and self-assertion, that unspotted attentivencess-that brought him a great triumph. It brought him that admirable aural memory and that self-effacing trust which enabled him to present us with one of the very great books of the world. Scholars are increasingly warning us-as they are in the cases of those other reporters of conversation, Boswell and the Evangelists-that Eckermann is not always to be trusted and that he was not above "cooking up" his material; let us not distrust, however, the evidence of our senses that from these pages, almost seven hundred of them, there emerges a frgure of overwhelming characterizing force, as uniform as it is grand. Eckermann wrote down many a saying of his friend which he did not understand and Goethe 'know that he did not understand them. These sayings are like darts that Goethe cast over Eckermann's head and which have fallen at our feet. There are many which we do not understand and which are flying over our heads to fall at the feet of generations still unborn. It is sufficient to say that we may trust the trust which Goethe reposed in Eckermann.

On this Wednesday Goethe was talking about a chinese novel he had been reading. And then the talked about the poetry of Beranger. And always, what tall! what charm! what sense!

(so much for the friends and strangers who have been waiting into inform us that this Goethe about whom we are occupying ourselves was pompous. stuffy, and egoncentric)

Indeed, (he continues) If we Germans don't start looking about outside the narrow circle of our immediate surroundings, we are apt to fall all too easily into this pedantic arrogance. I take great pleasure in looking into the works of other nations and I advise everyone to do it

also. National literature no longer means very much. The epoch of world literature is at hand and everyone must now get to work to hasten the advent of that epoch However, while extending this high appreciation to foreign works we should not bind ourselves to any particular one and regard it as the final model-whether it be the Chinese or the serbian or calderon or the Nibelungenlied. when we feel the need of model and exemplar we should always return to the ancient greeks in whose the beautiful human being is constantly presented. All the others we should regard merely historically: to the full extent we should extract the go›d that is in them and make it our own.

This epoch of world literature which in 1827 Goethe felt to be at hand-how does it appear to us now, one hundred and twenty-two years later? The years succeeding his prophecy were to produce Leopardi, Balzac, Flaunert, Ibsen, Baudelaire, Melville, and so on. Were they closer to his conception of a world literature than his admired voltaire, diderot, rousseau, byron, sir walter scott, Manzoni, schiller, and lessing?

National literature no longer means very much." As Don Jose ortegay gasset was telling us the other day. Man is the animal with the long memory and one of the contributions of the scientific activity of the last centry and a half has been to reindoce this memory and to extend it in ways that confuse the very operation of memory itself Every college student is under the impression that he remembers the days of Greece and Rome and that he was present at our Civil war. This leads to many false judgments, but at least one result of it is that modern man in aware that billions-not merely millions-have lived and died and that no description of making is adequate which does not find its proportionate place within a realization of all the diversity of life on the entire planet over a vest extent of time.

The aid which science has rendered to history and the increased facilities for communication in our time have provoked an ever more voracious apprtite for information

concerning other ways if life and ever deeper dismay at the multitude of souls who live and have lived-and also will live. This appetite grows by what it feeds on and, growing, induces an unrest, a strained self-examinations, and a dread. The mind of modern man has become a hold all of flying leaves torn from some vast encyclopedia, but these leaves are not merely items of information. Each one is variously vibrant with emotion each one may mean for us a panacea or consolation, or dire warning, or a stick to beat a dog with, or a subject for our moralizing. World literature will arrive when all this vast body of information is felt as a unity and literature is not only not national-it is planetary.

Goethe spoke too soon. Among the writers in any list one could furnish of those working since 1827, there are few who were shaken by these enlarged dimension. They may, indeed, have had a vision of the cosmos, of the magnitude and diversity of created life, but such illuminations seemed external to the segment with they had selected to explore in depth: it is not abset from Manzoni's Lombardy or Holderlin's Hellas, but it is separate.

It is now during the second quarter of the twentieth century that we are awre if tgeaooearance of a literature which assumes that the world is an indivisible unit. Its subject has become planetary life. Without attempting to make a comparision of these writes with there predecessors in respect to degrees of genius, it is possible to make a comparison in respect to fields of reference. It is not as an expression of Alexandrian wit that T.S. Eliot juxtaposes a verse from Gerard de Nerval and a Sanskrit invocation, that he frunishes a sort of cento of quotations from a dozen literatures; the defferences between languages and cultures begin to grow less marked to one who is accustomed to contemplating the unity of the human spirit. Finneqans wake of james joyce not only uses twenty languages as a sort of keyboard, but the characters themselves coalesce with multitude of persons of myth and history. The Cantos of Ezre pound require our familiarity with the civilizations which frobenius claims to have distinguished in African

prehistory, as well as a close knowledge of chinese history, the Italian Renaissance, and the economic problems of the American Revolution, Such material is not imbedded in these as work as allusion, illustration, or as ornament, it is there as ambiance, as the "nation" has been in what Goethe was calling national literature.

For better or worse, world literature is at hand. Our consciousness is begining to be planetary. A new tension has been set up between the individual and the universe. It is not new because poets and entire literatures have been lacking in the sense of the vastness of creation, but new in the response provided in the writer in relation to his own language and his own environment.

Where ub literature do we find signs of one or other aspect of this planetary consciousness? For all its xenophobia, a the Old Testament abounds in the consciousness of the human as multitude and of time as incommensurable. The Iliad precisely states its rosters in the thousands but conveys them in the millions. I do not find this sense in the Aeneid. As one reads The Divine Comedy his head reels and his heard shrinks before it. Over and over one has felt it before Dante himself exclaims. "I had not known that death had undone so many". (A phrase which T.S. Eliot calls upon in The Waste Land: an emotion scarcely to be found elsewhere in all European literature, for all its dances of death, its Oraisons Funebres, and its UrnBurials) I find it in Don Quixite, on that riad which seems to have no beginning and no end. I do not find it in Shakespeare Diversity of souls is not the same thing as multiplying of souls. I do not find it in English literature. (Can an island weller expand his imagination beyond amillion?). The mark of national literature is that the foreigner is either exotic (that is, an object of aesthetic curiosity) or symbolic (like the "noble savage" or the "noble Roman"). I do not find it in French literature, not even in pasel. Occasionally Victor Huge seems to be blowing himself up to achieve it (it is one of the advantages of exile; it may be noted that the three examples I have rhetoric. All Oriental literature is filled

with it is the predominant note in the sanskrit. It is in Tolstoi and in Gogol, THOUGH clearer in Dostoevski. It might well be expected in countries that are continent-wide. is a characteristic of classical American literature; it informs the "Catalogues" of walt Whitman it b lanches the face of Melville, and it even vibrates in the poems of Emily Dickinson, who for so many years never passed beyond her garden gate.

Though the consciousness of the multiplicity of souls is not the oniy ingredient in world literature, it is an essential one. It is often present without being accompanided by its temporal component, the realization of the deep abuss of time. No: does the presence of these realizations in itself constututi a superiority. For the present all we can say is that once a mind is aware of it, it is not possible to Un-know it.

And it is the character of the modern mind that it knows this thing. The literature that it writes must express it; that every man and woman born is felt to be in a new relation to the whole. Now every child in the street as acquiring it. It has brought more urgent questions to the "revealed" religions. So ren Kierkegaard was obsessed with it; it had a part in his proud claim that faith was even more "absurd" than we had acknowledged it to be, Is it not likely (is it not already seeming) to bear a pressure on ethics and morals? In the light of it we can r ead Shakespeare and he can sustain it. Moliere can sustain it. Can Ibeen?can Balzac?

Generally speaking, could national literature ever know this thing? Could the imagination in these walled countries imagine (and with a frisson) the existence of more than a hundred thousand souid? Over one's wall and beyond one's channel dwelt those others the ridiculous foreigners, the barbarians, despised, or dreaded or fantastically admired, As we read European literure the very names for other nationals have a derisive sound. "i Tedescbi" "los Franceses," die Englander", the Amarican. Derision is remote from awe.

It is characteristic of Goethe that he opened our eyes to this coming world literature. In his nature, the scientist and the poet had long stood in close relation. Examining under his microscope the structure of vertebrates and plants, he had long been accustomed to the million of years required for an alteration in the species; delighting in the literatures of other countrues, he had found ever new fonfimation of his deepest belief in the unity of human minds.

He did not shrink from anachronism. He married Faust to Helena, he super imposed Weimer upon Shiraz, the city of the Persi poets. But for him world literature did not mean theelinination of local, of national and racial characteristics, a watering-down of specific detail. Goethe-like all eye-natures rejoiced in the specific and the individual. Our diversity remains, as it remain in nature where ni treem ni valley, and no eye is ever identical with another. Only the relation between one thing and another (as that relation exists in our minds) is changed and it is in the light of that change that he says; National literure no longer means very much.

It is not a new thing that man is frightened as he views himself in the immensity of the universe. Scence has merely made that immensity more palpable. The distance between the stars was always thought to be immense, but it is only recently that a measure has been named to record it; they talk of liah-years. As the realization of these dimensions began to dawn in Europe in the last century, expressions of this fright made their appearance in literature.

Kierkegaard did not hesitate to cry out his fright, and from his fright he made his magnificent "leap" into confidence. That leap, however, isinimitable, it is not available to everyone, the though he claims that the leap is precisely the continuation, the logical product, of the dread. At all events, his remoreslessly honest description of his fright is one of the greatest contributions of the nineteenth century.

Nietzsche was frightened. Fright struck from him a veritable aurora borealis of brilliant defenses and ferti'e

suggestions, but his principal bulwark against these alarms appears to us more and more meretricious.

Carlyle and Emerson and Browning return again and again to the threat ;to identity under the glacial tracts of time and space, but it is precisely because they do net seme to be sufficiently frightened a that their woeks donot seem to "prepare the coming of a world literature".

Goethe was not frightened, It can almost be said that Goethe derived his confidence from gazing deep into the very matters that awoke in others.

At first glance the theory which he erected as a bulwark seems to be not unlike the vague pantheisms that flourished at the margins of American Unisianism. Goethe took much from spinoza but invested his God-in Nature wirh so specific a function that spinoza's share is scareely recognizable. His attitude to the christian tradition is alternately respectful and hostile. He had told us that he viewed many aspects of God as representated in the Old Testament with revulsion and certain representations of divine operation in the New Testament as "blasphemies against God and Hid revelation of Himself in Nature."

From the heard of the universe, he declared, there pours out a stream of energy ceaselessly operative. This energy presses on all things; its action is to mold chaos into significant form.

This is the doctrine of Gestaltung. No one will realize that the highest and unique operation of Nature and Art is Gestaltung and that the Gestalt is the requirement that, under the laws of orders, each thing may become, may be and may remain an individual and significant entity.

This law he had seen in the microscope; he had seen it in history in art, and most of all in his own life-this urging on of the random and the incoherent toward a meaningful shape.

The shapes toward which all things tend are not determined in advance. (Goethe held many reservations against plato) This Wirkende-achieving force is ewig-it will never come to an end. Our becoming, our striving, Faust's striving, is pulled as it were throught the iron gates of necessity, chance hope, and love, and the puzzling contrary onstacles set by the demonic, but the pattern toward which her move is not determined in advance. The world and each one of us in it are the collaborators on our ultimate form ("ultimate itself only applicable to a stage, since the operation is eternal)

This ewig wirkende views all this activity with a sort of remote and genial beniqnancy. In some passages of Goethe our Nature-God glows with love, but the love which exidits in Goethe's concept of nature is of another thought world than that which is radical in Christian doctrine.

The Ewig Wrkende has no tears, It does not hear our supplications, It does not grieve over our mistake. The whole erring planet may go up in smoke but the ewig wirkende will continue gloriously, joyouslly pressing chaos into new significant forms. It has enough material in hand, it has enough time at its disposal, it is the and it is eternal.

There is however another factor. This God-in-Nature wishes us well -you and me and all artists and all species of animals and plants, it wishes us to develop into ever more excellent states, but-

But-We cannot be sure that it will-as it were-connect with us as we could wish. It is capricious. It does not necessarily reward our merits of hard work or our longing.

All we can do is to work, to wait, and to hope-and perhaps be passed over.

Because nature is also playing, There is these demonic forces lurking about its action. Play is a by-product of joyous creativity. It interrupts and impedes and equalized benefient operation of this force.

Yet Goethe was not afraid. He did not feel himself outside of nature. He was not at war with what is. But Goethe was, above all, a poet, And for this idea let us listen to him speaking as a poet. It is a passage from "Die Natiirliche Tochter".

(Yes, Yes the Eternally fashioning principle, in ways
Incomperhensible to us, moves this or that,
As though at random, to our benefit,
To taking counsel, to arriving at decision, to achievement,
And we are, as it were born carried on to our goal,
To feel this the highest happiness there is,
Not to demand it is our humble duty,
And to await it expectantly is sweet consolation in sorrow.)

"And ti awaid it expectantly is sweet consolation in sorrow". What do we do while we await it? We Work. We are nature and productivity and fertility are the first law of nature.

What di we work at? There the life of Goethe helps us as much as the waitings-through Faust rings wide the conviction that Wirken-effective action-alone reconciles us to life and leads us into the sense of the onenses of all exioting.

So many People think Goethe moved only among great abstractions. No-what respect he had foriners and shoemakers, for mothers bringing up their children, for the beautiful girl in the first Wilbelm Meister, who knew all about agriculture and arobriculture. All in Goethe is energy and activity. He write ti schiller.

Anything that merely adds to my information without augmenting my productivity or communicating an immediate vital impulse I find odious.

It was from such sources as these that it came about that Goethe was not frightened. There are many ways of not being frightened by death, but Goethe's way was very characteristic of him.

Again he is talking-and now you are to imagine him as very, very old.

If I remain ceaselessly active to the end of my days nature is under an obligation to allot me another form of existence, when the present one is no longer capable of containing my spirit......... I do not doubt the continuance of our existence. Mayit then be that he who is eternally living will not refuse us new form of activity, analogo to those in which we have been tested.

One of these things we're to woek for, he tells us, is the advent of world literature. Well, in one sense, it's heJe-it's here with a vengeance. But the other qualifications of a world literature are struggling to be born.

To anyone but Goethe the provision, of a world, a planetary literature would have frightening implications. I think it did not even occur to him to be frightened. He had long since made his peace with nature. He had found his place among two hundred thousand billion and had accepted his moment in uncountable light-years.

And if it meant that he had shrunk, shrunk, shrunk, it also means that the he had not a shrunk into anything foreign to him, or histile to him-he had merely taken his place in the thing he had imitated all his life-the ewig wirkende.

பின்னிணைப்பு

# சிறப்புப் பெயர்களும் அவற்றிற்கான விளக்கங்களும்

பாரதியார்

1. எட்டயபுரத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட தமிழ்க் கவிஞர்.
2. தமிழ் இலக்கியத் துறைகளில் பல புது முயற்சிகளை மேற்கொண்டவர்.
3. விடுதலைக் கவிஞர், சுதந்திரப் போராட்ட வீரர்.

சாகித்ய அகாடமி (Shahitya Acadamy)

1. இது ஓர் இந்தியத் தேசிய இலக்கிய அமைப்பு.
2. இந்தியாவின் தலைநகரமான புதுடில்லியைத் தலைமையிடமாகக் கொண்டுள்ளது.
3. ஒவ்வொரு மாநிலத்தின் (மொழிவழி) சிறந்த இலக்கியங்களை ஏனைய இந்திய மொழிகளில் மொழிபெயர்ப்புச் செய்து அறிமுகப்படுத்துகிறது.

வெர்ரியர் எல்வின்

1. மேலை நாட்டுக்காரர்.
2. இந்திய மொழிகளைப் பற்றி ஆராய்ந்த மானுடவியல் அறிஞர்.
3. இந்தியாவில் வழக்கிறந்த மொழிகளைப் பற்றியும், அம்மொழிகளில் வழங்கப்பட்டு வந்த இலக்கியங்களைப் பற்றியும் ஆய்ந்தவர்.

**சமஸ்கிருதம் (Sanskrit)**

1. இந்தோ ஐரோப்பிய மொழி.
2. பேச்சு மொழியாக இல்லாமல் பெரும்பாலும் இலக்கிய மொழியாகவே இருந்துள்ளது.
3. ஏனைய இந்திய மொழிகளில் இம்மொழியின் தாக்கம் அதிகம்.
4. கி.மு. 1200-ஆண்டுகளுக்கு முன்பிருந்து இலக்கிய மொழியாக வந்துள்ளது.

**முகலாயர்**

1. உலகின் ஒரு தனிப்பட்ட மதத்தினர்.
2. உருது, அரபி, பர்சிய மொழிகளைப் பேச்சு மொழிகளாகக் கொண்டவர்கள்.
3. இந்தியா, ஏறத்தாழ 300 ஆண்டுகள் இவர்களின் ஆதிக்கத்தில் இருந்தது.

**சரபோஜி மன்னர்**

1. தஞ்சை மராட்டிய மரபில் வந்து, தஞ்சையில் அரசாட்சி செய்தவர்.
2. சரசுவதி மகால் என்ற பெயரில் ஏராளமான நூல்கள் அடங்கிய நூலகத்தைத் தஞ்சையில் அமைத்தவர்.
3. முதன்முதலில் ஆங்கிலத்தில் கவிதை எழுதிய இந்தியர் (ப. 2.)

**ஐரோப்பிய மொழிகள் (Europian languages)**

1. ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், ருஷ்யா, இத்தாலியன், இஸ்பானியன், போர்ச்சுக்கீசியன், ஸ்காண்டிநோவியன், ப்ளமிஷ், மாக்கிடோனியன் ஆகிய மொழிகள் இப்பிரிவில் அடங்கும்.
2. இவைகளில், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மொழிகள் ஆட்சி காரணமாக உலகில் பரவியவை.

**காமன்வெல்த் லிட்ரேச்சர் (Common wealth Literature)**

1. இங்கிலாந்தைத் தவிர மற்ற இடங்களில் படைக்கப் படும் இலக்கியங்களுக்குப் பெயர்.
2. இந்தியாவில் பல பல்கலைக் கழகங்களில் மேல்நிலைப் படிப்பிற்கு உகயதாக உள்ளது.

**கதே** (Goethe)

1. ஜெர்மானியர்.
2. உலக இலக்கியம் என்ற சொல்லை முதன்முதலில் பயன் படுத்தியவர்.
3. உலக இலக்கியவாதி.

**பிரெஞ்சுப் புரட்சி** (French Revolution)

1. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற கொள்கைகளை முன்வைத்தது.
2. 1789 இல் பிரான்சில் ஏற்பட்ட புரட்சி, உலகின் பல்வேறு நாடுகளையும் விழிப்புணர்வு செய்யத் தூண்டியது.

**கில்காமெஷ்** (Gilkamesh)

1. அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட ஆதி காவியம்.
2. கி.மு. 2500 அல்லது 3000 ஆண்டில் வழக்கில் இருந்தது.
3. க்யூனிஃபார்ம் என்கிற முக்கோணவடிவப் பாபிலோன் எழுத்தில் மலைக்குகைகளில் எழுதப்பட்டுள்ளது.

**ஹோமர்** (Homer)

1. கி.மு. 8-ஆம் நூற்றாண்டுக் கிரேக்க நாட்டுக் காவிய ஆசிரியர்.
2. இவர் எழுதிய இலியட், ஒடிசி என்ற காப்பியங்கள் உலகப்புகழ் பெற்றவை.

**அரிஸ்டாட்டில்** (Aristotle)

1. கிரேக்கத் தத்துவ ஞானி.
2. நாடக இலக்கணத் தந்தை.
3. வரலாற்றியல் மேதை.

**பரதமுனிவர்**

1. சமஸ்கிருத இலக்கிய விமர்சனத் தந்தை.
2. நாட்டிய சாஸ்திரம் என்ற நூலின் ஆசிரியர்.
3. நாடகத்தில் இடம் பெறும் மெய்ப்பாடுகள் குறித்து விரிவாக எழுதியவர்.

**காளிதாஸன்** (Kalidasan)

1. இந்திய நாடக ஆசிரியர்.

2. சாகுந்தலம், குமாரசம்பவம், இரகுவம்சம் என்ற நாடகங்களின் ஆசிரியர்.

**ஷேக்ஸ்பியர் (Seakespeare)**

1. ஆங்கில இலக்கியமேதை.
2. கவிதை, நாடகத்துறையில் வல்லவர்.
3. இவரின் தாக்கம் உலகக் கவிஞர் பலரிடமும் காணப்படுகிறது.

**சுந்தரம்பிள்ளை**

1. தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடியவர்.
2. தமிழ் நாடக ஆசிரியர்.
3. இவர் எழுதிய மனோன்மணியம் சிறந்த நாடக நூல்.

**ரோமன் ரோலந்து (Roman Roland)**

1. பிரெஞ்சு நாட்டினர்.
2. உலகக் கவனத்தைக் கவரத்தக்க வகையில் கட்டுரைகள் எழுதியவர்.
2. இராமகிருஷ்ணர், விவேகானந்தர், காந்தி ஆகியோரைப் பற்றி இவர் கட்டுரை எழுதியுள்ளார்.

**கன்ஃபூசியஸ் (Con-fu-cius)**

1. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் உலகெங்கிலும் சிந்தனைப் புரட்சியை ஏற்படுத்திய சீன அறிஞர்.
2. இவரின் உபதேசங்கள் 'Analects' என்ற நூலில் இடம் பெற்றுள்ளன.

**சாக்ரட்டீஸ்**

1. கிரேக்கத் தத்துவ ஞானி.
2. சாக்ரட்டீஸ் என்ற அஸ்திவாரம் இல்லாவிட்டால், ஐரோப்பிய இலக்கியம், தத்துவம், விஞ்ஞானம் என்றெல்லாம் கிடையாது என்று சொல்கிற அளவிற்கு முக்கியமானவர்.
3. 'எனக்குத் தெரியவில்லை நீ சொல்லு' என்று விவாத ரீதியில் எதிராளியையே மடக்கும் பண்பினர்.

**புதுமைப்பித்தன்**

1. தமிழ்ச் சிறுகதை ஆசிரியர்.
2. சிறுகதை உலகில் பல புதுமைகளைச் செய்தவர்.
3. எட்கர் ஆலன் போவுக்கும் இவருக்கும் மிகவும் ஒற்றுமையுண்டு.

லியோ டால்ஸ்டாய் (Leo Talstoy)

1. உலகின் மிகச்சிறந்த நாவலாசிரியர்.
2. 'போரும் அமைதியும்' என்ற இவர் நாவல் உலகப் பிரசித்தி பெற்றது.

# பொருளடைவு

எண்—பக்க எண்

